உ

ஸ்ரீசற்குருவேநம

# வாசுதேவமனனம்

என்றுவழங்குகிற

# விவேகசாரம்

இஃது

வசனரூபமாய்

சகலவேதாந்த சாஸ்திரார்த்தங்களு மடங்கியிருக்கின்

றமையால் முமுட்சுகளிற் கற்றவர்களன்றி

மற்றவர்களும் எளிதிலறிந்து

மோட்சானந்தத்தைப்

பெறும்படியான உபகாரார்த்தத்தை கருதி

சேலஞ்சில்லா சிவில்கோர்ட்டு-வக்கீல்

ம-ள-ள-ஸ்ரீ,

## அப்பாசுவாமி பிள்ளையவர்கள்

எவ்வகையுத்தரங்களாக்கிப் பிழையறப் பரிசோதித்து

அச்சிட்டுத் தரவேணுமென்று கேட்டுக்கொண்டபடி

சிந்தாதிரிப்பேட்டை

நாராயணசாமிமுதலியார் பிரதிக்கினைப்படி

தக்கோலம்,

## இராமசாமி நாயுடு

அவர்களால்-தமது சென்னை குமோ

ஸ்ரீலட்சுமிநாராயணவிலாச அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டன,

1895.

தொலைவில்விண்ணைத்திமணிமுனைவத்துகடுப்ப
நன்னூலுமாற்றுணையவடமறிந்துறைந்த
வெண்ணாவலாவியுமயக்கூர்சிலைகளுந்
செல்லூர்பொழிலுஞ்செறிந்தாரூழ்தருமெழிற்
பல்லூர்புகழ்திருப்பாரிப்பாக்கத்
தருந்தியுற்றுறைபவனமலயிக்குயர்ந்திடு
திருத்தருத்தியில்வருதேசிகனுங்கர
பாத்திரனடியிணைபழிச்சிடுமெழிறத
தாத்திரயன்பதமன்பொடுபரவுஞ்
செங்கமலன்றூடிருமுடிபுனைந்த
வங்கணனுமைகவாழருணசலனுங்
குரவனாருள்பெறீஇக்குலவுவாசிட்டம்
வானுற்றிலங்குநைகவல்லியமுதனூற்
செழிதுரைவிரித்தவினைமதிதவழும்
பொழிலுடுத்தொளிரும்புனிதகாஞ்சிநகரம்
பிறைசைவாழருணசலனடிபெட்புறு
முறையுளத்திருத்திமும்மைமலன்கழிய
வாய்ஞானாருமுகத்துறிகண்மூன்றற்ற
மெய்திகழ்பிரமவேலையிற்படிந்தாழ்ந்
தவ்வனுபூதியினூனகனைந்து
மவ்வுருவெனக்கண்டகமகிழ்வுறவோ
ருசதிர்சாத்திரமாறனுட்டலையாப்
பேசுவேதாந்தப்பெருக்கமுற்றுணர்ந்தோன்
மையலார்மனத்தவாதிவிரேளங்க,
னையகமெங்கணுமெய்யிசைவிளங்கத்தோன்
றன்னுயிரென்னமன்னுயிர்க்கெல்லா
மின்னருள்சுரக்கும்பன்னருங்கருணைய
ளையவிதியடையவுமறப்புள்ளவர்க
கவலிதிசமழ்ப்பகல்கருட்கொடையிரேறன்
குணியப்புலப்படைகடிந்த
முனியப்பசாமமுதலெபருந்தவனே

முற்றும்.

இ. ஆ. காஞ்சீபுரம் - இராமசாமிநாயகர் இயற்றியது.





ஸ்ரீசற்குருவேநம.

—(*)—

# வாசுதேவமனனம்.

என்றுவழங்குகிற

## விவேகசாரம்.

அவதாரிகை.

ஸ்ரீ அகண்டபரிபூரண சச்சிதானந்தசொரூபமாகிய ஸ்ரீவாசுதேவயோகீந்திரர் தமதுசுவானுபூதிப்பிரத்தியக்ஷத்தை உலகமனைவரிதிலடைந்து ஆனந்தாதிசமாகும்பொருட்டுக் காருண்யத்தினாற் றிருவுளங்கொண்டு வடமொழியில் நாற்பத்தைந்து சுலோகமாய்த் திருவாய்மலர்ந்தருளிய விவேகசார கிரந்தார்த்தத்தைத் தமிழில் மொழிபெயர்த்து நாற்பத்தைந்து பிரகரணமாகத் தொகுத்து அத்தியாரோப அபவாதயுக்திகளினாலன்றிப் பிரமசொரூபத்தையறியக்கூடாதென்று சகலவேதாந்தசாஸ்திரங்களுஞ் சொல்லுகின்ற முறைமைப்படி. முந்தி அத்தியாரோபநிரூபகப் பிரகரணத்தைச் சொல்லுகின்றார்,

முதலாவது.

### அத்தியாரோபநிரூபகம்.

———[*]———

சங்கை - சுருதியாதிகளிற் சொல்லுகின்ற அத்தியாரோப யுக்தியாவதேதென்னில்

உத்தரம் - ஒருவஸ்துவினிடத்தி லன்னியவஸ்துவாய்த்தோன்றுகிறது.

ச-கை- அஃதெப்படியென்னில்

உ-ம் இருஷ்டாந்தத்தில் கிளிஞ்சலினிடத்தில் வெள்ளியும்-பழுதையினிடத்திற் பாம்பும் கட்டையினிடத்திற் கள்ளனுங்கானலினிடத்திற் றண்ணீரும் ஆகாயத்தினிடத்திற் கறுப்பும்-எப்படியாரோபிக்கிறதோ - அப்படிபோல-தார்ஷ்டாந்தத்திலும் நிஷ்பிரபஞ்ச சொரூபமாகிய-ஆத்மாவினிடத்தில் பிரபஞ்சமாரோபித்ததே-அத்தியாரோபம்.

ச-கை- அது எதினால் வந்ததென்னில்.

உ-ம், அதிஷ்டானருடைய அஞ்ஞானத்தினால்வந்தது-அதன்சொரூபத்தைப் பின்னால் விஸ்தாரமாகச் சொல்லுகிறோம் - இப்போது சங்க்ஷேபமாகச் சொல்லுகிறோம்,

ச-கை, அஃதெப்படியெனில்.

உ-ம். ஒரு அஞ்ஞானமே பிரகிருதியென்றும் மாயையென்றும் அவித்தையென்றும்-தமசென்றும்-அனேகவிதமாகச் சொல்லப்படும்.

ச-கை. இதனிற்பிரகிருதி யாவதேதென்னில்.

உ-ம். குணங்களுடைய சாமானியாவஸ்தைகளுக்குப் பிரகிருதியென்றும் - பிரளயாவஸ்தையென்றும் - மகாசுழுத்தியவஸ்தையென்றுஞ் சொல்லப்படும்.

ச-கை. அஃதெப்படியென்னில்.

உ-ம். வெள்ளைநூலுஞ் சிவப்புநூலும் கறுப்புநூலும் ஒன்றாய் முறுக்கினாலெப்படியிருக்குமோ அப்படிபோல இந்தப்பிரகிருதியில் அனேககோடி ஜீவராசிகள் தங்களுடையகர்மமும்வாசனைகளுமாகிய பலத்துடனேகூடிப் பொருந்தியிருப்பார்கள்.

ச-கை. இதற்குத்திருஷ்டாந்த மெப்படியென்னில்

உ-ம். மெழுகுண்டையில் நவலோகரணைக ளெப்படி லீனப்பட்டிருக்குமோ அப்படிபோல பிரகிருதியில் லீனமாயிருக்கிறார்கள்.

ச-கை. இதற்கேகதேச திருஷ்டாந்தம் ஆயினும் சர்வத்திரபிராணிகளனுபவம் எப்படியென்னில்.

உ-ம். சுழுத்தியில் ஜீவர்கள் வெகுகாலம் லீனமாயிருக்கத் தெய்வகதியாய் ஒருசமயத்தில் அந்தச்சீவர்களுடைய கர்மபலம்பக்குவப்படும் அப்போது திரிகுணாத்மகமான பிரகிருதியாகிறசத்துவகுணம் விச்ரிம்பிக்கும் அந்தகுணம்விச்ரிம்பிக்கிறசத்துவகுணத்தை மாயையென்று சொல்லப்படும் இந்தமாயையிற்பிரதிவிம்பித்தசைதன்யமும் மாயையுமிதற்கதிஷ்டானமானசைதன்யமும் இம்மூன்றுங்கூடி ஈஸ்வரனென்று சொல்லப்படும் இந்த ஈஸ்வரனுக்கே அந்தரியாமியென்றும் அவ்வியாகிருதனென்று மிரண்டுபெயர் இவரே ஜெகசிருஷ்டிகர்இந்தச்சிருஷ்டிக்கிரமத்தில் உபாதானகாரணம் நிமித்தகாரணமென்கிற இரண்டு காரணமும் வேண்டுமென்று லோகத்திற்கண்டிருக்கிறோம்.

ச-கை. அஃதெப்படியென்னில்

உ-ம். குடமுதலிய பாண்டங்களுற்பவிக்கிறதற்கு மண்ணுபாதானமும் குயவனும் அவனுயுதங்களும் நிமித்தமாகவும் புடவையுண்டாக்குகிறதற்கு நூல் உபாதானமும் நெய்யக்காரனும் காடாமுதலியவனுயுதங்களு நிமித்தமாகவும் எந்தப்படி லோகத்தில் இரண்டு காரணத்தினாலும் கடபடாதிகள் உற்பத்தியா

கின்றதோ அந்தப்படியே - இரண்டுகாரணத்தினாலும் சகத்துற்பத்தியென்று தோற்றுகின்றது.

ச-ஙை. அஃதெப்படியென்னில்

உ-ம், மாயை உபாதானமும் ஈஸ்வரன் நிமித்தமுமென்று சொல்லுவோமாகில் சுருதிகளுக்கு விரோதம்வரும் இதுமாத்திரமல்ல உபாதானகாரணம் சற்பதார்த்தமா யிருக்கவேண்டும் அப்படியிருக்குமானால் மாயையும்ஆத்மாவுமிரண்டு பதார்த்தமாகிறபடியினால் அத்வைதத்திற்கு ஆனிவரும் ஆதலாலிப்போது சொன்னபட்சங் கூடாது, பட்சாந்தரமாய்ச் சொல்லவேண்டும் மாயைநிமித்தமென்றும் ஈஸ்வரனுபாதானமென்றுஞ்சொல்லுவோமாகில் முன்போல அத்வைதவிரோதம்வரும் உலகத்திலும் சேதனனையே நிமித்தகாரணமாகக் கண்டோம் அசேதனமான மாயை நிமித்தகாரணமாகமாட்டாது ஆனால் அத்வைதஹானிவரும் இந்தத்தோஷங்களிருக்கிறபடியினால் கேவலமானமாயை உபாதானமுமாகாது நிமித்தமுமாகாது ஆதலால் உபாதானமு நிமித்தமும் ஈஸ்வரனென்றே சொல்லவேண்டும்,

ச-ஙை உலகத்திலிரண்டுகாரண மொன்றினிடத்திற் காணோமே அஃதெப்படி சொல்லுகிறதென்னில்

உ-ம். சொல்லலாம் உலகத்தில் நூலையுண்டாக்குகிற சிலந்திப்பூச்சியினிடத்திலிரண்டுகாரணமுமிருக்கின்றது அந்தப்பூச்சியே சரீரப்பிரதானத்தினால் உபாதானமும்புத்திப்பிரதானத்தினால் நிமித்தமுமா யிருக்கக்கண்டோம் அப்படிபோலஈஸ்வரனும் சத்துவகுணப் பிரதானமான மாயையுடனேகூடி நிமித்தகாரணமானார் தமோகுணப் பிரதானமான மாயையுடனேகூடி உபாதானகாரணமானார் இந்த உபயகாரணமான ஈஸ்வரனால் ஜெகத்துண்டாயிற்று.

ச-ஙை. எப்படியென்னில்

உ-ம், ஈஸ்வரன்சத்துவகுணப் பிரதானமான மாயையுடனே கூடிக்கொண்டு தமோகுணப் பிரதானமான மாயையை வீக்ஷித்தபோது அந்தத் தமோகுணப் பிரதானமானமாயையோடு கூடினசைதன்யத்தினால் திரிகுணாத்மகமான ஆகாசமும் அந்த ஆகாசவிசிஷ்டசைதன்யத்தினால் திரிகுணாத்மகமானவாயுவும் அந்தவாயுவிசிஷ்டசைதன்யத்தினால திரிகுணாத்மகமானதேயுவும் அந்தத்தேஜோவிசிஷ்டசைதன்யத்தினால திரிகுணாத்மகமானஜலமும் அந்தஜலவிசிஷ்டசைதன்யத்தினால திரிகுணாத்மகமான பிருதிவியுமுண்டாயிற்று - இது அபஞ்சீக

ரூத பூதங்களென்றும் - சூக்ஷ்மபூதங்களென்றும் - தன்மாத்திரைகளென்றுஞ் சொல்லப்படும் இந்தப்பூதங்களினால்சமஷ்டி வியஷ்டியாத்மகமாகிற லிங்கசரீரமுண்டாயிற்று - அந்தச்சமஷ்டிவியஷ்டி சொரூபத்தைமுன்னே நிரூபிக்கிறோம், இந்தலிங்கசரீரமும் பதினேழுதத்துவங்களுடனே கூடியிருக்கும்.

ச-கை. அந்தப்பதினேழு - தத்துவங்களாவதேதென்னில்

உ-ம். ஞானேந்திரியம் (௫) கன்மேந்திரியம் (௫) வாயுக்கள் (௫) மனம்புத்தி (௨) ஆ. (௰௭)

ச-கை. இதுகளினுற்பத்தி யெப்படியென்னில்

உ-ம். ஆகாசத்தினுடைய சாத்வீகாம்சத்தில் சுரோத்திரேந்திரியமும் வாயுவின்சாத் வீகாம்சத்தில் தொக்கிந்திரியமும் தேயுவின் சாத்வீகாம்சத்தில் சட்சு இந்திரியமும்அப்புவின்சாத்வீகாம்சத்தில் சிங்குவையிந்திரியமும் பிருதிவின்சாத் விகாம்சத்தில் கிராணேந்திரியமுமாக இந்தப்படி சாத்விகாம்சத்தில் வியஷ்டியான ஞானேந்திரியங்கள் பிறந்தது, இந்தச்சாத்விக சமஷ்டியினால் அந்தக்கரணங்கள்பிறந்தது, அதுவிருத்திபேதத்தினால் மனம்புத்திசித்தம் ஆங்காரமென்று நான்குவிதமாயிற்று - அந்தப்பதினேழுகணங்களுக்கு மனமுஞ் சித்தமுமொன்றாயிற்று - புத்தியுமாங்காரமு மொன்றாயிற்று - ஆகாசத்தினுடைய ரஜோம்சத்தில் வாக்கும் வாயுவின் ரஜோம்சத்திற் பாணியும் தேயுவின் ரஜோம்சத்திற் பாதமும் அப்புவின்ரஜோம்சத்திற்குய்யமும் பிருதிவியின்ரஜோம்சத்திற்குதமும் இந்தப்படி ரஜோம்சத்தில் வியஷ்டியானகன்மேந்திரியங்கள் பிறந்தது - இந்த ராசதசமஷ்டியினால் பிராணவாய்வு பிறந்தது - அது விருத்திபேதத்தினால் - பிராண அபான உதான வியான சமானனென்கிற பஞ்சவாய்வுகளாயிற்று உபவாய்வுகளும் இவைகளுக்குள்ளே அந்தர்ப்பூதமாகும் இந்தப்பதினேழுங்கூடிச் சமஷ்டிவியஷ்டியாகிற லிங்கசரீரமென்று சொல்லப்படும் - அந்த ஈஸ்வரனே இந்தலிங்கசரீரத்தி லபிமானித்து இரணியகர்ப்பரானார் - அவருக்கே சூத்திராத்மாவென்றும் பிராணனென்று மிரண்டுபெயர் இதுவே சூக்ஷ்மசரீர சிருஷ்டி.

ச-கை. இனிஸ்தூலசரீர சிருஷ்டியாவதேதென்னில்,

உ-ம். அந்தமாயாசகித ஈஸ்வரவீக்ஷணியத்தினால் தமோகுணப்பிரதானமான அபஞ்சீகிருத பஞ்சபூதங்களினாலாயமுதலிய ஸ்தூலபூதங்களுமுண்டாயிற்று - அவை ஒவ்வொன்று இர

ண்டு பாகமாயிற்று அதில் ஒருபாகமிருக்க மற்றை ஒருபாகமும் ஒவ்வொன்று நந்நான்காகி அந்தந்தப்பாகங்களின் நிஜாம்சத்தைவிட்டு இதரபூதங்களுடனே கூடுகிறது பஞ்சீகிருதஸ்தூலபூதங்களென்றுசொல்லப்படும் இந்தஸ்தூல பூதங்களினிடத்தில் ஈஸ்வர வீக்ஷண்யத்தினால் ஸ்தூலப்பிரபஞ்ச முண்டாயிற்று.

சு-ஷை. அஃதெப்படியென்னில்

உ-ம். பஞ்சீகிருதபஞ்சமகா ஸ்தூல பூதங்களினால் அண்டமும் அந்தஅண்டத்தின்கீழேழுலகமும் மேலேழுலகமும் அந்தந்தலோகங்களுக் கேற்றமான நால்வகையோனிகளும் பிறந்தன இந்தவையுங்கூடி ஸ்தூலப் பிரபஞ்சமென்னப்படும் இதனிடத்த பிமானித்த ஈஸ்வரனுக்கு விராட்டென்றுபெயர் அவருக்கேவைஸ்வாநரன் வைராஜனென் றிரண்டுபெயர் இதுவேசமஷ்டி.

நு-ஷை. இனிவியஷ்டிசொரூபமாவதெப்படியென்னில்

உ-ம். வியஷ்டியானது சமஷ்டியிலந்தர்ப் பூதமானாலும் அதைப்பிரித்துச்சொலவேண்டும் எப்படியென்றால் சாக்கிராவஸ்தையில் ஸ்தூலசரீரத்தி லபிமானியாயிருக்கிற சீவனுக்கு விசுவனென்றுபெயர் அவனுக்கே வியவகாரிகன் சிதாபாசனென் றிரண்டுபெயர் சொப்பனாவஸ்தையில் சூக்ஷ்மசரீரத்தி லபிமானியாயிருக்கிற சீவனுக்குத் தைசதனென்றுபெயர் அவனுக்கே பிராதிபாதிகன் சொப்பனகற்பிதனென் றிரண்டுபெயர், சுழுத்தியவஸ்தையில் காரணசரீரத்தி லபிமானியா யிருக்கிறசீவனுக்குப் பிராக்ஞனென்றுபெயர் அவனுக்கே பாரமார்த்திகன் அவிச்சின்னனென் றிரண்டுபெயர் இதுவேவியஷ்டி, இந்தப்பிரபஞ்சத்தின் அனாதிசிருஷ்டிஸ்திதி லயங்களுக்காகவே அவ்வீசுரன் திரிமூர்த்தி சொரூபமாகிறார்.

சு-ஷை. அஃதெப்படியென்னில்

உ-ம். சத்துவகுணத்துடன்கூடி ரட்சிக்கிறதற்கு விஷ்ணுவாகவும் ராசதகுணத்துடன்கூடி சிருஷ்டிக்கிறதற்குப் பிரமாவாகவும் தமோகுணத்துடன்கூடி சங்கரிக்கிறதற்கு ருத்திரனாகவுமிருக்கிறார் இவர்களில் பிர்மா விராட்டிலந்தர்ப்பூதன் விஷ்ணு இரணியகர்ப்பத்தி லந்தர்ப்பூதன் உருத்திரன் பிரபஞ்சகாரணமான அவ்வியாகிருதத்தி லந்தர்ப்பூதன் இதுவேயத்தியாரோபயுத்தி என்றுசொல்லப்படும் இந்தஅத்தியா ரோபத்திற்கு மூலமான அஞ்ஞானத்தை ஸ்ரீசற்குரு கடாட்சத்தினால்சங்கையறவகற்றினோனே அவனே சீவன்முத்தனென்று சுருதிஸ்மிருதியாதிகளிற், சொல்லுகின்றது இதிற்சம்சயமில்லை, சித்தம்.

அத்தியாரோபநிரூபணம் - முற்றிற்று.



இரண்டாவது.

## அபவாதநிருபணம்.

———(*)———

ச-கை. சுருதியாதிகளிற் சொல்லுகிற அபவாதயுத்தியாவதேதென்னில்,

உ-ம். காரணத்துக்கன்னிய மாய்க்காரியமில்லை யென்றறிவது.

ச-கை. அஃதெப்படி யென்னில

உ-ம். மண்ணினாலுண்டாக்கப் பட்டகடமுதலிய பாண்டங்கள் மண்ணுக்கன்னியமாயெப்படி காணவில்லையோ நூலினாலுண்டாக்கப்பட்ட புடவைகள் நூலுக்கன்னியமா யெப்படிகாணவில்லையோ சொர்ணத்தாலுண்டாக்கப்பட்ட ஆபரணங்கள்சொர்ணத்திற் கன்னியமாயெப்படி காணவில்லையோ இரும்பினாலுண்டாக்கப்பட்ட ஆயுதங்களிரும்புக்கன்னியமாயெப்படிகாணவில்லையோ அப்படிபோல ஆத்மாவினாலுண்டாக்கப்பட்ட பிரபஞ்சங்கள் ஆத்மாவையன்றி வேறில்லையென்றறிவது.

ச-கை. அஃதறிகிறவித மெப்படியெனனில்.

உ-ம். பஞ்சீகிருத பஞ்சமகாஸ்தூல பூதங்களினாற் பிறக்கப்பட்ட அண்டமும் அவ்வண்டத்தினுள்ளுண்டான பதினாலுலோகமும் அந்தந்த லோகங்களுக்கு உசிதமானநால்வகை யோனிகளும் அவைகட்குக் காரணமாகிய பஞ்சீகிருதபஞ்சமகா பூதங்களன்றி வேறில்லையென்றும் அந்தப்பூதங்களும் சமஷ்டிவியஷ்டியாத்மகமான லிங்கசரீரமும் அவைகட்குக்காரணமாகிய அபஞ்சீகிருதபஞ்சமகா பூதங்களன்றி வேறில்லையென்றும் அந்தப்பூதங்களும் அதன்காரணத்தையன்றி வேறில்லையென்றும் அறியவேண்டியது.

ச-கை. அஃதெப்படியென்னில்

உ-ம். அப்புவினாலுண்டாக்கப்பட்ட பிருதிவி அப்புவன்றியெப்படிவேறில்லையோ அக்கினியினாலுண்டாக்கப்பட்ட ஜலம்அக்கினியன்றி யெப்படிவேறில்லையோ வாயுவினாலுண்டாக்கப் பட்ட அக்கினிவாயுவையன்றி யெப்படிவேறில்லையோ ஆகாசத்தினாலுண்டாக்கப்பட்ட வாயுஆகாசமன்றி யெப்படிவேறில்லையோ மாயையினாலுண்டாக்கப்பட்ட ஆகாசம்மாயையன்றி எப்படிவேறில்லையோ அப்படியேயாம்

ச-கை. அத்துயமாயையொருபடி யெப்படியென்னில்

உ-ம். அது திரிகாலத்திலு மில்லாதபடியினால் சத்தென்றுஞ் சொல்லப்படாது அகம் அஞ்ஞானியென் றனுபவமிருக்கிறபடியினால் அசத்தென்றுஞ் சொல்லப்படாது, விருத்தமானபடியினால சதசத்தென்றுஞ் சொல்லப்படாது.

ச-கை. மற்றென்னவென்னில்

உ-ம். அனிர்வஜனீயமென்று சொல்லப்படும்

ச-கை. அனிர்வஜனீயமானதேதென்னில்

உ-ம். மித்தையாசொரூபம்

ச-கை. அஃதெப்படியென்னில்.

உ-ம். சசவிஷாண வந்தியாபுத்ர ககனாரவிந்த சுத்திகாரசிதம் போலிருக்கிறபடியினால சின்மாத்திரத்துக் கன்னியமாயொரு வஸ்துவுமில்லை யென்றறியவேண்டும் இவ்வகைப்பட்ட சின்மாத்திரசொரூபமேதானென்று ஸ்ரீசற்குருவினால் பிரகாசமுதி தோற்றமும் அஞ்ஞானமும் சங்கையறக்கேட்டு அத்தியாரோபமீங்கு அன்னியபதார்த்தமில்லாமல் பவாதமாய்த் தான்பரவுமென்று சாட்சாத்கரித்து எவனிருக்கிறானோ அவனே ஜீவன்முத்தனென்று சுருதிஸ்மிருதியாதிகளிற் சொல்லுகின்றது இதிற்சம்சயமில்லை சித்தம்.

அபவாதநிரூபகம் - முற்றிற்று.

——[*]——

மூன்றாவது.

## சாதனசதுஷ்டய நிரூபகம்.

——[○]-(*)-[○]——

ச-கை. சுருதியாதிகளிற்சாதனசதுஷ்டயங்களை விசாரிக்கறியவேண்டுமென்பதினால் இந்தவேதாந்தவிசாரத்திற்கதிகாரியாரென்னில்

உ-ம். சாதனசதுஷ்டய முள்ளவனேயதிகாரி

ச-கை. அஃதெப்படியென்னில்.

உ-ம், பிரகஸ்பதிசவன மென்கிறயாகத்தில் பிராமணனெப்படி யதிகாரியோ க்ஷத்திரியர் வைசியர் எப்படி யதிகாரிகளல்லவோ ராஜசூயயாகத்தில க்ஷத்திரியனெப்படி யதிகாரியோ பிராமணர் வைசியரெப்படியதிகாரிகளல்லவோ ஸ்தோமமென்கிற யாகத்தில் வைசியனெப்படி யதிகாரியோ பிர்ம்மக்ஷத்திரியரெப்படியதிகாரிகளல்லவோ அப்படிபோல வேதாந்த விசாரத்திற்குச் சாதனசதுஷ்டய சம்பன்னத்துவ முண்டானவனே யதிகாரியாம்.

ச-கை. சாதனசதுஷ்டய மாவதேதென்னில்

உ-ம். நித்தியாநித்தியவஸ்துவிவேகம், இகவுத்திரார்த்தபலபோக விராகம், சமாதிஷட்கசம்பத்தி, முமுக்ஷுத்துவம்

ச-கை. இதில் நித்தியாநித்தியவஸ்து விவேகமாவதேதென்னில்

உ-ம். பிரமமேநித்திய மென்றும் பஞ்சபூதங்களாதி முதலிய ஜெகத்தெல்லாம் அநித்தியமென்றும் சுருதிஸ்மிருதிகளாற்குருமுகமாய் விசாரித்தறிகின்றது.

ச-கை. இகவுத்திரார்த்தபலபோக விராகமாவதேதென்னில்

உ-ம். இந்தலோகத்திற் கன்மத்தினாற்செனித்துவரப்பட்ட அநித்தியமான சற்சந்தனவனிதாதி விஷயபோகத்தி னிடத்திலும் பரலோகத்திற் கன்மஜெனியத்தால் வரப்பட்ட அநித்தியமான ரம்பாசம்போக அமிர்தாதிகளிடத்திலும் வாந்திசெய்த அசனமலமூத்திராதிகள்போல ஆசையில்லாமல் இந்தஜெகத்திற் குக்காரணகர்த்தாவாகிய சுவாமியினிடத்திற்பிரீதியாயிருப்பது,

ச-கை. சமாதிஷட்கசம்பத்தி யாவதேதென்னில்

உ-ம். சமந்தமம் உபரதி, திதிக்ஷைசமாதி சிரத்தையென்னு மாறுவகை.

ச-கை. இதிற் சமமாவதேதென்னில்

உ-ம். பாகியவிஷயத்திற்செல்ல வொட்டாமல் மனதைத் திருப்பிச்சிரவணத்தில் வைப்பது,

ச-கை. தமமாவதேதென்னில்

உ-ம். ஞானேந்திரிய கன்மேந்திரியங்களை விஷயத்திற் செல்ல வொட்டாமற் றிருப்பிச்சிரவணத்தில நிறுத்துவது.

ச-கை. உபரதியாவதேதென்னில்

உ-ம். விகிதமான கன்மங்களைப் புத்திபூர்வகமாய்விடுகிற தென்றும் அதைச்சன்னியாசமென்றுஞ் சொல்லுவார்கள் அப்படியல்ல, விகிதமானகன்மங்களில் கர்த்தத்துவாபிமான பலாபேக்ஷையின்றிச் சகலபாப கன்மங்களையும்விட்டு சகலபுண்ணியகன்மங்களைச்செய்து பகவத்பிரீதியாக்குகிறது.

ச-கை. திதிக்ஷையாவதேதென்னில்

உ-ம். சீதோஷ்ணங்களைப்பொறுப்பது அப்படியாகில்பனியிலிருந்துகுளிரையும்வெய்யிலிலிருந்து சூட்டையும்பொறுக்கிறதல்ல, பிராரத்தவசத்தினாலெந்தவேளைக்கு எதுவருமோ அதையனுபவித்துத் தீரவேண்டுமெனவுங்கருதிசகலமும்போகிறதை

ப்பற்றி வாட்டமும் சஞ்சலமும்வருகிறதைப்பற்றி மகிழ்ச்சியுமி ல்லாமல் சமபுத்தியுடனே யிருப்பது.

ச-கை. சமாதியாவதேதென்னில்

உ-ம். திருப்பினமனமு மிந்திரியங்களும் வாசனைவசத்தாய்வரப் பட்ட விஷயத்தினிடத்திற்போம் அதுகளைச் சிரவணத்திற்கு வெதிரிக்தமான விஷயங்களிற் செல்லவொட்டாமற்றிருப்பிச் சிரவணத்தில் வைப்பது.

ச-கை. சிரத்தையாவதேதென்னில்

உ-ம். பூர்வம் யாதொன்றினிடத்திலிருந்த விசுவாசமெல்லாம் குருவேதாந்த வாக்கியத்தினிடத்தில் வைப்பது.

ச-கை. இனிமுமுக்ஷுத்துவமாவதேதென்னில்.

உ-ம். மோட்சத்தையறிந்து அடையவேண்டுமென்கிற அதிதீவிரமாகியமனதுடனே கூடியிருக்கிறது அதற்கே மோக்ஷவிச்சையென்று பெயர்.

ச-கை. சகலபிராணிகளும் மோக்ஷம்வேண்டுமென்று சொல்லுகிறார்களே அதுமோக்ஷவிச்சையல்லவாவென்னில்.

உ-ம். அல்ல.

ச-கை. மற்றெப்படியென்னில்.

உ-ம் கிரகம்பற்றிக்கொண்டெரிகிறபோது அவ்வீட்டுக்குள்ளகப்பட்ட புருஷன் தனதுபுத்திரமித்திர களத்திராதிகளெல்லாமாய்ப் போனார்களோவென்று விசாரத்துடன்கூடி அக்கினியில் தபிக்கப்பட்டவனாய் அந்தப்புத்திரமித்திர களத்திராதிகளை விட்டுவிட்டு குளிர்ந்தஜெலத்திற் பிரவேசித்ததுபோல சம்சாரதாபத்திரியமென்கிற அக்கினியில் தபிக்கப்பட்டபுருஷன் இந்தச்சம்சாரதாபத்தைப் போக்குகின்ற குருநாதன் எங்கேயிருக்கிறாரோ இதற்கு என்னசாதனம் வேண்டுமோவென்று தாபங்கொண்டு தேடுகின்றதேட்டமாகியதீவிரத்திற்கே மோக்ஷவிச்சையென்றுபெயர் இந்நான்குசாதனமும் ஆரிடத்திலுண்டோ அவர்களேயதிகாரி, சிரவணத்திற்குமுன்பே சாதனசதுஷ்டயத்து சம்பாதித்துக்கொண்டு சிரவணத்திற்கு ஆரம்பிக்கவேண்டும் அப்படியன்றிஞானங்கிடையாது சற்குருவும் அநதிகாரிகளுக்கு உபதேசிக்கமாட்டார்.

ச-கை. அதெப்படியென்னில்

உ-ம் சூத்திரனுக்கு யாகம்பண்ணிவைத்தால் சொர்க்காதிபோகங்கள் அவனுக்கெப்படி சித்தியாதோ சூத்திரனுக்கு ஸ்வர்க



நான்காவது

## உபயபதார்த்த நிரூபகம்.

ச-கை. சுருதியாதிகளிற் பிரபஞ்சமெத்தனை பதார்த்தமாயிருக்கின்றதென்று விசாரிக்கவேண்டுமென்பதால் இந்தப்பிரபஞ்சமெத்தனை பதார்த்தமாயிருக்கின்றதென்னில்.

உ-ம். இரண்டுபதார்த்தமாயிருக்கின்றது.

ச-கை. அதெப்படியென்னில்

உ-ம். ஆத்மாவென்றும் அநாத்மாவென்றுமாம்.

ச-கை. பிரபஞ்சத்திற் கதீதமாயிருக்கப்பட்ட ஆத்மாவைப்பிரபஞ்சத்திற்குள்ளாய்ச் சொல்லலாமோவென்னில்.

உ-ம். பிரபஞ்சஞ் சேதநாசேதனமாய்த் தோன்றுகையினால் பிரபஞ்சாதீதமாகிய வாத்மாவைப் பிரபஞ்சத்திற் குள்ளாய்ச் சொல்லலாம்

ச-கை. பிரபஞ்சஞ் சேதநாசேதனமாய்த் தோற்றப்பட்டாலும் பிரபஞ்சாதீதமாகிய வாத்மாவைப் பிரபஞ்சத்திற் குள்ளாய்ச் சொல்லவேண்டுமோ வென்னில்.

உ-ம். சொல்லவேண்டும்.

ச-கை. அதெப்படியென்னில்.

உ-ம். ஆத்மாவென்றாற் சேதனனாகையாலே அந்தச்சேதனனாகியவாத்மாபிரபஞ்சத்துடன் கூடாவிட்டால் பிரபஞ்சம் சேதனமென்றும் அசேதனமென்றும் தோன்றாது, தோற்றுகிறபடியினாற்பிரபஞ்சாதீதமாகிய ஆத்மாவைப்பிரபஞ்சக் தற்பாதியாய்ச் சொல்லலாம்.

ச-கை. அப்படியானால் பிரபஞ்சத்திற் சேதனமேது அசேதனமேதென்னில்.

உ-ம். நடக்கிறது ஓடுகிறது பறக்கிறது குதிக்கிறது ஊருகிறது இதுமுதலானதுகள் சேதனம், பிருதிவி அப்புபர்வதம்விருக்ஷங் கனிதுமுதலானதுகள் அசேதனம்.

ச-கை. பிரபஞ்சம்இப்படி அநேகபதார்த்தமாய்த் தோற்றிக்கொண்டிருக்க இரண்டுபதார்த்தமென்கிற தெப்படியென்னில்.

உ-ம். பிரஞ்சத்தி லாத்மாவென்று மனாத்மாவென்று மிரண்டுபதார்த்தம், இவற்றிலொரு அனாத்மாவேகாரியரூபமாய்ப் பரிணமித்து அனேக பதார்த்தங்களாச்சுது இதுகளோடுங்கூடி யாத்மாவும் அனேகமாகவே தோற்றப்படுகின்றது,

ச-ங்கை. அனாத்மாக்களோடே கூடித்தோற்றப்படுகிற ஆத்மாஎத்தனைவிதமாய்த் தோற்றப்படுகிறதென்னில்

உ-ம். சீவனென்றும் ஈஸ்வரனென்றுமிரண்டுவிதமாய்த் தோற்றப்படுகின்றது.

ச-ங்கை. இந்தச்சீவேஸ்வரா ளெத்தனைவிதமாய்த் தோற்றப்படுகிறார்களென்னில்,

உ-ம். சீவனுமனேகவிதமாய்த் தோற்றப்படுகின்றது, ஈஸ்வரனும் அனேகவிதமாய்த் தோற்றப்படுகிறார்.

ச-ங்கை. சீவர்களனேகவிதமாய்த் தோற்றட்டும், ஒருவராயிருக்கிற ஈஸ்வரனெப்படியனேகவிதமாய்த் தோற்றுகிறாரென்னில்

உ-ம். புண்ணிய க்ஷேத்திரங்களிலும் பட்டணங்களிலும் கிராமங்களிலும் வீட்டுவீட்டுக்கும் ஈஸ்வரனனேகவிதமாய்த் தோற்றப்படுகிறார்.

ச-ங்கை. அங்கங்கே தோற்றப்படுகிறதெல்லாம் மண்சிலைதாதுதாம்பிராதி பிரதமைகளல்லவோ அதுகளை ஈஸ்வரனென்றெப்படி சொல்லுகிறதென்னில்

உ-ம். அந்தமண்சிலை தாதுதாம்பிராதி பிரதமைகளிடத்தில் எல்லாருக்கும் ஈஸ்வரபுத்தியேயன்றி பிரதமைபுத்தி சர்வாத்மனாயில்லை அல்லாமலும் அதுகளில்பிரதமை புத்திதோற்றி யீஸ்வரபுத்தியில்லாவிட்டால் பூசை அபிஷேக நைவேத்தியாதித்தும் லட்சம்லட்சமாய் செலவுசெய்வார்கள் இப்படிச்செலவு செய்கிறபடியினால் பிரதமைகளிடத்திலு மீஸ்வரபுத்திவரலாம்

ச-ங்கை. அனாத்மசொரூபமான பிரதமைகளிடத்தி லீஸ்வரபுத்தி வரலாமோவென்னில்

உ-ம். வரலாம்

ச-ங்கை. அதெப்படியென்னில்

உ-ம். மிருதியுவிஷேதமான தேகேந்திரியாதி சங்காதமே நானென்று தேகேந்திரிய சங்கத்தில் ஆத்மபுத்திவந்தவனுக்கு அந்தப்பிரதமைகளிடத்திலு மீஸ்வரபுத்திவரலாம்.

ச-ங்கை. இந்தத்தேகேந்திரியம் நிஷேதபதார்த்தமோ வென்னில்

உ-ம், ஆம்

ச-ங்கை அதெப்படியென்னில்

உ-ம். சுக்கிலசோணிதத்தினு லுண்டானபடியினாலும் மாமிசமலமூத்திரங்களினால் நிருமிக்கப்பட்டிருக்கிற படியினாலும் சற்சந்தனங்களினால் அந்தச்சரீரத்தைச் சுகந்தப்படுத்துவோமாகில் அந்தச்சரீரபரிசனத்தினு லந்தச்சந்தனமும் துர்க்கந்தமாய்நிஷேதமாய்ப் போகிறபடியினாலும், சரீரநஷ்டமாய்ப்போனபோது அழுகினாறிக் கரைந்துபோகையினாலும், இருக்கிறபேர்களுக்குத் திரவியவிரயமும் துக்கக்கிலேசமுங் கொடுக்கிறபடியினாலும், இந்தச்சரீரம் நிஷேதபதார்த்த மென்பதற்குச்சந்தேகமில்லை, இவ்வகைப்பட்ட தோஷங்கள் அந்தப்பிரதமைகளிடத்திலில்லை, அதுகளிடத்திற் சமர்ப்பித்த சற்சந்தனாதிகள் யாருக்குமுபயோகமாகிறபடியினாலும் அதுகளுக்கு ஒருஹானிவந்தபோதும் மற்றொன்றுக் குபயோகமாகிற படியினாலும் அந்தப்பிரதமைகளிடத்துலீஸ்வரபுத்திவருகிறது உசிதமேயாம்

ச-ங்கை. ஆனாலொரு அனாத்மபதார்த்தமே காரியரூபமாய்ப் பரிணமித்து அனேகம்பதார்த்தமாய்த் தோற்றப்படும் ஆத்மாவுமற்றொரு பதார்த்தத்தோடு கூடியனேகமாய்த் தோற்றப்படுமென்பதற்குத் திருஷ்டாந்தமுண்டோவென்னில்

உ-ம் உண்டு.

ச-ங்கை அதெப்படியென்னில்

உ-ம் பிருதிவியொன்றே காரியரூபமாய்ப் பரிணமித்து பர்வதங்கள் விருக்ஷங்கள்வனங்கள் கோபுரங்கள்பிராகாரங்கள் மண்டபங்கள்சுவர்கள் முதலான கடசாரூபமாய்த் தோற்றப்படுகின்றது ஆகாசமும் அதுகளிற் கூடிகடாகாசமென்றும் மடாகாசமென்றும் பர்வதாகாசமென்றும் விருக்ஷாகாசமென்றும் வனாகாசமென்றும் கோபுராகாசமென்றும் பிராகாராகாசஞ் சுவராகாசமென்றும் இப்படிநானாவிதாகாசங்களாயெப்படி தோற்றப்படுகின்றதோ அப்படிப்போல ஆத்மாவும் காரியரூபமாய்ப் பரிணமிக்கப்பட்ட அனாத்மபதார்த்தத்துடன் கூடிதேவதத்தனென்றும் யெக்ஞதத்தனென்றும்ராமனென்றும் கிருஷ்ணனென்றும் கோபாலனென்றும் கோவிந்தனென்றும் அனேகவிதமாய்த் தோற்றப்படுகிறார் இந்தப்பிருதிவிஆகாச திருஷ்டாந்தம் அவிச்சின்ன பக்ஷத்திற்குத் திருஷ்டாந்தமென்று சொ

ல்லப்படும் இனிமேநிமித்த பதாத்திருஷ்டாந்தமுஞ் சொல்லு கின்றோம்.

ச-ங்கை. அதெப்படியென்னில்

உ-ம். ஒருஜலமேடையாகிய சகத்திலே சமுத்திரமென்றும் நதியென்றும் ஏரியென்றும் குடமென்றும் காலைவாயென்றும் நடைவாவியென்றும் பாண்டஜலமென்றுஞ் சொல்லப்படும் அந்தச்சலத்திலொரு சூரியனே பிரதிபிம்பித்து அனேகவிதமாயெப்படிதோற்றப்படுகிறதோ அப்படிபோல ஆத்மாவும் அநாத்மகாரியமாயிருக்கப்பட்ட அந்தக்கரணங்களில் பிரதிபிம்பித்து அனேகருபமாய்த் தோற்றுகிறார் அப்படிதோற்றப்பட்டாலும் அநாத்மகாரியமான அந்தக்கரணதர்மங்கள் ஆத்மாவைக் காலத்திரயத்திலும் ஸ்பரிசிக்கவில்லை

ச-ங்கை. அதெப்படியென்னில்

உ-ம். ஜலத்துக்கதிகளும் ஜலவிகாரங்களையும் அந்தச்சலத்தில் பிரதிபிம்பித்த சூரியனையெப்படி ஸ்பரிசிக்கவில்லையோ அப்படிபோல அந்தக்கரணவிகாரங்களும் அந்தக்கரணத்திற் பிரதிபிம்பித்த சிதாபாசனையே ஸ்பரிசிக்கவில்லை, அந்தக்கரணத்திற் கதிஷ்டானமான பிரத்தியகாத்மாவைஸ்பரிசிக்காதென்பதற்குச் சந்தேகமேயில்லை, இதுமாத்திரமல்ல பிருதிவிவிகாரங்களும் பிருதிவியின்காரிய விகாரங்களும்பிருதிவிக் காதாரபூதமான ஆகாசத்தை யெப்படி ஸ்பரிசிக்கவில்லையோ அப்படிபோல அநாத்மவானவைகளும் அஞ்ஞானகாரியமான தேகேந்திரியாதிப் பிரபஞ்சங்களும் அஞ்ஞானத்திற்கும் அஞ்ஞானகாரியத்திற்கு மாதாரபூதமான பிரத்தியகாத்மாவை ஸ்பரிசிக்கவில்லை, இப்படி ஆத்மாநாத்மவிவேகம்பண்ணி ஆத்மசொரூபமே நானென்று ஸ்ரீசற்குருகடாட்சத்தினால் அநாத்மவஞ்ஞான வாசகங்களைத்தேறுபடுத்தி தேறுபடுத்தின அநாத்மவஞ்ஞான வாசகங்களும் காரணமன்றி காரியமில்லாததுபோலச் சச்சிதானந்தமன்றி வேறில்லையென்று அநுபவருபமாய்ச் சங்கையறவெவனறிகிறானோ அவனேசீவன்முத்தனென்று சகலசுருதிஸ்மிருதியாதிகளிற் சொல்லுகின்றது இதிற்சம்சயமில்லைசித்தம்.

உபயபதார்த்தநிருபகம் - முற்றிற்று.

[*]

பாசனைகளால் துக்கநிவிர்த்தியும் சுகத்திற்கபிவிர்த்தியும் வருமென்று சொல்லப்படாதோவென்னில்.

உ-ம். துக்கத்திற்குத்தற்காலம் உபசமனமேயல்லாமல் அத்தியந்தநிவிர்த்திகூடாது, அக்கினியாதிகளுக்கு மணிமந்திரங்களினால் தற்காலம் உபசமனமாயிருந்து காலாந்தரத்தில் ஔஷதாதிகளுக்கெப்படி. யபிவிர்த்தியுண்டாகின்றதோ அப்படிபோலஆத்மாவுக்கு உக்ருஷ்டகர்மவுபாசனைகளினால் பலரூபமானசுகத்திற்கு நாசம்வரும்போது திரும்பவுந்துக்கத்துக்கபிவிர்த்தியுண்டாம் அத்தியந்த நிவர்த்தியேயில்லை இதுமாத்திரமல்ல மோக்ஷத்திற்கு உற்பத்தியும் அனித்தியத்துவமும்வரும்

ச-கை. வந்தால்வரட்டுமேயெனில்,

உ-ம். அந்தஅர்த்தமெவர்களுக்குஞ் சம்மதமாகாது ஆத்மாவானந்த சொரூபனென்று சொல்லப்பட்ட சுருதிஸ்மிருதி இதிகாசபுராண ஆகமாதிகளுக்கும் விருத்தம்வரும், இதுமாத்திரமல்ல, சுழுத்தியவஸ்தையிலும் சகலபிராணிகளுக்கும் நான்துக்கத்தை யடைந்திருந்தேனென் றனுபவமில்லாமையினாலும் சுகமாயிருந்தேனென் றனுபவமிருக்கிறபடியினாலும்ஆத்மாவுக்குத்துக்கஞ் சுபாவிகமென் றங்கீகரிக்கக்கூடாது அப்படியங்கீகரிப்போமாகில் இந்தஅனுபவத்திற்கு விருத்தமவரும் ஆனதால்ஆத்மாவுக்குத் துக்கஞ்சுபாவிகமென்பது கூடாது.

ச-கை, பின்னையென்னவென்னில்

உ-ம். துக்கம்ஆகந்துகமென்றே சொல்லவேண்டும்

ச-கை. துக்கமெதினால் வந்ததென்னில்

உ-ம். சரீரமுண்டானபடியினால் வந்தது ஆகையாலெங்கேயெங்கே சரீரமுண்டோ அங்கேயங்கே துக்கவியாப்தியுண்டு

ச-கை, இப்படிசொல்லலாமா, ராஜப்பிரபுக்கள் சுகமே யனுபவித்துக்கொண்டிருக்கச் சரீரமுண்டானவிடங்கடோறுந் துக்கமுண்டென் றெப்படிசொல்லுகிறதென்னில்

உ-ம். சொல்லலாம் ராஜப்பிரபுக்களிடத்திலுந் துக்கமேயனுபவமாகக் காணப்படுகின்றது.

ச-கை. அந்தத்துக்கமேதென்னில்

உ-ம் ராஜப்பிரபுக்களுக்குத் தேகத்தினிடத்தில் ரோகத்தினாலும் சத்ருபலத்தினாலும் பிள்ளையில்லாமையினாலும்பிள்ளையுண்

டாயிருந்தும் வித்தைபுத்திவரவில்லையென்பதினாலும் சொன்னசொற் கேளாமையினாலும் பிரியமானபிள்ளை இறந்துபோவதினாலும் ராஜ்யத்தில்மழையில்லாமையினாலும் அதிகமழையினாலும் ஸ்திரீகளொருத்தருக் கொருத்தர்செய்கிற விருத்தத்தினாலும் முதுமையினாலும் நாம்நசித்துப்போவோ மென்கிறதினாலும் இதுமுதலியவனேக துக்கங்க ளிருக்கிறபடியினால் அவர்களைச் சுகசொரூப மென்பது மோகத்தினாலன்றி வேறல்ல.

ச-னை. மோகத்தினால் துக்கஞ்சுகமாய்த்தோற்றுமோவென்னில்

உ-ம் தோற்றும்

ச-னை. அதெப்படியென்னில்

உ-ம். மூட்டையெடுக்கிறவனுக்குக் கூலிகிடைத்தால் மூட்டைசுமக்கிறதுக்கமவனுக்கில்லை, போயிகள்தங்கள் துரைக்குப்பிரயாணமுண்டானால் சந்தோஷிக்கிறார்கள் இல்லாவிட்டால் துக்கப்படுகிறார்கள், வேலைசெய்கிறவர்களுக்கு வேலைகட்டப்பட்டால் சந்தோஷிக்கிறார்கள் இல்லாவிட்டால் துக்கப்படுகிறார்கள், வழிப்பிரயாணக்காரருக்குப் பிரயாணமுண்டானால் சந்தோஷப்படுகிறார்கள் இல்லாவிட்டால் துக்கப்படுகிறார்கள், மாவுத்தர்களுக்குப் புதிதாயானைகட்டப்பட்டால் சந்தோஷிக்கிறார்கள் இல்லாவிட்டால் துக்கப்படுகிறார்கள் இதுமுதலான துக்கம் இவர்களுக்கெப்படி சுகமாய்த்தோற்றுகின்றதோ அப்படிபோல ராஜப்பிரபுக்களுக்குந் துக்கமேசுகமாய்த் தோற்றுகின்றது, மோகத்தினாலுண்டாகப்பட்ட துக்கமே சுகமாய்த்தோற்றப்பட்ட ராஜப்பிரபுக்களிடத்திற்சேர்ந்தபேருக்குந் துக்கவியாப்தியைக்குறித்துக் கேட்கவே வேண்டியதில்லை

ச-னை. ஆனால்விவேகிகளுக்குந் துக்கமுண்டோவென்னில்

உ-ம். உண்டு.

ச-னை. விவேகியென்றால் சரீரமுண்டானவனோ இல்லாதவனோவென்னில்

உ-ம். சரீரமில்லாதவனுக்கு விவேகியென்ற விகாரங்கூடாது சரீரமுள்ளவனே விவேகியென்று சொல்லவேண்டும் ஆதலால் விவேகிக்குந் துக்கமுண்டு

ச-னை. எப்படியென்னில்

உ-ம். பசியுந்தாகமும் சீதோஷ்ணமுதலிய தொந்ததுக்கங்களும்

வயிற்றுநோய் தலைநோய்புலிபாம்பாதிகளினால் வரப்பட்டபய ங்கிலேச நடுக்கமுதலானது முண்டாயிருக்கையினால் விவேகி க்குந்துக்கமுண்டு

ச-கை விவேகிக்கும் அவிவேகிக்கும் பேதமேதென்னில்

உ-ம். பேதமுண்டு, விவேகியானவன் சர்வதுக்கங்களும் அந்தக் கரணசுபாவமென்றும் சாக்ஷியானதனக்கில்லையென்றும் விவே கிப்பன் அவிவேகியானவன சர்வதுக்கங்களையுந் தன்னிடத்தி ற்சுமத்திக்கொண்டு புத்திரன் சுகமாயிருந்தால் தான்சுகமாகவு ம் புத்திரனிறந்தால் தானிறந்துபோகிறதாகவும் நினைந்து தா பாக்கினியினால் தவிக்கப்படுவன் இந்தவகையினால் விவேகிக் கும் அவிவேகிக்கும் பேதமில்லையென்பது கூடாது

ச-கை. ஆனால்தேவர்களுக்குந் துக்கமுண்டோ வில்லையோவெ ன்னில்

உ-ம். உண்டு

ச-கைதேவர்களுக்குஞ் சரீரமுண்டோவில்லையோ சரீரமுண்டெ ன்று எதினாலறியப்படுகிறதென்னில்

உ-ம். சாஸ்திரங்களாலறியப்படுகின்றது

ச-கை. ஆனால் அவர்களுக்குந் துக்கமுண்டானதெப்படி யென் னில்

உ-ம். அன்னியோன்னிய வுவித்தியத்தினாலும் குருசாபமான அன் னியோன்னியசாபங்களினாலும் பலாபலத்தினாலொருவர் ஐ சுவரியமொருவர் பறிக்கிறபடியினாலும் ஒருவர் பெண்சாதி யையொருவர் பறிக்கிறபடியினாலும் ராக்ஷதர்பட்டணத்தை ப்பிடித்துக்கொண்டு துரத்துகிறபடியினாலும் ராக்ஷதர்பிடித் து விலங்குபூட்டி அடிமைத்தனஞ் செய்விக்கிறபடியினாலும்பு ண்ணியகர்ம க்ஷயத்தினால் நாசமாகுமென்கிற நினைவினா லும் இதுமுதலிய துக்கங்கள் தேவர்களுக்கு முண்டென்று சு ருதிஸ்மிருதி இதிகாசபுராணாகமங்கள் சொல்லுகின்றது இத ற்சம்சயமில்லை

ச-கை. தேவர்களுக்குந்துக்க முண்டானபோது அவர்கள் நமக் கெப்படி யுபாசகரானவர்கள் நமக்கிஷ்டசித்திகளை யெப்படிகொ டுப்பார்களென்னில்

உ-ம். கொடுப்பார்கள், ராஜப்பிரபுக்கள் தாங்கள் துக்கமுண் டானவர்களானாலும் ஐசுவரியம்படைத்தினால் தமக்குபாசகரா யிருந்து இஷ்டபலன்களை யெப்படி கொடுக்கிறார்களோ அப்ப டிபோலத் தேவர்களுந்தாங்கள் துக்கிகளானாலும் போகாதிக

வரியாதிசம்பத்திருல்லாமற்கு உபாசகருமிஷ்டசித்திகளைக்கொடுக்கின்றவருமானவர்கள்

ச-ஙை. தேவர்களானந்தசொரூபமென்று சாஸ்திரங்களிற் சொல்லுகின்றதே அதற்குத்தாற்பரியமேதென்னில்

உ-ம். விசேஷயானவன் சரீரத்திலகப்பட்டிருக்கிறபடியினால் துக்கமுண்டாயிருக்கிறதாலும் துக்கம் அந்தக்கரணசுபாவமென்றெப்படி காண்கிறதோ அப்படிப்போல அதிருஷ்டமானதேவர்களும் துக்கத்தை அந்தக்கரணசுபாவமாய்க்காண்கிறார்கள் ஆதலால் அவர்களை யானந்தசொரூபமென்று சாஸ்திரங்கள் சொல்லுகின்றது.

ச-ஙை. தேவர்களுக்குத் துக்கமுண்டென்கிற சாஸ்திரங்களுக்குத் தாற்பரியமேதென்னில்

உ-ம். எங்கேயெங்கே சரீரமுண்டோ அங்கேயங்கே துக்கமுண்டு ஆதலால் விராவரியகர்ப்ப சரீரமட்டுக்குந்துக்கமுண்டு ஆனபடியினால் சரீரமுத்தியார்த்தமா யெத்தனத்தைச்செய்யக்கூடாது அசரீரமுத்திக்கே யெத்தனத்தைச்செய்யவேண்டுமென்றந்தச் சாஸ்திரங்களுக்குத் தாற்பரியம்

ச-ஙை. சரீரமுத்திபோல அசரீரமுத்தியென்றொன்றுண்டானால் அல்லவோ அசரீரமுத்திக்கு யெத்தனம் பண்ணவேண்டும் அசரீரமுத்தியென்றொன்றுண்டோவென்னில்

உ-ம். உண்டு

ச-ஙை. சரீரமுத்தியுண்டென்றதும் அசரீரமுத்தியில்லையென்றதும் பிரமாணமுண்டோவென்னில்

உ-ம். உண்டு, சரீரமுத்தியுடையோர் நக்ஷத்திரரூபமாய்ப் பிரத்தியட்சமாய்த் தெரிகிறதுபோல அசரீரமுத்தியுடையோர் தெரியவில்லை அன்றியும் யோகீஸ்வரான் யோகமகிமையினாலே லோகாந்தரங்களுக்குப் போய்ச்சரீரமுத்தியுடையவர்களைக்கண்டு வந்தார்களென்று சாஸ்திரங்களில் சொல்லுகின்றபடி அசரீரமுத்தியுடையவர்களைக்கண்டு வந்தோமென்று சொல்லாதபடியினாலும் சரீரமுத்தியுள்ளவர்கள்தான் அனேககாலமிருந்து வந்தோமென்று சாஸ்திரங்களிற் சொன்னதுபோல அசரீரமுத்தியுள்ளவர்கள்தான் அனேககாலம் அசரீரமுத்தியாயிருந்து வந்தோமென்று சாஸ்திரங்களிற் சொல்லாமையினாலும் சரீரமுத்தியுண்டு அசரீரமுத்தியில்லையென்று சொல்லலாம் ஆனாலுமப்படி சொல்லக்கூடாது.

ச-ஙை. அதெப்படியென்னில்

உ-ம். சுழுத்திசுகம் சமஸ்தபிராணிகளுக்கு மெப்படி பிரத்தியட்சமோ அதுபோல அசரீரமுத்தியும் பிரத்தியட்சம்

ச-கை. சுழுத்திசுகந்தான் பிரத்தியட்சம் முத்திசுகமும் பிரத்தியட்சமாகுமோவென்னில்

உ-ம் அத்துவிதசுக சொருபமாயிருக்கப்பட்டது சர்வசுழுத்தியிலும் சமனாயிருக்கிறபடியினால் உனக்குச்சுழுத்திசுகம் பிரத்தியட்சமாகும்போது முத்திசுகமும்பிரத்தியக்ஷமாகும்.

ச-கை. சுகப்பிரத்தியக்ஷம் சுழுத்தியிற்சமனாயிருக்கிறபடியினால் சுழுத்தியேமுத்தியென்று சொல்லலாமோவென்னில்

உ-ம். சுழுத்தியினிடத்தி லஞ்ஞானமும் உற்பத்திக்குஸ்தானமுமாயிருக்கிறபடியினாலும் முத்தியிலஞ்ஞானமும்உற்பத்திக்குக் காரணபீசமுமில்லாதபடியினாலும் சுழுத்தியேமுத்தி யென்பதுகூடாது, ஆகையால்சுழுத்தி சுகத்தைப்போல முத்திசுகமும் பிரத்தியக்ஷமானபடியினால் சரீரமுத்தியைப் பார்க்கிலும் அசரீரமுத்தியே பிரத்தியக்ஷம், யோகியானவன் அசரீரமுத்தனொக்கஷ்டு வந்துசொல்லாதபடியினாலும் அசரீரமுத்தியானவன்தான் அசரீரமுத்தியாயிருந்துவந்தேனென்று சொல்லாதபடியினாலும் அசரீரமுத்தியுண்டென்று சொல்லப்பட்டது, சரீரமுத்தியுண்டென்றதில் எந்தசாஸ்திரங்கள் பிரமாணமாய்ச் சொல்லப்படுகின்றதோ அதுவெல்லாஞ் சொர்க்கலோகவிஷயமாய் அனித்தியமாய் பிரத்தியக்ஷமாய்க் கண்டபடியினாலும் இதுபோல பிரம்மலோகாதிகள் விஷயமாகாதபடியினாலும் இந்தசாஸ்திரங்கள் சரீரமுத்தியுண் டென்றதில் பிரமாணமாகாது சாஸ்திரமாத்திரமே பிரமாணம் சாஸ்திரமன்றிப் பிரமாணாந்தர மில்லாமையினாலும் அசரீரமுத்தியுண்டென்றதில் சாஸ்திரயுத்தியனுபவமொத்திருக்கிறபடியினாலும் அசரீரமுத்திநிமித்தமே யெத்தனம் பண்ணவேண்டும் சரீரமுத்திநிமித்தமெத்தனம் பண்ணவேண்டியதில்லை அப்படி யெத்தனித்தாலும் துக்கம்போகாதென்று சாஸ்திரங்களாலும் யுத்தியினாலும் தெரிகின்றது

ச-கை. அதற்குஅனுபவமேதென்னில்

உ-ம். சுழுத்தியிற் சரீரமில்லாதபடியால் துக்கமில்லை, சாக்கிரசொப்பனத்தில் சரீரமிருக்கிறபடியால் துக்கமனுபவிக்கப்படுகின்றது, ஆதலால் சரீரமெங்கே யுண்டோ அங்கேயெல்லாந் துக்கமுண்டு, சரீரமெங்கே யில்லையோ அங்கே துக்கமில்லையென்று அன்வயவெதிரேக வியாபகத்தினால்சித்தம், இப்படியே

ஆத்மாவுக்கு துக்கம் சரீரத்தினாலேயே வருகிறபடியால் துக்கம்சுபாவீகமென்பது கூடாது ஆகந்துகமென்றே சொல்ல வேண்டும்

ச-கை. ஆனால்இந்தச்சரீரம் எதினால்வருகிறதென்னில்

உ-ம். கர்மத்தோடுங்கூடிய பஞ்சீகிருதபஞ்சமகா பூதங்களினால வருவதாய்த்தோற்றுகின்றது.

ச-கை. அப்படியேன் சொல்லவேண்டும் கேவலம்பஞ்சீகிருத பஞ்சமகா பூதங்களினாலேயே சரீரம்வருகிறதென்று சொல்லக்கூடாதோவென்னில

உ-ம். சொல்லக்கூடாது, எங்கும்பஞ்சீகிருத பஞ்சமகா பூதங்களிருக்கிறபடியினால் அங்கங்கே சரீரம பிறக்கவேண்டும் அப்படியில்லாதபடியினால் கேவலம்பஞ்சீகிருத பஞ்சமகா பூதங்களினால் சரீரம்வருமென்பது கூடாது

ச-கை. அப்படிச்சொல்லவில்லை பஞ்சமகாபூதங்கள் சுக்கிலசோணிதாகாரமாய் எங்கேபரிணமிக்கின்றதோ அங்கேசரீரம் பிறக்குமென்று சொல்லுவோமேயென்னில்

உ-ம். சொல்லக்கூடாது,நித்தியமும் ஸ்திரீ புருஷாளுக்குச்சையோகத்தினால் சுக்கிலசோணிதம் பிறக்கின்றது அங்கேசரீரமுண்டாகவில்லை ஆகையாலப்படியுஞ் சொல்லக்கூடாது

ச-கை, அங்கே சுக்கிலசோணித மில்லையென்று சொல்லுவோமேயென்னில்

உ-ம். அப்படியானால் ஸ்திரீபுருஷாளுக்கு ரதியில்லாமற்போக வேண்டும்ஆகையால் சையோகமில்லையென்பதுகூடாது

ச-கை ஆனால்சுக்கிலசோணிதமே தேசகாலங்களையபேக்ஷித்து சரீராகாரமாகிறதென்று சொல்லுவோமேயென்னில்

உ-ம். அப்படியுஞ் சொல்லக்கூடாது சொன்னால் பிராணிகளுக்கு வைசித்திரியமில்லாமற் போகவேண்டும்

ச-கை. ஆனால்பிராணிகளுக்குவைசித்திரியமுண்டோவென்னில்

உ-ம். ஒருசரீரத்தைப்போலொரு சரீரமில்லாத படியினாலுண்டு

ச-கை ஆனால்வைசித்திரியம் தேசகாலங்களினால் வருகிறதென்று சொல்லுவோமேயென்னில்

உ-ம். தேசகாலங்கள் சர்வப்பிராணிகளுக்குஞ் சாதாரணகாரணமாயிருக்கிறபடியினால தேசகாலங்களினால் ஜெகத்துவைசித்திரியம் வருகிறதென்பதுகூடாது.

ச-கை. தேசகாலங்களுஞ் சாதாரணகாரணமாகட்டும் அதுகளினால் ஜெகத்துவைசித்திரியமும் வரட்டுமேயென்னில்

ச-கை. புண்ணியவுக்ருஷ்ட பலமேதென்னில்

உ-ம். இரணிகர்ப்பாதிசரீரப்பிராப்தி

ச-கை. புண்ணியமத்திமபலமேதென்னில்

உ-ம். தேவேந்திராதிசரீரப்பிராப்தி

ச-கை. புண்ணியசாமானிய பலமேதென்னில்

உ-ம். யக்ஷராக்ஷசகின்னர கிம்புருஷபிசாசாதிசரீரப்பிராப்தி

ச-கை. பாபவுக்ருஷ்டபலமேதென்னில்

உ-ம். பிராணிகளுக்குத்துக்கத்தை யுண்டாக்கப்பட்டதேள்பாம்பு கொசுகு மூடு புலிகரடி முதலிய சரீரப்பிராப்தி

ச-கை. பாபமத்திமபலமேதென்னில்

உ-ம். புளியமரம் மாமரம்பனைமரம் தென்னைமரம் எருமைபருந்துமுதலிய சரீரப்பிராப்தி

ச-கை. பாபசாமானிய பலமேதென்னில்

உ-ம். பசு ஆனை குதிரை அசுவதரி முதலியசரீரப்பிராப்தி

ச-கை. மிசிரவுக்ருஷ்டபலமே தென்னில்

உ-ம். நிஷ்காமபுண்ணியகர்மபலத்தினால் சித்தசுத்திவந்து சித்தசுத்தித்துவாரா சாதனசதுஷ்டய சம்பத்திவந்து சாதனசதுஷ்டய சம்பத்தித்துவாரா சற்குருவுமுண்டாகிச் சற்குருவைத்துவாரா சிரவணமனன நிதித்தியாசனமுண்டாகிச் சிரவணமனன நிதித்தியாசனத்துவாரா அபரோட்சஞானம்வந்து அபரோட்சஞானத்துவாரா சீவன்முத்திசுகத்தைப் பெறப்பட்ட சரீரப்பிராப்தி.

ச-கை. மிசிரமத்திமபலமேதென்னில்

உ-ம். சுபாசுபகர்மத்திற்கு உசிதமானகாரியகரம் மயோக்கியமான சரீரப்பிராப்தி

ச-கை. மிசிரசாமானிய பலமேதென்னில்

உ-ம். சண்டாளபாண்ட குஷ்டபெருவியாதியாசரீரப்பிராப்தி ஆகையால் விவேகியானவன் கர்மபலதாரதம்மியங்களை விசாரித்து மிசிரவுக்ருஷ்ட கர்மத்திற்கே யெத்தனம் பண்ணவேண்டும்.

ச-கை. இந்தப்புண்ணிய பாபமிசிரமானமூன்று கர்மமுமெதினாற் செய்யப்படுகின்றதென்னில்

உ-ம். திரிவிதகரணங்களாற் செய்யப்படுகின்றது

ச-கை. சமஸ்தபிராணிகளும் நானிந்தக்கர்மம் பண்ணினேனென்று சொல்லுகிறார்கள் அவர்களுபலத்தினால் ஆத்மசுபாவமாய்க் கர்

ச-கை-வாக்கினுற்செய்கிறபுண்ணியகர்மமாவதேதென்னில்.

உ-ம்-வேதாத்தியயனம் சாஸ்திரபாடம்காயத்திரிமந்திரமுதலியஜெபங்கள்பகவந்நாமகீர்த்தனைகள் பரோபகாரவார்த்தைகளிவை முதலியவைகளாம்.

ச-கை-வாக்கினுற்செய்கிறபாபகர்மமாவதேதென்னில்-

உ-ம்- சர்வதா பெரியோர்களைத்தூஷிக்கிறதுபிறனைச் சொல்லவொணாத்தைசொல்லுகிறது அசத்தியஞ்சொல்லுகிறது ஒன்றைக் காட்டியொன்றைச்சொல்லுகிறது இதுமுதலியவைகளாம்,

ச-கை, வாக்கினுற்செய்கிறமிச்ரகர்மமாவதேதென்னில்.

உ-ம்-வேதாத்தியயனசாஸ்திரபாடஜெபாதிகாலங்களில்லௌகீகவார்த்தைபேசுகிறது முதலியவைகளாம்.

ச-கை காயத்தினுற்செய்கிறபுண்ணியகர்மமாவதேதென்னில்.

உ-ம் புண்ணியதீர்த்த ஸ்நானம் குருசேவைதரிசனம் அங்கப்பிரதக்ஷிணம் பிறரைவருத்தாமை இதுமுதலியவைகளாம்.

ச-கை-காயத்தினுற்செய்கிறபாபகர்மமாவதேதென்னில்

உ-ம். சார்வதாபிறரைவருத்துகிறது பரஸ்திரீகளைக்கூடுகிறது பரதிரவியந்திருடுகிறது துஷ்டசாவகாசமாய்த்திரிகிறது இதுமுதலானவைகளாம்

ச-கை-காயத்தினுற்செய்கிற மிச்ரகர்மமாவதேதென்னில்.

உ-ம்- பிராமணபோஜனநிமித்தம் பிராமணரைப்பிடிக்கிறது பரதிரவியத்தையபகரித்துத்தண்ணீர்ப்பந்தல்வைக்கிறது பரதிரவியத்தைக்கிரகித்துக் கோயில்குளம்மட முதலானதுகள் கட்டுகிறது ஆற்றைப்பிடித்துக்குளம்வெட்டுகிறது பரருடையபூமியைப்பறித்துக்கோயிலுக்குமடத்துக்குவிடுகிறது இதுமுதலானவைகளாம்

ச-கை. இந்தவிசாரத்திற்குப் பலமெத்தனைவகை யென்னில்,

உ-ம், முக்கியமென்றும் அவாந்தரமென்றுமிரண்டுவகை.

ச-கை, முக்கியபலமாவதேதென்னில்,

உ-ம்- இந்தத்திரிவிதகர்மங்களையுந் திரிவிதகரணங்களேசெய்கின்றனவென்றும் அகர்த்தாவாகிய ஆத்மசொரூபமேநானென்றும் நிச்சயம் வருவதேமுக்கியம்

ச-கை- அவாந்தரபலமாவதேதென்னில்-

உ-ம்- அப்படிப்பட்டநிச்சயம் வந்தும்திரிவிதகரணங்களைப் புண்ணியகர்மத்தில் விடவேண்டுமென்றும் பிரமாதவசத்தினுல் புண்

ருத்திக்குக்காமமென்றும் தான்சம்பாதிக்கின்ற ஒருவஸ்துவினிடத்தில் எவனொருவன்விக்கினம்பண்ணுகிறானோ அவன்பேரில்வியாக்கிரமரூபமாய்ச் சீறிவருகிறசித்த விருத்திக்குக்குரோதமென்றும், அப்படிப்பிராயாசையடைந்து சம்பாதித்தபொருள்களை எந்தவிஷயத்திலுஞ்செலவுபண்ணவொட்டாதென்றுவருகிற சித்தவிருத்திக்கு லோபமென்றும் தான்சம்பாதித்தபதார்த்தத்தினிடத்தில் பிரியமோதப்பிரமோதமாய் வருகிறசித்த விருத்திக்குமோகமென்றும், ஐசுவரியகோலாகலத்தினுற்கொளித்து நித்தியாநித்தியங்களறியாமல் விகற்பித்துவருகிற சித்தவிருத்திக்குமதமென்றும், ஒருவன்தன்னிலும்அதிகபாக்கியவானுமாயிருந்தால் அவன்செல்வமதைப்பார்க்கச்சகிக்காமல் வருகிறசித்தவிருத்திக்குமச்சரமென்றும், பிறருக்குத்துக்கம் வரவேண்டுமென்றும் தனக்குவரக்கூடாதென்றும் எண்ணுகிறசித்தவிருத்திக்கு இரிஷையென்றும், தனக்குச்சுகம்வந்ததுபோல மற்றொருத்தருக்கு வரக்கூடாதென்று விகற்பித்துவருகிறசித்தவிருத்திக்கு அசூயையென்றும்தான்செய்யப்பட்டிருக்கிறதானதர்மங்களைப்பலபேருமறிந்து தன்னைச்சபாசென்றுமெச்சவேண்டுமென்றுவருகிற சித்தவிருத்திக்கு டம்பமென்றும் நானேதொட்டவன்மற்றவர்களெல்லாம் எனக்குச்சரியானவர்களாவென்றெண்ணுகிறசித்த விருத்திக்குத்தர்ப்பமென்றும், ஆனென்னையறியாயா நீயாஎன்னைத்தெண்டிக்கிறவன் நான்பிடித்தகாரியத்தை விடுகிறதில்லை யென்று விகற்பித்துவருகிற சித்தவிருத்திக்கு அகங்காரமென்றும் ஆசீர்வாதியமானசவுசாதிநியமங்களைச் செய்யவேண்டுமென்று வருகிறசித்தவிருத்திக்குஇச்சையென்றும் குருதேவதைகளிடத்தில் வருகிறவிருத்திக்குப் பத்தியென்றும் குருவேதாந்த வாக்கியாதிகளிலைகளிடத்தில் வருகிறவிசுவாசத்திற்குச்சிரத்தையென்றுஞ்சொல்லப்படும்.

௪௯. இப்படிவிசாரிக்குமுறைதனையேதென்னில்.

உ-ம்-இந்தராகத்துவேஷாதிகள் சிரோதயமாய் பெத்தனம்பண்ணுமேவெரும் ஆயினும் இராகமுதலயங்காரநோன பரிசன்மூன்றின் வசத்தனாய் ஒருபுருஷன்திரிவிதகரணங்களினாலுந்திரிவிதகர்மங்களைச்செய்வானாகில் அவனுக்குராகத்திலிருந்துவிவிர்த்திபெத்தக்காலத்திலு மில்லலே

உ-ம், சோபனமென்றும்சுபமென்றுஞ்சங்கைதயென்றும்மேலக வஸ்துசு
முகத்திற்கந்தப்பெயரெப்படிவந்ததோ அதுபோல ஆசாரஜன்னி
யமானதேகேந்திரியாதிசங்கத்திற்குந் தொழில்விகாரத்தினிடத்தில்
ஐதிகமேபிராமணனென்றுபெயர் அதுபோலக்ஷத்திரியனென்றும்வை
சியனென்றுஞ்சூத்திரனென்றும் ஸ்திரீயென்றும் புருஷனென்றுந்தீ
ட்சிதனென்றுஞ்சாஸ்திரியென்றும் புராணிகனென்றும் அவதானி
யென்றும்ஜீவனென்றும்பாகவதனென்றும் தமிழனென்றும் தெலுங்க
னென்றும் இதுமுதலானசமஸ்தநாமங்களுந்தேக கேந்திரியாதிசங்கவி
ஷயத்திலேயைதிகமாய் வருகிறபடியினால்பிராமணத்துவம் தேகேந்
திரியாதிசங்கத்திற் கேயல்லாமலாத்மாவுக்குக்காலத்திரயத்திலுமில்லை
இப்படிபகுத்தறியாமலிருக்கிறதேயவிவேகம் இந்தவவிவேகத்தினு
லபிமானம்வருகின்றது

ச-கை. இப்படிவிசாரிக்கற்குப்பலமேதென்னில்.

உ-ம்-ஆத்மாவுக்குக்காலத்திரயத்திலும் பிராமணத்வாதிகளில்லையென்று
ம்தேகேந்திரியாதிகளுக்கேயைதிகபிராமணத்வாதிகளென்றுமறிவதேபலம்

ச-கை இந்தவவிவேகமெதினால்வந்ததென்னில்.

உ-ம். அஞ்ஞானத்தினால்வந்தது.

ச-கை. அஞ்ஞானசொரூபமேதென்னில்.

உ-ம்-தன்னைத்தானறியாமலிருக்கிறதேயஞ்ஞானம்

ச-கை தன்னைத்தானறியார்களென்று சொல்லலாமாவென்னில்,

உ-ம் சொல்லலாமெப்படியென்றால்நான்பிராமணன்நான்க்ஷத்திரியன்நா
ன்வைசியன்நான்சூத்திரன்நான்இக்கர்மத்திற்கர்த்தனானவன் இன்
னகோத்திரனென்றுஇந்தச்சரீரத்தையேயாத்மாவாகவறிகிறார்களல்
லாமல்சரீரவன்னியரான ஆத்மாவையாருமறியமாட்டார்கள்.

ச-கை- சாஸ்திரிமார்கள்சரீரவன்னியமான ஆத்மாவுண்டென்றுசொல்லியி
ருக்க, யாருமறியார்களென்றெப்படிசொல்லலாமென்னில்,

உ-ம் சொல்லலாமெப்படியென்றால்கர்த்தாபோக்தாவாய்ப்பரிச்சின்னனுய்
காலாந்தரத்தினும்பிறந்திறக்கப்பட்ட ஜீவனையாத்மாவாகவறிகிறார்க
ளேயல்லாமல் அகர்த்தா அபோக்தா அபரிச்சின்னன் அசங்கன் அசம்சா
ரி அத்துவிதனென்னப்பட்டவேதாந்தவேத்தியனுனபிரத்தியோகாத்மா

ச-கை, போனால்போகட்டுமேயென்னில்.

உ-ம், ஆத்மத்தியை பிரதிபாதிக்கிற சுருதிகளுக்கு ப்பீபரீதம்வரும்.

ச-கை, ஆனால் அபின்னமென்று சொல்லலாமேயென்னில்.

உ-ம், மாயைக்குச் சேதனத்துவமுண்டாகி அசேதனத்துவம் நிவர்த்திக்கும் ஆத்மாவுக்குஞ் சேதனசேதன சொரூபம்வரும் அப்போது மாயையை யென்றுசொல்லாமல் ஆத்மாவென்று சொல்லவேணும்,

ச-கை, அப்படிசொல்லுவேமேயென்னில்,

உ-ம், மாயை பிரகிருதி பிரதானம் அவித்தை பிரளயம் தமசு மகாசமு த்தி அஞ்ஞானமென்று ஆத்மப்பிரதிபாதகசுருதிக்கனிவேயானசத்தசுரு தி றும் சொல்லுகிறபடியாலாத்மாவென்று சொல்லக்கூடாது.

ச-கை, ஆனால்பின்னாபின்னமென்று சொல்லுவோமேயென்னில்

உ-ம், அப்படியுஞ்சொல்லப்படாது.

ச-கை, எப்படிதான்சொல்லவேணுமென்னில்

உ-ம், அநிர்வசனீயமென்றேசொல்லவேணும் அந்த அநிர்வசனீயமான அஞ்ஞானத்தினால்விவேகமும்அதனால்அபிமானமும்அதனால்ராகத்து வேஷாதிகளும் அதனால்கன்மமும் அதனாற்சரீரமும் அந்தச்சரீராபி மானத்தினால் துக்கமும்வருகின்றது.

ச-கை- அந்தத்துக்க நிற்கு ஆத்தியந்திகநிவிர்த்தி யெப்போதுவருமென் னில்.

உ-ம்- சர்வாத்மனுக்சரீரபரிக்கிரகமில்லாமற்போனால்வரும்-

ச-கை- சரீரபரிக்கிரகஞ்சர்வாத்மனுக்கெப்போதுபோமென்னில்-

உ-ம்- ராகத்துவேஷங்கள்போனாற்போம்-

ச-கை- அவையெப்போதுபோமென்னில்-

உ-ம்- அபிமானம்போனாற்போம்

ச-கை- அஃதெப்போதுபோமென்னில்,

உ-ம்- அவிவேகம்போனாற்போம்,

ச-கை- அஃதெப்போதுபோமென்னில்,

உ-ம்-அஞ்ஞானம்போனாற்போம்,

ச-கை- அஃதெப்போதுபோமென்னில்,

உ-ம்- சர்வாத்மனுக்அத்துவிதப்பிரமாபிக்யப்பிரத்தியக்ஷஞானம்வந்தாற் போமன்றிமற்றோருபாயத்தினாலும்போகாது,

ச-கை- கன்மத்திலஞ்ஞானம்போமென்று சொல்லாமேயென்னில்,

வதா ஆத்மானாத்மவிசாரம் பண்ணவேண்டும் அப்படியில்லாமல் சம்சயவிபரீதபாவனைநீக்காத வாசாஞான ஆசிரியருந் தத்துவார்த்தைப்பிரித்துயிர்க்குணபாவத்தை அறிவிக்கமாட்டாதவரும் நிஷ்களத்திற்செல்லுமடையவும் வழிகாட்டமாட்டாதவரும் டம்பவேஷமுடையவரும் கொக்கைப்போலசையாதிருந்து கிரியாதிகளிம்பரிசம்பண்ணுகிறவரும் மந்திரலய அட்டயோகங்களிலொருவகுப்பியத்தைச்சொல்லி அதிற்பழகப்பழக அந்தக்கரணவிருத்திகுவியமும் உபசாந்தமயக்கமுமுண்டாவதையே பொருளென்றறிவிக்கப்பட்டவருமாகிய ஆசிரியனைநம்பினால், கழுதைவாலைப் பிடித்துக்காவேரிக்கரையேறக்கூடாதுபோலவும்செல்லாதகாசுநோட்டக்காரருக்குஞ்செல்லாதுபோலவும்சித்திரசூரியனாலந்தகாரம்போகாதுபோலவும் அநுபவமேதிருமேனியாகாத குருசேவையினாலஞ்ஞானம்போகாதுசம்சயமுநீங்காதென்றுசகலவேதாந்தங்களுஞ் சொல்லப் படுகின்றது, ஆகையினால் சொப்பிரகாசசொரூபமே திருமேனியாகிய காரணகுருவை நம்பினால் அப்படிநம்பினசீஷனைவீட்சித்து அவனுடைய அஞ்ஞானமும் அதனால்வரும் அவிவேகமும் அதனால்வருங்கன்மமும் அதனால்வருஞ்சரீரமும் அதனால்வருந்துக்கமும் அத்தியாசத்தினாலாரோபிதமானதென்று சந்தேகவிபரீதமற உள்ளங்கைநெல்லிக்கனிபோலநுபவமாயெடுத்தறிவிப்பார் அப்படியறிவித்தவிடத்தில் அவன்சமுசாரத்திலிருந்துவிடுபட்டுச்சீக்கிரமாகச் சீவன்முத்திசுகத்தைப்பெறுவானென்று சகலசுருதிஸ்மிருதியிதிகாசபுராணாதிகளிலுஞ் சொல்லப்படுகின்றது இதிற்சம்சயமில்லை சித்தம்.

இராகத்துவேஷநிருபகம் முற்றிற்று.

எட்டாவது.

## ஆத்மானாத்மவிசாரநிருபகம்.

ச - சை. ஆத்மானாத்மவிசாரம் பண்ணவேண்டுமென்று சுருதியாதிகளிற் சொல்லுகின்றபடியால் ஆத்மாவாவதேதென்னில்.

உ - ம். சரீரத்திரயாதிக்கும்பஞ்சகோசத்திற்குமன்னியமாய் அவஸ்தாத்திரயத்திற்குஞ் சாட்சியாயிருக்கிறசச்சிதானந்த சொரூபமேயாத்மாவென்றுசொல்லப்படும்.

ச - சை. அனாத்மாவாவதேதென்னில்.

ச-ங்கை-ஆனால் எந்த வ்யாப்தியினாலீஸ்வரத்வமு மெந்தவ்யாப்தியினாற் ஜீவத்வமும்வருகிறதென்னில்.

உ-ம்-சமஷ்டி-சரீரவ்யாப்தித்திரயத்தினா லீஸ்வரத்துவமும்வியஷ்டிசரீரவ்யாப்தித்திரயத்தினாற்ஜீவத்துவமும்வருகின்றது

ச-ங்கை-ஈஸ்வரனுக்குச்சமஷ்டி காரணசரீரமாத்திரம் போதாதோ வென்னில்

உ-ம்-போதும்

ச-ங்கை-சமஷ்டிஸ்தூலஸூக்ஷ்மசரீரங்களேன் சொல்லவேண்டுமென்னில்

உ-ம் உபாஸனைநிமித்தியமாய்ச்சொல்லப்படுகின்றது.

ச-ங்கை-அதெப்படியென்னில்

உ-ம்-முக்கிய அதிகாரியானவர்களுக்குச்சமஷ்டிகாரணசரீரவ்யாபகமான ஆத்மாவையே யுபாசிக்கப்படுமென்றுசொல்லப்படும் இவருக்கே ஈஸ்வரனென்றும் அந்தரியாமியென்றும் அவ்வியாகிருத னென்று மூன்றுபெயர்,

ச-ங்கை-இவருக்குச்சமஷ்டிகாரண சரீரத்தில் அபிமானமுண்டோவில்லையோவென்னில்

உ-ம்-அபிமானமகங்காரதர்மமானபடியினா லவ்வவஸ்தையி லகங்காரமில்லை ஆகையாலபிமானமுண்டென்று சொல்லக்கூடாது.

ச-ங்கை-பின்னை எப்படியென்னில்.

உ-ம்-ஆத்மாவுக்குச்சமஷ்டிகாரண சரீரவிசிஷ்டமாத்திரத்தாலேயீஸ்வரத்துவமென்றுசொல்லவேண்டும் இந்தவீஸ்வரனை யுபாசிக்கவல்லமையில்லாதவர்களுக்கு அவ்வீஸ்வரனுக் கங்கார்யமான சமஷ்டிஸூக்ஷ்மசரீரவ்யாபிகனே ஈஸ்வரனென்றுபாசிக்கும்படி சுருதிசொல்லுகின்றது, அவ்வீஸ்வரனுக்கிரணியகர்ப்பனென்றுஞ் சூத்திராத்மாவென்றும் பிராணனென்றுமூன்றுபெயர்.

ச-ங்கை-இவருக்குச்சூக்ஷ்மசரீரத்திலபிமானமுண்டோ வில்லையோவென்னில்.

உ-ம்-அபிமானத்திற்காசிரயமானஸ்தூலசரீரமில்லாதபடியினால் அபிமானமுண்டென்றுசொல்லக்கூடாது,

ச-ங்கை-பின்னையென்னவென்னில்.

களை யுபாசிக்கின்றார்களோ அந்தந்த மூர்த்திவழியாக அந்தரியாமி யான ஈசுவரனையே யுபாசிப்பதாகும்,

ச-கை-இந்தமூர்த்திகளையுபாசிக்கவேண்டுமென்று சொல்லுகிற சுருதிக ளுக்குத்தாற்பரியமேதென்னில்

உ-ம்-துவாராத்துவாரா அந்தரியாமியான சொரூபத்தையே யறியவே ண்டுமென்றுதாற்பரியம் இப்படியேயாத்மாவுக்குச்சமட்டிசரீரஸ் திரயவுபாதியினாற்சிவத்துவமும்வந்தது

ச-கை-சிவத்துவத்துக்குச்சரீரத்திரவியம்வேண்டுமாவென்னில்.

உ-ம் வேண்டும்சீவன் அந்தக்கரணப்பிரதிவிம்பனானதினால் சூட்சுமசரீ ரம்வேண்டும் ஸ்தூலசரீரமில்லாவிட்டாலகர்த்துருத்வம் கூடாதப டியினால் ஸ்தூலசரீரம்வேண்டும்காரியமான ஸ்தூலசூட்சும சரீர ங்களை காரணத்தைவிட்டிராதபடியினால் இவ்விரண்டுக்கும் காரண மானகாரணசரீரமும்வேண்டும்,

ச-கை-சீவனுக்குச்சரீரத்திரயத்திலபிமானமுண்டோ வில்லையோவென் னில்

உ-ம்-அபிமானமில்லாமற்கர்த்ருத்வங்கூடாதபடியினால்உண்டு.

ச-கை-ஆனால்இந்தச்சீவனுக்கென்னபேரென்னில்

உ-ம்-சாக்கிராவஸ்தையில் வியஷ்டிஸ்தூலசரீரத்தி லபிமானி கர்த்தாவா னசீவனுக்கு விசுவன்வியவகாரிகன் சிதாபாசனென்றுமூன்றுபெ யர் சொப்பனாவஸ்தையிலவியட்டி சூட்சுமசரீரத்திலபிமானி கர்த் தாவான சீவனுக்குத்தைசதன் பிராதிபாதிகன் சொப்பன கற்பித னென்றுமூன்றுபெயர். சுழுத்தியவஸ்தையில்வியட்டிகாரணசரீர த்திலபிமானி கர்த்தாவான சீவனுக்குப்பிராஞ்ஞன் பாரமார்த்திகன் அவிச்சின்னனென்றுமூன்றுபெயர்

ச-கை-ஒரு ஆத்மாவுக்கே ஈஸ்வரத்வமென்றும் சீவத்துவமென்றும் இர ண்டுரூபமெப்படிகூடுமென்னில்.

உ-ம்-கூடும்திருஷ்டாந்தத்திலொருதேவதத்தனுக்கே புத்திரனையபேட்சி த்துத்தகப்பனென்றும் பேரனையபேட்சித்துப்பாட்டனென்றும்வ ந்ததுபோல ஒரு ஆத்மாவுக்கே வியட்டியுபாதியையபேட்சித்துச் சீவனென்றுஞ் சமட்டியுபாதியையபேட்சித்து ஈஸ்வரனென்றுஞ் சொல்லப்படும்.

ச-கை - தகப்பன் பாட்டனென்று சொல்லுகிற தர்மத்தை யுடைய தேவதத்தனிடத்திற்சிற்சில சர்வசாட்சிக்கு வ்யாபகன் ரேறு

ம்ஜீவத்வவீஸ்வரத்வ தர்மங்களுடன் கூடியிருக்கிற ஆத்மாவினிடத்திலிருக்கிற சர்வஜ்ஞத்வவ்யாதிகள் காணப்படுகிறபடியினால் அந்த த்ருஷ்டாந்தமெப்படிகூடுமென்னில்.

உ-ம், ஒரு ஆத்மாவுக்கே யிரண்டுபாதியினாலீஸ்வரத்வமுஞ்ஜீவத்வமும் வருமென்பதற்காக ஏகதேவதத்த த்ருஷ்டாந்தஞ்சொன்னோம் இனி மகத்வோபாதியினால் ஆத்மாவுக்குச் சர்வஜ்ஞத்வமும் அணுத்வோபாதியினால் கிஞ்சிஜ்ஞத்வமும் வரலாமென்பதற்குவேறொரு த்ருஷ்டாந்தஞ்சொல்லுகிறோம்.

ச-னை, அதெப்படியென்னில்,

உ-ம், விஸ்தாரமான ஜலத்திற்கு ஏரியென்றவுபாதியிலனேகதானிய முதலானதுகளை விளைவிப்பதற்கும் சமஸ்தபிராணிகளுக்கும் ஸ்நானபானாதிக்கிரியைகளைச் செய்விப்பதற்குஞ்சாமர்த்தியமுண்டு அற்பமான ஜலத்திற்குக்கடமென்றவுபாதியினால் ஸ்நானபானாதிமுதலானகிரியைகளுக்குமாத்திரம் உபயோகப்படுஞ்சாமர்த்தியமுண்டு, பின்னுமொரு அக்கினிக்கே தீவட்டியென்றவுபாதியினால் தூரமாயிருக்கிறபதார்த்தங்களைத் தெரியச்செய்கிறசாமர்த்தியமும் விளக்கென்றவுபாதியினால் சமீபத்திலிருக்கிற பதார்த்தங்களைத் தெரியச் செய்கிறசாமர்த்தியமுமுண்டு அதுகளைப்போல ஒரு ஆத்மாவுக்கே மகத்வமாகியசமஷ்டி சரீரவுபாதியினால் சர்வஜ்ஞத்வமும் அணுத்வமாகியவியஷ்டி சரீரவுபாதியினால் கிஞ்சிஜ்ஞத்வமும் வரும் அதனாலீஸ்வரத்வஜீவத்வமென்ற பேதம் வந்தது, பரமார்த்தத்திலீஸ்வரஜீவர்களுக்கு அபேதமேயன்றிப் பேதமில்லையென்று சுருதியாதிகளிற் சொல்லுகின்றது.

ச-னை, விருத்ததர்மத்திற்கூடியிருக்கிறஜீவேஸ்வரர்களுக் கெப்படி அபேதங்கூடுமென்னில்,

உ-ம், கூடும், பூர்வதிருஷ்டாந்தத்தில்விருத்ததர்மத்துடன்கூடின ஏரியென்றவுபாதியோடுசேர்ந்திருக்கிற ஜலத்திற்குங்கடமென்றவுபாதியோடு சேர்ந்திருக்கிற ஜலத்திற்கும்விருத்தாமிசங்களானஏரிகடமென்றவுபாதிகளைவிட்டு அவிருத்தாமிசங்களானஜலத்தினால் ஏகத்துவமுண்டானதுபோலும், விருத்ததர்மத்துடன்கூடின தீவட்டியென்றவுபாதியோடுசேர்ந்திருக்கிற அக்கினிக்கும் விளக்கென்றவுபாதியோடு சேர்ந்திருக்கிற அக்கினிக்கும் விருத்தாமிசங்களான தீவட்டி விளக்கென்றவுபாதிகளைவிட்டு அவிருத்தாமிசங்களான அக்கினிமாத்திரத்தினால் ஏகத்துவமுண்டாம்

வருகிறதுபோலும் விருத்தகர்மமானசர்வக்ஞத்வாதிகளுடன்கூடி யிருக்கிற சிவனுக்கும் விருத்தாம்சைகளான சர்வக்ஞத்வகிஞ்சித் ஞத்வவ்யாதிகளைவிட்டு அவிருத்தாம்சைகளானசைதன்ய மாத்தி ரத்திற்கு ஏகத்வஞானங்கூடும், இந்த அர்த்தமே சகலசாஸ்திரங்க ளிலுஞ்சோயந்தேவதத்தா என்கிறதிருஷ்டாந்த பூர்வமாய்மகாவா க்கியத்திற்குஜகர்லட்சணை அஜகர்லட்சணை ஜகதஜகர்லட்சணைக ளால்சுருதியாதிகளிலர்த்தஞ்சொல்லப்படுகின்றது ஆதலால்இந்த ப்படிசொப்பிரகாசமேதிருமேனியானசற்குருவினால் விசாரித்து நானேபிரமமென்றும்நானேயீஸ்வரனென்றும் சம்சயமில்லாமலு ம் உபாதியானவகம்பாவமில்லாமலும் அவரறிந்தோர்களேயவர்க ளேசீவன்முத்தரென்று சுருதிஸ்மிருதியாதிகளிற்சொல்லப்படுகி ன்றது இதிற்சம்சயமில்லைசித்தம்.

ஆத்மானாத்மவிசாரநிரூபகம்-முற்றிற்று.

---

ஒன்பதாவது.

# சரீரத்திரய விலக்ஷணநிரூபகம்.

ச-கை, ஆத்மாசரீரத்திரயவிலட்சணனென்றுசுருதிகளிற்சொல்லுகிற படி, சரீரத்திரயவிலட்சணனான ஆத்மாவைச்சரீரத்திரயங்களையறி யாமல் அறியப்படாதாகையினால் சரீரத்திரயசொரூபமேதெ ன்னில்

உ-ம், ஸ்தூலசூட்சுமகாரணமென மூன்றுசரீரங்களாம்,

ச-கை, இவற்றுள்ஸ்தூலசரீரமாவதேதென்னில்.

உ-ம், கரசரணவயவங்களாய்ஸ்தம்பம்போற்றோற்றப்பட்டது.

ச-கை, சூட்சுமசரீரமாவதேதென்னில்,

உ-ம், பதினேழுஅவயவங்களுடன்கூடியிருக்கப்பட்டது,

ச-கை, காரணசரீரமாவதேதென்னில்,

உ-ம், அஞ்ஞானமேகாரணசரீரம்,

ச-கை, இவைகளுக்குச்சரீரமென்றுபெயரேதினால்வந்ததென்னில்,

உ-ம், சீரணித்துப்போகிறபடியினாற்சரீரமென்றுபெயர்வந்தது.

ச-கை, க்ஷீணித்துப்போகின்றதாவென்னில்,

உ-ம், போகின்றது அதைக்கிருத்திபூர்வகமாய்ச்சொல்லவேண்டும்,

ச-கை, அதெப்படியென்னில்,

உ-ம், இந்தஸ்தூலசரீரம் இளமையினாலும்நோயின்மையினாலும் அன்னசமமானதினாலும் விருத்தியாகின்றது அன்னமில்லாமையினாலும் அன்னமதிகமானதினாலும் வியாதியினாலும்முதுமையினாலும் க்ஷீணமாகின்றது,

ச-கை, சூக்ஷுமசரீரமெப்படியென்னில்,

உ-ம், ராகத்துவேஷாகாரமாய்ப்பரிணமிக்கிறது விருத்தி-அவற்றின்சங்கோசமே க்ஷீணத்துவம்,

ச-கை, ஆனால்காரணசரீரமெப்படியென்னில்,

உ-ம், அகமமகாரியவெனவிகற்பமானதினாற்பரிணமிக்கிறது விருத்தி-அவற்றின்சங்கோசமே க்ஷீணத்துவம்,

ச-கை, சூக்ஷுமகாரணசரீரத்திற்கு விருத்திக்ஷீணத்துவம்எங்கேகாணப்படுகிறதென்னில்,

உ-ம், அஞ்ஞானிகளிடத்தில் விருத்தியும்முமுக்ஷுக்களிடத்திற்சங்கோசமுங்காணப்படுகின்றது ஆகையினாலிதுகளுக்குஞ் சரீரமென்று பேர்வந்தது,

ச-கை, தேகமென்றுபெயர்வன்வந்ததென்னில்,

உ-ம், தெகிக்கப்படுகின்றபடியினால்தேகமென்றுபேர்வந்தது,

ச-கை, தெகிக்கப்படுகின்றதாவென்னில்,

உ-ம், தெகிக்கப்படுகின்றது,

ச-கை, எப்படியென்னில்,

உ-ம், அக்கினியிற்பஸ்மாகாரமாகத்தெகிக்கப்படுகின்றது,

ச-கை, ஸ்தூலசரீரமல்லவோதெகிக்கப்படுகின்றது ஆனால்சூக்ஷுமகாரணசரீரங்கள்தெகிக்கப்படுகிறதாவென்னில்,

உ-ம், அதுகளுந்தெகிக்கப்படுகிறது,

ச-கை, அதெப்படியென்னில்,

உ-ம், சர்வதா-தாபத்திரயங்களினால்தெகிக்கப்படுகிற சூக்ஷுமகாரணசரீரம்ஞானாக்கினியினால் தெகிக்கப்படுகின்றது ஆகையினாலிம்மூன்றுசரீரத்திற்குந்தேகமென்றுபெயர்வந்தது,

ச-கை, மூன்றுசரீரத்திற்குஸ்தூலசரீரமென்றுபேர்வந்ததென்னில்

உ-ம், மயிர்தோல்நரம்புதசைஎலும்புகொழுப்பு இந்தஆறும்ஸ்தம்பம் போற்பிரத்தியட்சத்தில் ஸ்தூலமாய்த் தோற்றுகிறபடியினால் ஸ்தூலசரீரமென்றுபெயர்வந்தது,

சங்கை, மத்தியசரீரத்திற்குச்சூட்சுமசரீரமென்றுபேர் ஏன்வந்ததென்னில்,

உ-ம், பூர்வசரீரம்போல் ஸ்தூலமாய்த்தோற்றாதபடியினால் சூட்சுமசரீரமென்றுபேர்வந்தது,

சங்கை, இதற்குலிங்கசரீரமென்றுபேர்ஏன்வந்ததென்னில்,

உ-ம், ஞானமானசத்தாதிவிஷயங்களை யறியப்பண்ணுகிறபடியினாலும் ஆத்மாவைலட்சணத்தினால் தெரியப்பண்ணுகிறபடியினாலும்லிங்கசரீரமென்றுபேர்வந்தது,

சங்கை, பச்சிமசரீரத்திற்குக் காரணசரீரமென்றுபேர் ஏன்வந்ததென்னில்,

உ-ம், இவ்விரண்டுசரீரங்களையும் பிறப்பிக்கிறபடியினாலதற்குக்காரணசரீரமென்றுபேர்வந்தது,

சங்கை, ஸ்தூலசரீரம் பிரத்தியட்சமாய்த்தெரிகிறபடியினால்உண்டென்றுசொல்லலாம் அதுபோல்சூட்சுமசரீரம் பிரத்தியட்சமாய்த்தெரியாதபடியினால் ஸ்தூலத்திற்கன்னியமான சூட்சுமசரீரத்தையெப்படியுண்டென்றுசொல்லுகிறதென்னில்,

உ-ம், பதினேழுவிதமானகாரியத்தைக்குறித்துச் சூட்சுமசரீரமுமுண்டென்றுசொல்லலாம்,

சங்கை, இந்தப்பதினேழுவிதமான காரியங்களுந்தூலசரீரத்தினாலேயே செய்யப்படுகிறதென்றுசொல்லுவோமேயென்னில்,

உ-ம், சுழுத்திமூர்ச்சைமரணம்வந்தபோது இந்தஸ்தூலசரீரத்தினாற் பதினேழுவிதகாரியமும்பண்ணவேண்டும்பண்ணாதபடியினால் ஸ்தூலசரீரகாரியமென்றுசொல்லக்கூடாது

சங்கை, மற்றெதினுடையகாரியமென்னில்,

உ-ம், ஸ்தூலத்திற்கன்னியமான சூட்சுமசரீரகாரியமென்றேசொல்லவேண்டும்,

சங்கை, ஸ்தூலத்தைவிட்டுச்சூட்சுமசரீரஞ் சுதந்தரமாயொருகாரியமுஞ் செய்யாதபடியினாற் சூட்சுமசரீரகாரியமென்றெப்படியறிகிறதென்னில்.

உ-ம், அறியலாமெப்படியென்றால் திருஷ்டாந்தத்தில் அக்கினியானது கட்டையையுமெரித்துச்சுட்டுந்தன்னுருவமாக்கிக்கொண்டு

யாகயாகாதிக் கிரியைகளைப் பண்ணினாலும் அந்தந்த யாகாதிக் கிரியைகள் கட்டளையின் காரியமல்லாது போலே சூக்ஷுமசரீரமும் ஞானத்தையாசிரயித்துப் பதினேழு விகாரமான காரியங்களைப் பண்ணினபோதும் கேவலமான ஞானத்திற் கன்னியமான சூக்ஷ்ம சரீரத்தின்காரியமென்றே யறியவேண்டும்.

ச-கை. ஆனால் பதினேழு விகாரமான காரியமேதென்னில்

உ-ம் காரணமுன்னிலேயாயறியவேண்டும்,

ச-கை- காரணமாவதேதென்னில்,

உ-ம்- பதினேழுவிதமுமாயங்கான சூக்ஷ்மசரீரமே காரணம்,

ச-கை- அதெப்படியென்னில்,

உ-ம்- ஞானேந்திரியபஞ்சகமுங் கன்மேந்திரிய பஞ்சகமும்பிராணாதிபஞ்சகமுஞ் சித்தத்தோடே கூடினமனமும் அகங்காரத்துடன் கூடின புத்தியுமாகியவிப் பதினேழுங்கூடிச் சூக்ஷ்மசரீரமென்னப்படும்,

ச-கை- ஞானேந்திரியபஞ்சகமாவதேதென்னில்,

உ-ம்- சுரோத்திரம் தொக்கு சக்ஷுசிங்குவை ஆக்கிராணம் ஆ ௫

ச-கை- சுரோத்திராதிகளுக்கு ஞானேந்திரியமென்னும் பேரென் வந்ததென்னில்,

உ-ம். சத்தாதி விஷயங்களைக் கிரகிக்கிறபடியினாலே ஞானேந்திரிய மென்னப் பேர் வந்தது,

ச-கை- இதற்கு ஞானோற்பத்தியெப்படிவந்ததென்னில்,

உ-ம். சாத்துவிககுணத்தினுற்பத்தியானதினாலே ஞானம்வந்தது,

ச-கை- கன்மேந்திரியபஞ்சகமாவதேதென்னில்,

உ-ம். வாக்கு பாதம் பாணி பாயுரு உபஸ்தம் ஆ ௫

ச-கை. இதற்குக் கன்மேந்திரியமென்னும் பேர் வந்ததேதென்னில்,

உ-ம் வசனாதிக்கிரியைகளைப் பிறப்பிக்கிறபடியினாலே கன்மேந்திரியமென்னப் பட்டது,

ச-கை. இதற்குக்கிரியோற்பத்தியெப்படிவந்ததென்னில்.

உ-ம் ராசதகுணத்தினுற்பத்தியானதினாலே கிரியோற்பத்திவந்தது

ச-கை- பிராணாதிபஞ்சகமாவதேதென்னில்,

உ-ம். பிராணன் அபானன் வியானன் உதானன் சமானன் ஆ ௫

ச-கை- இதற்குப்பிராணாதியென்னும் பேர் வந்ததென்னில்,

உ-ம்- தூலசரீரத்தைச்சீவிக்கப் பண்ணுகிறபடியால் பிராணனெனப் பேர்வந்தது,

ச-கை- மனம்புத்தியாவதேதென்னில்

உ-ம்- அந்தக்கரண விருத்திவிசேஷங்களேமனம் புத்தியென்னப் படும்,

ச-கை- ஆறாஞ்சுரோத்திரேந்திரியமெவ்வகைப்பட்டதென்னில்,

உ-ம்- சத்தங்களெல்லா மெதினாற்கிரகிக்கப்படுகிறதோ அதுவேசுரோத்திரேந்திரியம்

ச-கை- அந்தச்சத்தமெத்தனைவகைப்படுமென்னில்,

உ-ம்-லௌகீகம்வைதிகமென் றிரண்டுவகைப்படும்,

ச-கை- லௌகீகமாவதேதென்னில்,

உ-ம்- பிராகிருதரூபமானபதினெண்பாஷைகளும் லௌகீகம்,

ச-கை- வைதீகமாவதேதென்னில்.

உ-ம்- அப்பிராகிருதரூபமானவேதசாத்திரங்களனைத்துமே வைதீகம்,

ச-கை- இந்த லௌகீகமெத்தனைவிதமென்னில்,

உ-ம்-அனந்தவிதமாயிருக்கும்,

ச-கை. வைதிகமெத்தனைவிதமென்னில்,

உ-ம், அதுவுமனந்தவிதமாயிருக்கும் அன்றியில்பஞ்சீகிருதபேதத்தில்சத்தமிருபத்தைந்துவிதம் இத்தனைவிசயங்களு மெதினாற் கிரகிக்கப்படுகிறதோ அஃதே சுரோத்திரேந்திரியம்,

ச-கை, இந்தச்சுரோத்திரேந்திரிய மெங்கேயிருக்கிறதென்னில்

உ-ம், கர்ணஷஷ்குலியவச்சின்ன நபோதேசத்தையாசிரயித்திருக்கின்றது,

ச-கை- அந்தநபோதேசமேசுரோத்திரேந்திரியமென்றுசொல்லலாமே யென்னில்,

உ-ம். சுழுத்திமூர்ச்சைமரணமடைந்தசரீரங்களிலு மிருக்கிற நபோதேசத்தினாலுஞ் சத்தத்தைக்கிரகிக்கவேண்டும் அங்ஙனமில்லாதபடியினால் அந்தநபோதேசத்திற்கன்னியமாய் சத்தக்கிராகியசத்திமத்தாய் சூட்சுமமான ஒருவன்று நபோதேசத்தையாசிரயித்துக் கொண்டிருக்கிறது அதற்கே சுரோத்திரேந்திரியமென்றுபெயர் அதற்கதிட்டான தேவதை திக்கு அவ்வதிட்டானதேவதையினாற் பிரேரிக்கப்பட்ட சுரோத்திரேந்திரியஞ்சத்தமெல்லாமறிந்து ஞ்சீகிருத பேதசத்த மிருப்பதையுமறிந்துக்கொண்டேயிருக்கும்.

ச-கை- தொக்கிந்திரியமாவதேதெனனில்,

உ-ம்- பரிசமெல்லாமெதினாற்கிரகிக்கப்படுகிறதோ அதுவே தொக்கிந்திரியம்,

ச-கை, அந்தப்பரிசமெத்தனைவிதமெனனில்,

உ-ம், சீதமுஷ்ணம் சீதோஷ்ணம் மிருது கடினமென்றைந்துவிதம் அவற்றுள்ளுமொவ்வொன்றனேகவிதமாயிருக்கும்,

ச-கை, இந்தத்தொக்கிந்திரியமெங்கேயிருக்குமெனனில்,

உ-ம், தொக்கைச்சர்வத்திரவியாபித்துக்கொண்டிருக்கும்,

ச-கை, ஆனால்தொக்கையே தொக்கிந்திரியமென்று சொல்லலாமே யெனனில்.

உ-ம்- சூக்ஷ்மமான சரீரத்திலிருக்கின்ற தொக்கினாற்பரிசத்தைக்கிரகிக்கவேண்டும் அப்படியானால் அந்தத்தொக்குக்கன்னியமான ஸ்பரிசக்கிராகிய சத்திமத்தாய் சூக்ஷ்மமானவொருவஸ்து பிரகாசமில்லாததேசத்திலிருந்திரண்டுவெளாய்த் தொக்கைப்பரிசித்துக்கொண்டிருக்கிறது அதற்குத்தொக்கிந்திரியமென்றுபெயர். அதன்சத்திட்டானதேவதை வாயு அதன் அதிட்டானதேவதையினாற் பிரேரிக்கப்பட்டதொக்கிந்திரியம் பரிசத்தையெல்லாமறிந்து பஞ்சீகிருதபேதபரிசமிருப்பதையுமறிந்துக்கொண்டிருக்கும்,

ச-கை, சக்ஷுவிந்திரியமாவதேதெனனில்,

உ-ம்- ரூபமெல்லா மெதினாற்கிரகிக்கப்படுகிறதோ அஃதேசக்ஷுவிந்திரியம்,

ச-கை- அந்த ரூபமெத்தனைவகைப்படுமெனனில்,

உ-ம்- வெள்ளை சிவப்பு பச்சை மஞ்சள் கறுப்பு வகைகள் மிசிரம் அதன்கள்ளம் உயர்ச்சி தாழ்ச்சி இவையும் வண்ணங்கொள்ளாமனேக விதமாயிருக்கும் இத்தனைரூபங்களுமெதினால் தெரியப்படுகிறதோ அதுவேசக்ஷுவிந்திரியம்,

ச-கை, அதுவெங்கேயிருக்குமெனனில்,

உ-ம்- கருவிழியைவியாபித்துக்கொண்டிருக்கும்,

ச-கை ஆனால்கருவிழியேசக்ஷுவிந்திரியமென்று சொல்லலாமேயெனனில்,

உ-ம். சூக்ஷ்மமானசரீரங்களிலிருக்கிற கருவிழியினால் ரூபத்தையறியவேண்டும் அப்படியறியாதபடியினால் கருவிழிக்கன்னியமானரூபத்தைக்கிரகிக்கிறசத்திமத்தாய் சூக்ஷ்மமாயொருவஸ்துபிரகாச

ரோமகூபதேசத்திலிருந்து இரண்டுகைவராய்க்குவளை முன்னிலையிலங்க
க்ஷணத்தையாசிரயித்துக் கொண்டிருக்கிறது. அதற்கே சட்சுவிந்
திரியமென்றுபெயர். அதற்கதிஷ்டானதேவதைசூரியன் அவ்வதிஷ்டா
னதேவதையினும் பிரேரிக்கப்பட்டசட்சுவிந்திரியம் ரூபமெல்லாமறி
ந்து பஞ்சீகிருதபேதரூபமிருப்பதையுங்கிரகித்தறிந்துக் கொண்டிருக்
கும்,

ச-னை, சிங்குவையிந்திரியமாவதேதென்னில்,

உ-ம், ரசமெல்லா மெதினாற்கிரகிக்கப்படுகிறதோ அதற்கேசிங்குவையெ
ன்றுபெயர்.

ச-னை அந்தரசமெத்தனைவிதமாயிருக்குமென்னில்,

உ-ம். உப்பு புளிப்பு கார்ப்பு கசப்பு துவர்ப்பு தித்திப்பு என்றுஅறுவிதம்
அவற்றுளொவ்வொன்றநேகவிதமாயிருக்கும் இத்தனையுமெதினாற்
கிரகிக்கப்படுகிறதோ அதுவேசிங்குவேந்திரியம்

ச-னை, அது எங்கேயிருக்குமென்னில்,

உ-ம், நுனிநாவையாசிரயித்துக்கொண்டிருக்கும்,

ச-னை- ஆனால் நுனிநாவையேசிங்குவேந்திரியமென்று சொல்லலாமே
யென்னில்,

உ-ம்- சுழுத்திமூர்ச்சைமரண சரீரங்களிலிருக்கிற நுனிநாவினால்ரசங்க
ளெல்லாங்கிரகிக்கவேண்டும் அப்படி கிரகிக்காதபடியினால்அந்தநுனி
நாவுக்கன்னியமாய் ரசகிராஹ்யசத்திமத்தாய்சூட்சுமமாய் ஒருவஸ்து
கடாகாசத்தில்கோபதேசத்திலிருந்துஇரண்டுகைவராய்கந்தாலேஷ்
டத்தைப்பற்றி அந்தநுனிநாவையாசிரயித்துக்கொண்டிருக்கும் அத
ற்கேசிங்குவேந்திரியமென்றுபெயர், அதற்கதிஷ்டானதேவதை வருண
னான் அவ்வதிஷ்டானதேவதையினும் பிரேரிக்கப்பட்டசிங்குவேந்தி
ரியம்ரசங்களையெல்லாமறிந்துபஞ்சீகிருதபேதரசங்களையுங் கிரகித்து
க்கொண்டிருக்கும்,

ச-னை- ஆக்கிராணேந்திரியமாவதேதென்னில்,

உ-ம். சுகந்தந்துர்க்கந்தமெல்லாமெதினாற்கிரகிக்கப் படுகிறதோஅதற்கே
ஆக்கிராணேந்திரியமென்றுபெயர்,

ச-னை அதெத்தனைவிதமாயிருக்குமென்னில்,

உ-ம், சுகந்த துர்க்கந்த மிசிரகந்தமென மூன்றுவிதம் அவற்றுளொவ்
வொன்றநேகவிதமாயிருக்கும் இத்தனையுமெதினாற்கிரகிக்கப் படுகிற
தோ அதுவேஆக்கிராணேந்திரியம்,

ச-னை- அது எங்கேயிருக்குமென்னில்,

உ-ம்- உள்ளங்கையிலாசிரயித்துக்கொண்டிருக்கும்,

ச-கை- ஆனால்உள்ளங்கையேபாணீந்திரியமென்னலாமேயெனில்.

உ-ம்- ஸ்தூலத்திமூர்ச்சைமரணசரீரங்களிலிருக்கிற வுள்ளங்கையினாலுந்தானே இக்கிரியைகளைப்பண்ண வேண்டும் பண்ணா திருக்கிறபடியால்உள்ளங்கைக்கன்னியமாய்தானக்கிரியாசத்திமத்தாய் சூட்சுமமாய் ஒருவஸ்து முகாரவிந்தத்திலிருந்து உள்ளங்கையையாசிரயித்துக்கொண்டிருக்கும் அதற்கேபாணீந்திரியமென்றுபெயர் அதற்கதிஷ்டானதேவதை இந்திரன் அவ்வதிஷ்டானதேவதையினால் பிரேரிக்கப்பட்டபாணீந்திரியங் கொடுக்கல் வாங்கலாகியகிரியைகளைச்செய்யும்.

ச-கை. பாதேந்திரியமாகிறதேதென்னில்,

உ-ம்- கமனாதிகிரியைகளையெதினாற்செய்யப்படுகிறதோ அதற்குப்பாதேந்திரியமென்றுபெயர்.

ச-கை. எங்கேயிருக்குமென்னில்,

உ-ம், உள்ளங்காலையாசிரயித்துக்கொண்டிருக்கும் அதுவேபாதேந்திரியம்,

ச-கை, ஆனாலுள்ளங்காலேயே பாதேந்திரியமென்று சொல்லலாமேயெயென்னில்,

உ-கை. ஸ்தூலத்திமூர்ச்சைமரண சரீரங்களிலிருக்கிற வுள்ளங்காலினால்கமனாதிக்கிரியைகளைப்பண்ணவேண்டும் பண்ணாதபடியினால் உள்ளங்காலுக்கன்னியமாய்கமனாதிக்கிரியாசத்திமத்தாய்சூட்சுமமாயொருவஸ்து முகாரவிந்தத்திலிருந்திரண்டு கரையாயஉள்ளங்காலையாசிரயித்துக்கொண்டிருக்கும்அதந்கேபாதேந்திரியமென்றுபெயர்அதற்கதிஷ்டான தேவதைஉபேந்திரன் அவ்வதிஷ்டானதேவதையினாற் பிரேரிக்கப்பட்டபாதேந்திரியங்கமனாதிக்கிரியைகளைப்பண்ணும்,

ச-கை, பாயுரிந்திரியமாவதேதென்னில்,

உ-ம்- மலவிசர்க்கனாதிக்கிரியைகளெதினாற் செய்யப்படுகின்றதோ அதற்குப்பாயுரிந்திரியமென்று பெயர்,

ச-கை, அது எங்கேயிருக்குமென்னில்,

உ-ம்- குலத்தையாசிரயித்துக்கொண்டிருக்கும் அதுவேபாயுரிந்திரியம்,

ச-கை- ஆனால்குதத்தையேபாயுரிந்திரிய மென்னலாமேயெனில்,

உ-ம்- ஸ்தூலத்திமூர்ச்சைமரண சரீரங்களிலிருக்கிறகுதத்தினாலும்விசர்க்கனாதிக்கிரியைகளைச்செய்யவேணடும் அப்படிச்செய்யாதபடியினால்

குதத்திற்கண்ணியமாய்மலவிசர்க்கனக்கிரியாசத்திமத்தாய்சூட்சுமமா
ய் ஒருவஸ்துமூலாதாரலிங்கத்திலிருந்து குதத்தையாசிரயித்துக்கொண்
டிருக்கும் அதற்கேபாயுவிந்திரியமென்றுபெயர் அதற்கதிஷ்டானதே
வதை மிருத்தியு அவ்வதிஷ்டானதேவதையினுற் பிரேரிக்கப்பட்ட
குதேந்திரியமலவிசர்க்கனக்கிரியையைப்பண்ணும்,

ச-கை- உபஸ்தேந்திரியமாவதேதென்னில்,

உ-ம்- சுக்கிலமூத்திர விசர்க்கனக்கிரியைகளெதினுற் செய்யப்படுகிற
தோ அதற்கு உபஸ்தேந்திரியமென்றுபெயர்,

ச-கை- அது எங்கேயிருக்குமென்னில்,

உ-ம்- யோனிலிங்கங்களையாசிரயித்துக்கொண்டிருக்கும் அதுவேயுபஸ்
தேந்திரியம்,

ச-கை- யோனிலிங்கங்களையே யுபஸ்தேந்திரியமென்று சொல்லலாமே
யென்னில்,

உ-ம்- சுழுத்திமூர்ச்சைமரணசரீரங்களிலிருக்கிற யோனிலிங்கங்களினுலும்
சுக்கிலமூத்திரவிசர்க்கனக்கிரியைகள் பண்ணவேண்டும் பண்ணுத
படியினுல் யோனிலிங்கங்களுக்கண்ணியமாய் சுக்கிலமூத்திரவிசர்க்கனு
க்கிரியாசத்திமத்தாய் சூட்சுமமாய் ஒருவஸ்துமூலாதாரலிங்கத்திலிருந்
து யோனிலிங்கங்களை யாசிரயித்துக்கொண்டிருக்கும் அதற்கு உபஸ்
தேந்திரிய மென்று பெயர் அதற்கதிஷ்டானதேவதை பிரஜாபதி அவ்
வதிஷ்டானதேவதையினுற்பிரேரிக்கப்பட்ட உபஸ்தேந்திரியம்சுக்கில
மூத்திரவிசர்க்கனக்கிரியைகளைப்பண்ணும்,

ச-கை-பிராணுதிபஞ்சகத்திற்பிராணவாயுவாவதேதென்னில்,

உ-ம்- உச்சுவாசமெதினுற்பண்ணப்படுகின்றதோ அதற்குப்பிராணவாய்
வென்றுபெயர் அதற்குஸ்தானம்இருதயம்அதற்கதிஷ்டானதேவதை
விரிஞ்சன் அவ்வதிஷ்டானதேவதையினுற் பிரேரிக்கப்பட்டபிராண
வாய்வுஉச்சுவாசம்பண்ணிக்கொண்டிருக்கும்,

ச-கை- அபானவாயுவாவதேதென்னில்,

உ-ம்- நிசுவாசமெதினுற்பண்ணப்படுகிறதோ அதற்கபானவாயுவென்று
பெயர் அதற்குஸ்தானங்குதம் அதற்கதிஷ்டானதேவதை விசுவகர்த்
தா அவ்வதிஷ்டானதேவதையினுற் பிரேரிக்கப்பட்ட அபானவாய்வு நி
சுவாசம்பண்ணிக்கொண்டிருக்கும்,

ச-கை- வியானவாயுவாவதேதென்னில்,

உ-ம்- சரீரத்தைத்தப்பவைப்பட்ட இந்திரியங்களுக்குப் பலனைக்கொடு

த்துக்கொண்டிருக்கிறதெதுவோ அதற்குவியானவாயுவென்றுபெ அதற்குஸ்தானம் சர்வசரீரம்அதற்கதிஷ்டானதேவதைவீசுவபே அவ்வதிஷ்டானதேவதையினும்பிரேரிக்கப்பட்டவியானவாய்வு ரியங்களுக்குப்பலத்தைக்கொடுத்துச்சரீரமெல்லாம்வியாபித்திரு

சங்கை, உதானவாயுவாவதேதென்னில்,

உ-ம்- சுழுத்திகாலம்வந்தபோது சகலவிந்திரியங்களையுமொடுக்கிக் ண்டு தனக்குக்காரணமான அஞ்ஞானத்திலெதுலயிக்கப்பண்ணு தோ, சாக்கிராவஸ்தையிலந்த இந்திரியங்களையந்தந்தவிடத்தி துகிறதுவதெதோ, மரணகாலம்வந்தபோதுசகல விந்திரியங்களை கிரகித்துக்கொண்டு லோகாந்தரத்திற் கொடுபோகிறதோ, அஃ தானவாய்வு, அதற்குஸ்தானங்கண்டம் அதற்கதிஷ்டானதேவ ரஜதேவன் அவ்வதிஷ்டானதேவதையினும்பிரேரிக்கப்பட்ட உ வாய்வு இத்தியாதிதொழில்களைநடத்தும்,

சங்கை, சமானவாயுவாவதேதென்னில்,

உ-ம்- உண்டல் குடித்தல் உமிழுதல் நக்கலென்கிறநாலு விதவுண்டி ச்சாடராக்கினியோடு கூடியுபசமனம் பண்ணிச்சரீரத்திற்கெ ட்டிசெய்விக்கிறதோ அதற்குச்சமானவாயுவென்றுபெயர். அதற்கு னம்நாபி அதற்கதிஷ்டான தேவதைசூரியன் அவ்வதிஷ்டான தையினும்பிரேரிக்கப்பட்டசமானவாயுவுமேற்சொல்லிய கிரியை ச்செய்யுமிதுவன்றி உபவாயுக்களைந்துமிதற்குள் அந்தர்ப்பூத ருக்கின்றது. தொழில்மாத்திரம்வேறு அதிதேவதையும் ஸ்தா மொன்றாகவிருக்கும்,

சங்கை, அந்தவாயுவுகளாவதேதென்னில்,

உ-ம், நாகன் கூர்மன் கிரிகரன் தேவதத்தன் தனஞ்சயன் என்னும வாயுக்கள் அவற்றுள்வாந்திசெய்விப்பது நாகன் விக்கல்ஏப்பமி ப்புவிழிப்புகளைச்செய்விப்பது கூர்மன் தும்மலிருமலைச்செய்வி கிரிகரன் சிரிக்கல் வசனிக்கலைச்செய்விப்பதுதேவதத்தன் தூர மாக்கிச்சரீரம் வீங்கப்பண்ணிதலைவெடிக்கச் செய்வது தனஞ்செ என்றுசொல்லப்படும்,

சங்கை- அந்தக்கரணசதுஷ்டயத்தில்மனமாவதேதென்னில்,

உ-ம்-சங்கற்பவிகற்பமெதினாற் பண்ணப்படுகிறதோ அதுவேமனப்

சங்கை- அது எங்கேயிருக்குமென்னில்,

உ-ம்- கண்டத்தின்கீழிருக்கும் அதற்கதிஷ்டான தேவதை சந்திரன் அவ்வதிஷ்டானதேவதையினாற்பிரேரிக்கப் பட்டமனஞ்சங்கற்பவிகற்பம்பண்ணிக்கொண்டிருக்கும்,

சங்கை- புத்தியாவதேதென்னில்,

உ-ம்- நிச்சயமெல்லாமெதினாற்பண்ணப்படுகிறதோ அதுவேபுத்தி

சங்கை- அதுஎங்கேயிருக்குமென்னில்,

உ-ம்- முகத்திலிருக்கும் அதற்கதிஷ்டானதேவதை சதுர்முகன் அவ்வதிஷ்டானதேவதையினாற் பிரேரிக்கப்பட்ட புத்தி நிச்சயமெல்லாம் பண்ணிக்கொண்டிருக்கும்,

சங்கை- அகங்காரமாவதேதென்னில்,

உ-ம்- அபிமானமெல்லாமெதினாற்செய்யப்படுகிறதோ அதுவேயகங்காரம்,

சங்கை, அதுஎங்கேயிருக்குமென்னில்.

உ-ம், இருதயத்திலிருக்கும் அதற்கதிஷ்டானதேவதை ருத்திரன் அவ்வதிஷ்டானதேவதையினாற்பிரேரிக்கப்பட்ட அகங்காரம் அபிமானமெல்லாம் பண்ணிக்கொண்டிருக்கும்,

சங்கை- சித்தமாவதேதென்னில்,

உ-ம்- சிந்தனையெல்லாமெதினாற் செய்யப் படுகிறதோ அதுவேசித்தம்,

சங்கை, அது எங்கேயிருக்குமென்னில்,

உ-ம்- நாபிப்பிரதேசத்திலிருக்கும் அதற்கதிஷ்டானதேவதை விஷ்ணு அவ்வதிஷ்டானதேவதையினாற்பிரேரிக்கப்பட்டசித்தம்சிந்தனையெல்லாம்பண்ணிக்கொண்டிருக்கும் அதுவுமன்றி இந்தலிங்கசரீரம்ஷோடசாத்மகமென்றொருசுருதியிற் சொல்லுகிறது; அந்தப்பட்சத்தில் அந்தக்கரணமஞ்சுளொன்றுமாத்திரமேயாகும் பதினேழென்றொருசுருதியிற்சொல்லுகின்றது அந்தப்பட்சத்தில்மனமுஞ்சித்தமும் ஒன்றென்றும் புத்தியுமகங்காரமுமொன்றென்றாகும், பத்தொன்பதென்றொருசுருதியிற்சொல்லுகிறது அந்தப்பட்சத்திலந்தக் கரணங்கள் நாலையுஞ்சொல்லுவதாகும், அப்படி எத்தனை விதமாகச் சொன்னாலும் விரோதமில்லை இப்படிப்பதினேழுவிதகாரியங்களினும் பதினேழுஅவயவமான லிங்கசரீரமுண்டென்றுநிச்சயிக்கப்பட்டது,

சங்கை- காரணசரீரமுண்டென்றெப்படியறிகிறதென்னில்.

உ-ம்- காரியமான ஸ்தூலசூட்சுமமாகிய இரண்டுசரீரங்கள் காணப்

படுகிறபடியினால் இதுகளுக்குக் காரணமொன்றுண் டென்றுயுத்திப ண்ணவேண்டியது,

ச-கை. காரியத்தினால் காரணத்தையூகித்தறியலாமாவென்னில்,

உ-ம்- காரியமானபுகையினாற்காரணமான அக்கினியுண்டென்றூகித்த றி வதுபோலக்காரியமானஸ்தூலசூட்சம சரீரங்களினாற்காரணமான சரீரமுண்டென்றூகித்தறியலாம்அல்லாமலும் அகமஞ்ஞானியென் றுபிரத்தியட்சமாயனுபவிக்கிறபடியினால் காரணசரீரமுண்டென்று நிச்சயிக்கலாம்இப்படிநிச்சயம்பண்ணபிறகுஆத்மாவுக்குச் சரீரத்திர ய விலட்சணத்துவமெப்படியென்றுவிசாரிக்கவேணுமே,

ச-கை, ஆத்மாவுக்குச்சரீரத்திரயவிலட்சணமாவதேதென்னில்,

உ-ய்- ஆத்மலட்சணஞ்சரீரத்திரயத்திலும்சரீரத்திரயலட்சணமாத் மா விலுமில்லாதிருக்கிறதேசரீரத்திரயவிலட்சணம்,

ச-கை- ஆனால்ஆத்மலட்சணமேதென்னில்,

உ-ம் சச்சிதானந்தமேயாத்மலட்சணம்,

ச-கை- அனாத்மலட்சணமேதென்னில்,

உ-ம்- அசத்துசடந்துக்கமேயனாத்மலட்சணம்,

ச-கை. இந்தலட்சணங்களுக்கன்னியோன்னியவிலட்சணமுண்டோவெ ன்னில்,

உ-ம், உண்டு,திருஷ்டாந்தத்தில்ஸ்திரீலட்சணம்புருஷனிடத்திலும்புரு ஷலட்சணம்ஸ்திரீயினிடத்திலு மில்லாதுபோற்சத்துலட்சணமசத் திலும் அசத்துலட்சணஞ்சத்திலுமில்லை பிரகாசலட்சணம் அந்தகா ரத்திலும்அந்தகாரலட்சணம்பிரகாசத்திலுமில்லாதுபோலசித்துலட் சணஞ்சடத்திலுஞ் சடலட்சணஞ்சித்திலுமில்லைசந்திரலட்சணஞ்சூ ரியனிலும்சூரியலட்சணஞ்சந்திரனிலுமில்லாது போலஆனந்தலட்ச ணம் துக்கத்திலும்துக்கலட்சணமானந்தத்திலு மில்லை, இப்படிசச்சி தானந்தத்துக்கும் அசத்துசடந்துக்கத்துக்கும்அன்னியோன்னிய வி லட்சணத்துவமாகச்சத்துலட்சணமும்அசத்துலட்சணமும் சித்துல ட்சணமுஞ்சடலட்சணமும்ஆனந்தலட்சணமுந்துக்கலட்சணமு மு ண்டு இதுகளைவிசாரித்தறியாமல்ஆத்மாவின்அன்னியோன்னிய விலட்சணத்துவமறியக்கூடாது,

ச-கை- சத்துலட்சணமாவதேதென்னில்,

உ-ம்- ஒன்றினாலும் பாதிக்கப்படாமல் பூதபவிஷியவர்த்தமானகா லத்திலும் ஏகரூபமாயிருக்கிறதெதுவோஅதுவேசத்துலட்சணம்.

ச-கை, அசத்துலட்சணமாவதேதென்னில்,

உ-ம்- காலத்திரயத்திலுமில்லாததாயிருக்குந்தோற்றிக் கொண்டு ஒன்றி
ஞல் வாதிக்கப்பட்டுப்போகிறதெதுவோ அதுவே அசத்துலட்சணம்,

ச-கை- இதற்குத்திருஷ்டாந்தமுண்டோ வென்னில்,

உ-ம்- உண்டு,

ச-கை- அது எப்படியென்னில்.

உ-ம்- பழுதையும்பழுதையினிடத்தாரோபிக்கப்பட்டபாம்புமேதிருஷ்
டாந்தம்,

ச-கை- பழுதையினிடத்தில் சத்துலட்சணமும் அசத்துலட்சண முமு
ண்டோவென்னில்,

உ-ம்- உண்டு,

ச-கை- அதுஎப்படியென்னில்,

உ-ம்- பழுதையினிடத்திலாரோபிக்கப்பட்ட சர்ப்பமுதலானபய பீதிக
ளாகியஞன்றிறலும் அந்தப்பழுதை வாதிக்கப்படாமல்பிராந்தி காலத்
திலும் பிராந்திக்குப்பூர்வகாலத்திலும்பிராந்திபோனபிற் காலத்திலு
ம்ஏகரூபமாயிருக்கதே சத்துலட்சணம்தானில்லாதிருந்துந் தோற்றி
க்கொண்டேஞன்றிறல்வாதிக்கப்பட்டுப்போகிறதே அசத்துலட்சணம்
இதுசர்ப்பத்தினிடத்திலுமுண்டுபழுதைலட்சணம்பாம்பினிடத்தில்
லாதபடியினாலும் பாம்புலட்சணம்பழுதையினிடத்தில்லாதபடியினா
லும்அந்தப்பாம்புபழுதைகளுக்குச்சத்தத்தினாலும் அர்த்தத்தினாலு
ம்லட்சணத்தினாலும் உபமானத்தினாலும்விவகாரத்தினாலும் பேதல
ட்சணமுண்டாயிருப்பதுபோலச்சத்துலட்சணம்தே கேந்திரியாதிப்
பிரபஞ்சத்தினிடத்திலில்லாதபடியினாலும்அசத்துலட்சணஞ் சத்தா
ன ஆத்மாவினிடத்திலில்லாதபடியினாலும்சத்துக்கும்அசத்துக்கும்
சத்தத்தினாலும்அர்த்தத்தினாலும்லட்சணத்தினாலும்உபமானத்தினா
லும்விவகாரத்தினாலும்பேதமுண்டு,

ச-கை- இதினாலென்னசித்திக்குதென்னில்,

உ-ம்- சத்தென்றசத்தம்அசத்தென்றசத்தமாகாது அசத்தென்றசத்தம்ச
த்தென்றசத்தமாகாது, சத்தினுடையசத்தார்த்தம்அசத்தினுடையச
த்தார்த்தமாகாது,அசத்தினுடையசத்தார்த்தம்சத்தினுடையசத்தார்
த்தமாகாது, சத்தினுடையலட்சணம்அசத்தினுடையலட்சண மல்ல
அசத்தினுடையலட்சணம்சத்தினுடையலட்சணமல்ல சத்தினுடை
யஉபமானம்அசத்தினுடையவுபமானமல்ல-அசத்தினுடைய வுபமா

உ-ம். மெய்யிலேபட்டுத்தகிக்கப்பட்டபுருஷன் அங்குக்குளிர்ந்த நீர்ப்பானையைத் தொட்டுக்கண்ணிலொற்றிக் கொண்டமாத்திரத்தில் அவனுடையதாபம்நிவர்த்தியாகின்றது அதுசாட்சாத்ஜலமல்ல அந்தஜலத்தின் ஆவேசமாத்திரத்துக்கேதாபநிவர்த்தியிருப்பது பிரத்தியட்சமாகக்கண்டோம் அந்தஜலத்தையே பானம்பண்ணினாற்சகலதாபங்களும்போமென்பதிற்சந்தேகமில்லை ஆகையினால் அந்தஜலத்தினிடத்திலானந்தலட்சணமுண்டு,

௪-கை- புளியநெருப்பில்துக்கலட்சணமுண்டோவென்னில்,

உ-ம். உண்டு,

௪-கை- அதெப்படியென்னில்,

உ-ம். தாசதாபாதிகளில்லாதவன் புளியநெருப்போடு கூடியிருக்கிறவெப்பலப்பானையைத்தொட்டமாத்திரத்தில்அந்தப்பானையின் உஷ்ணம் சுபாவத்தினால் அதைத்தொட்டவனுக்குத்தாபாதிகளைக்கொடுத்துக் கையெல்லாங்கொப்புளிக்கச் செய்கின்றது அதுசாட்சாத்நெருப்பல்ல நெருப்பினுடைய ஆவேசமாத்திரமே தாபாதிகளைக்கொடுக்கின்றதென்று பிரத்தியட்சமாகக்கண்டோம் அந்தநெருப்பையே தொட்டாற் சமஸ்தக்கையும்பஸ்மமாகுமென்பதற்குச் சந்தேகமில்லையாகையினால் அந்தப்புளியநெருப்பினிடத்தில்துக்கலட்சணமுண்டு இதுவுமன்றியில்வேறுதிருஷ்டாந்தமுமிருக்கின்றது,

௪-கை, அதெப்படியென்னில்,

உ-ம். அமிர்தமுங்காளகூடவிஷமுமேதிருஷ்டாந்தம்,

௪-கை, அமிர்தத்திலானந்தலட்சணமுண்டோவென்னில்,

உ-ம்- தான்சகலசொரூபமாயிருந்துக்கொண்டுதன்னைப்பானம்பண்ணினவர்களுக்கு நித்தியமானசுகத்தைக் கொடுக்கிறபடியினாலமிர்தத்தினிடத்தில்ஆனந்தலட்சணமுண்டு,

௪-கை. காளகூடவிஷத்தில்துக்கலட்சணமுண்டோவென்னில்,

உ-ம்- தான்தாபாத்மகமாயிருந்துக்கொண்டுதன்சமீபத்திலிருக்கிறவர்களை விருந்துக்குரூபமானபிராணஹானிசெய்கிறபடியினால்காளகூடவிஷத்தினிடத்தில்துக்கலட்சணமுண்டு அமிர்தலட்சணங்காளகூடவிஷத்திலில்லாதபடியினாலுங்காளகூடவிஷலட்சணம் அமிர்தத்திலில்லாதபடியினாலும் அமிர்தத்துக்குங்காளகூடவிஷத்துக்கும் முன்சொன்ன இருவிதலட்சணத்தினாலும் பேதலட்சணமிருக்கிறதுபோலும் ஜலலட்சணம் நெருப்பினிடத்திலில்லாதபடியினாலும்நெருப்புலட்சணம் ஜலத்தினிடத்திலில்லாதபடியினாலும் ஜலத்துக்கும் நெருப்புக்கும்

சங்கை-எப்படியறிந்தவர்களல்லவென்னில்,

உ-ம். மனுஷனல்லாததன்னைமனுஷனென்றறிந்தவனெப்படியறிந்தவனல்லவோ அதுபோலச்சிவனல்லாத தன்னைச் சிவனென்றறிந்ததுமறிவல்ல.

சங்கை. சிலபேர்களிற்சாஸ்திரிகளானவர்களறியார்களாவென்னில்.

உ-ம். அவர்களுமறியாதவர்களே.

சங்கை. சாஸ்திரிகள் ஆத்மசொரூபமின்னதென்றுநிச்சயித்துக்கொண்டிருக்க அவர்களுமறியார்களென்றுசொல்லுவதெப்படியென்னில்.

உ-ம். சாஸ்திரிகளிற்சாருவாகர்அநாத்மரூபமாகிய ஸ்தூலதேகத்தையே யாத்மாவென்றும் பிராணோபாசகர் பிராணனையேயாத்மா வென்று ப்பவுத்தரிற்சிலர் அநாத்மாவாகிய நாசமாகிறபுத்தியையே யாத்மா வென்றும் சிலமூடர்சசவிஷாணமாகியசூனியத்தையேயாத்மாவென்றுஞ் சொல்லுகிறார்கள் அவர்கள் சாஸ்திரிகளாயினுந்தன்னையறிந்தவர்களல்ல இன்னமும் மீமாஞ்சகரும் சைவர்களும் ராமானுஜரும் மாத்துவரும்பரிபூரணமாகிய வாத்மாவை யணுப்பிரமாணமென்று சொல்லுகிறார்கள் இன்னுந்தார்க்கிகர்ஆத்மாவை விபுத்வமென்றங்கீகரித்தபோதிலும் அவர்களும் ஆத்மாவையறிந்தவர்களல்லவென்றேசொல்லவேண்டும்.

சங்கை. அதேதென்னில்.

உ-ம். தார்க்கிகர் ஆத்மாவுக்கு விபுத்வமங்கீகரித்தபோதிலும் ஆத்மா அநேகமென்றுஞ்சடமென்றுஞ் சடமாகிய வாத்மாவுக்குச்சிற்குணமென்றும் அந்த ஆத்மாவுக்கு இச்சையாதிகுணங்களுண்டென்றும் நிஷ்க்ரியவாத்மாவைக்கிரியமாயங்கீகரித்தபடியினாலவர்கள் சாஸ்திரிகளாயினுமாத்மாவையறிந்தவர்களல்ல.

சங்கை. சாங்கியயோகிகளுமாத்மாவையறியார்களோவென்னில்.

உ-ம். அவர்களிற் பேதமாகிய சிலபட்சத்தார் ஆத்மாவுக்கு விபுத்வமும் சச்சிதானந்தசொரூபத்வமும் அசங்கத்வமு மங்கீகரித்தபோதிலும் ஆத்மாவை நானாவாகவும் ஜகத்து நித்தியமென்றும் ஜீவேஸ்வராதிகளுக்குப்பேதமு மங்கீகரித்தபடியினாலவர்கள் சாஸ்திரிகளாயினுமாத்மாவையறிந்தவர்களல்ல.

சங்கை. ஆனால் இந்தச்சாஸ்திரிகளெல்லாமறியாமற்போனால் போகட்டும்.

உ-ம்-பிரதிபந்தகீக்கிப்படித்து ஆத்மாவையறிந்தவர்கள் ஆத்மாவேயா கையினால் யாருமாத்மாவையறியார்களென்று சொன்னதில்விரோதமில்லை.

ச-ங்கை-பூர்வம்தன்னைத்தானறியார்களென்றுசொல்லிப்பிறகுஆத்மாவையறியார்களென்றுசொன்னதற்குவிரோதமில்லையாவென்னில்,

உ-ம்-தானேயாத்மாவாகியபடியினால்யாருந்தன்னைத்தானறியார்களென்றுசொன்னதற்கும் ஆத்மாவையாருமறியார்களென்று சொன்னதற்கும்விரோதமில்லை.

ச-ங்கை-ஆனால்தன்னையறியாமலிருக்கப்பட்ட வஞ்ஞானமெதினாற்போமென்னில்.

உ-ம்-ஆத்மஞானத்தினாலன்றிமற்றொன்றினாலும்போகாது

ச-ங்கை-கர்மத்தினாற்போமென்றுசொல்லுவோமேயென்னில்

உ-ம்-கர்மம்அஞ்ஞானவிரோதியல்லாதபடியினாலஞ்ஞானத்தைப்போக்கமாட்டாது.

ச-ங்கை-அதெப்படியென்னில்.

உ-ம்-திருஷ்டாந்தத்தில்கடகம் கடாந்தரத்திற்குவிரோதமில்லாதபடியினால்கடத்தைக் கடாந்தரமெப்படி போக்கமாட்டாதோ அப்படி போலகர்மமும் அஞ்ஞானத்திற்கு விரோதமல்லாதபடியா லஞ்ஞானத்தைப் போக்கமாட்டாமல்மேலும்மேலும்விருத்தியே செய்விக்கும்.

ச-ங்கை-அதெப்படியென்னில்,

உ-ம்-அமாவாசைநிசியிருட்டில்வந்த மேகாவரணம் அவ்வமாவாசைநிசியிருட்டிக்கு விரோதமல்லாதபடியினால் அவ்விருட்டைப்போக்காமல்பின்னும் விருத்திசெய்விப்பதுபோலக் கன்மமும் அஞ்ஞானத்தைப்போக்காமல்பின்னும் விருத்தியேசெய்விக்கும் அல்லாமலுமமாவாசைநிசியிருளில்மார்க்கமறிந்து செல்லும்புருஷனுக்கெதிரேயொருமனுஷன்வந்தால் அவன்பிராமணனென்றுஞ் சூத்திரனென்றுந்தோற்றாமல்யாரோ புருஷன்வருகிறானென்று சாமானியமாகத்தோற்றப்படுகிறதுபோலும் ஒருமாடெதிர்ப்பட்டால் ரிஷபம் எருமைபசுவெனத் தோற்றாது சாமானியமாகத்தோற்றப்படுகிறதுபோலும் அந்தச் சமயத்திற் மேகாவரணமு முண்டானால் அவ்வந்தகாரத்திற்கு அதிக விருத்தியுண்டாக்கிச் சாமானியமாகத் தோற்றியமனுஷாதிகளையும் பரிச்சிதந் தோற்ற வொட்டாமற் செய்கிறதுபோலக்கர்மமு மஞ்ஞானவிருத்திசெய்து ஆத்மாவைப்பரிச்சிதந்தோற்றவொட்டாமற்செய்விக்கும்.

ச—ங்கை- திருஷ்டாந்தத்தில் மோகாவரணமுமாந்தகாரவிருத்திசெய்வித்து மனுஷர்களைப்பரிச்சித்தத்தோற்றமற்செய்வது பிரத்தியட்சமாகக் கண்டோம் தார்ஷ்டாந்தத்திலஞ்ஞானவிருத்திசெய்வித்து நித்தியமாய்ப்பிரதிருக்கிற ஆத்மாவையெப்படி தெரியவொட்டாமற் செய்யுமென்னில்.

உ—ம்- அஞ்ஞானமான இருளுடன்கன்மமானபேருமிக் கூடினால் மூடப்பட்ட அந்தகாரத்தில் ரத்தினம் புத்தகம்சாளக்கிராமம்உருத்திராட்ச முதலியபதார்த்தங்கள் வைக்கப்பட்டிருந்தாலும் இதுவனையக ல்லோ ரத்தினமோ இதுவேதமோ சாஸ்திரமோ இதுசாளக்கிராமமோ லட்சுமிநாராயணமோ இதுசங்குமுகமோ வென்றுள்ளபடியிருந்ததை யறியக்கூடாமல்மறைப்பிக்கிறதுபோல அந்தக்கர்மத்தோடுங்கூடிய வஞ்ஞானமும் நித்தியமாய்ப்பிரதிருக்கிற வாத்மாவைத் தோற்ற வொட்டாமற்செய்விக்கும்.

ச—ங்கை- அந்தகாரத்தில்வைக்கப்பட்ட ரத்தினங்களுடையபதார்த்தஞா னமெப்படி வருமென்னில்

உ—ம்- சூரியோதயமாய் அந்தகாரநசித்தபிறகு வைக்கப்பட்டிருக்கிற ரத்தினங் களுடைய பதார்த்தஞானந்தோற்றப்படுகிறதுபோல தார்ஷ்டாந்தத் திலும் கன்மத்தினால்விருத்தியாகிய ஆவரணமானவஞ்ஞானமந்தகா வரணமுஞ்சித்தாவரணமும் பிரமஞானமென்கிற சூரியோதயத்தினால் நசித்தபிறகு ஆத்மயதார்த்தமாகத்தோற்றும்.

ச—ங்கை- திருஷ்டாந்தத்தில் சூரியோதயத்தினால் போனபொருளென்றிருக்கிறபொருளென்னவென்னில்.

உ—ம்- சூரியோதயத்தினால் ரத்தினஞ்சொரூபத்தைத்தெரியாதபடிமறைத்த அந்தகாரமாத்திரம்நசித்தப்போய் மோகாவரணமாத்திரமிருக்கும்.

ச—ங்கை- அந்தமோகாவரணமென்னசெய்யுமென்னில்.

உ—ம்- சிலருக்குச்சுகமுஞ்சிலருக்குத்துக்கமுஞ்செய்விக்கும்.

ச—ங்கை- யாருக்குச்சுகமும்யாருக்குத்துக்கமுஞ்செய்விக்குமென்னில்

உ—ம்- வழிநடப்போர்திருடியன்முதலானவர்கள் இவர்களுக்குச்சுக முஞ்செல்லுவர்களுமிறவர் வைக்கோலுவர்த்தகமிறவர் ஸ்நானம்பண் ணினவர் வயப்புசரீரக்கவர்களாயிருப்பவர்களுக்குத் துக்கமுஞ்செய் விக்கும்.

ச—ங்கை- தார்ஷ்டாந்தத்திற்போகிறதெது இருக்கிறதெது வென்னில்

உ—ம்- ஞானோதயத்தினலஞ்ஞானம்நசித்துப்போம் அஞ்ஞானகாரியமா கியதேகேந்திரியாதிகளிருக்கும்.

ச-ங்கை-அப்படியிருக்கப்பட்ட தேகேந்திரியாதிக ளஞ்ஞானிகளுக்கென்ன செய்விக்குமென்னில்.

உ-ம்-சுகதுக்கங்களைக்கொடுத்துக்கொண்டிருக்கும்.

ச-ங்கை-மேகாவரணமென்கிற காரியமல்லாதபடியினா லந்தகார நசித்து மிருக்கலாம்தேகேந்திரியாதிகளஞ்ஞானகாரியமானதினால் காரணமான அஞ்ஞானநசித்தபிறகு மெப்படியிருக்குமென்னில்.

உ-ம் திருஷ்டாந்தத்தில்கற்றாழையும்புகையும் அம்புவேகமு மிருப்பதுபோலிருக்கும்.

ச-ங்கை அதெப்படியென்னில்

உ-ம் கற்றாழையின்காரணமானவேர்போயும் காரியமாகிய கற்றாழையிருப்பதுபோலும் காரணமான அக்கினிபோயும் காரியமாகியபுகையிருப்பதுபோலும் காரணமானவில்லொடிந்தும் அதனால் விடப்பட்ட காரியமாகிய அம்புவேகமிருப்பதுபோலும் தேகேந்திரியாதிகளின் காரணமான அஞ்ஞானநசித்துப்போனாலும் காரியமாகியதேகேந்திரியாதிகளிருக்கும்.

ச-ங்கை-தேகேந்திரியாதிகளுக்கெப்போது நாசம்வருமென்னில்.

உ-ம்-மேகாவரணத்தினாசத்திற் கொருநியமமில்லாததுபோலத்தேகேந்திரியாதிகளுடைய நாசத்திற்குநியமமில்லை பிராரத்தநாசத்தில்தேகேந்திரியாதிகளும்நாசப்படும்.

ச-ங்கை-மேகாவரணம்அந்தகாரவிருத்தியபண்ணுவிக்கிறதாய்ப்பிரத்தியட்சமாகக்கண்டோம் அஞ்ஞானம்அஞ்ஞானவிருத்திபண்ணுவிக்கிறது பிரத்தியட்சமாகக்காணோமேயென்னில்.

உ-ம்-திரிவிதகரணங்களினாற் செய்யப்படுகிறகன்மம்அகர்த்தாவாகிய வாத்மாவைக்கர்த்தாவாகவும் அபோக்தாவாகியவாத்மாவைப்போக்தாவாகவும் சுகதுக்கமின்றிய வாத்மாவைச்சுகதுக்கியாகவும் செய்கிறபடியால் அஞ்ஞானவிருத்திபண்ணுகிறதென்றுபிரத்தியட்சமாய்க்காணலாம் இந்தக்கன்மம அஞ்ஞானத்தைப்போக்கமாட்டாது.

ச-ங்கை-பின்னையெதினாற்போமென்னில்.

உ-ம் ஆத்மஞானத்தினால் தான்போகவேண்டுமல்லாமல்வேறொன்றினாலும்போகாது.

ச-ங்கை-இந்தஆத்மஞானமெதினால்வருமென்னில்.

உ-ம்-விசாரணையினால்வரவேண்டும்.

ச-ங்கை-அப்படியேன் சொல்லவேண்டும் திருஷ்டாந்தத்தில் அக்கி

வியானது பசியைப்போக்காமல் விருத்திபண்ணினபோதிலும் அக்கினியையன்னுகாரமாய்ப்பரிணமிக்கப்பண்ணி பசியைப்போக்கடிப்பதுபோலத் தாஷ்டாந்தத்தில் கன்மமானது அஞ்ஞானத்தைப்போக்காமல் விருத்திபண்ணினபோதிலும் சித்தவிருத்தியாலஞ்ஞானத்தைப்போக்கிற ஞானகாரமாய்ப்பரிணமிக்கப் பண்ணியஞ்ஞானத்தைப்போக்குமென்று சொல்லலாமேயென்னில்.

உ-ம்.-ஆனால் அக்கினியானது அரிசியையன்னுகாரமாகப்பரிணமிக்கப்பண்ணிபசியைப்போக்குமென்பது பிரத்தியட்சமாகக்கண்டோம், தாஷ்டாந்தத்தில் கன்மமானது அஞ்ஞான நிவிர்த்தியாகிறஞானத்தையுண்டுபண்ணி அந்தவழியினாலஞ்ஞானத்தைப்போக்கு மென்பது கூடாது, ஏனென்றால் சித்தவிருத்தியைக்கர்த்தத்வாகாரமாகப்பரிணமிக்கப்பண்ணுகிறகன்மம் அஞ்ஞானத்தைப்போக்கிற்சித்தவிருத்தியை அகர்த்தத்வாகாரமாகப்பரிணமிக்கப்பண்ணுகிற ஞானத்தைக்கொடுக்கமாட்டாது ஆதலால்கன்மத்தினால் ஞானம்வராது விசாரணையினாலேவரவேண்டும்.

ச-கை. எந்தவிசாரணையினால்வரவேண்டுமென்னில்.

உ-ம். ஆத்மானாத்மவிசாரணையினாலேயேவரவேண்டும்.

ச-கை. அதற்குத்திருஷ்டாந்தமெப்படியென்னில்.

உ-ம்.-அர்த்தத்துடன்கூடியிருக்குங்காயத்திரியைப் புருஷனுச்சரித்தாலும் அதனருத்தம் விசாரிக்காமையினால்தெரியவில்லை அந்த அர்த்தந்தெரியவேண்டிச்சேதுஸ்நானமும் கெங்காசாகரத்திலஸ்நானமும் லட்சம்பிராமணபோஜனமுதலானதுகளுஞ்செய்தாலும் பஞ்சாக்கினிமத்தியிலிருந்து பதினாயிரம்வருஷந்தபசுபண்ணினாலும் அது அநேகயாகம் லட்சங்காயத்திரியும் இதுமுதலான அநேகநாள்செய்தாலும் அந்தக்காயத்திரிக்கர்த்தந்தெரியாது, அந்த அர்த்தம் அறிந்தவர்களிடத்திற்போய் அவர்களைவழிபட்டு விசாரிக்கஅவர்கள் மனமிரங்கிஅதனருத்தமின்னதென்றுசொல்ல அதைக்கேட்டமனதினால் யுக்தியால் தெரியவரும் அதுபோலத்தாஷ்டாந்தத்தில் பிருதிவிஸ்நானமுதலானகர்மங்கள்பண்ணினாலும்அநேகயாகாதியக்ஞாதிகளினாலும்ஆத்மஞானம்வராது ஆத்மானாத்மவிசாரணையினாலேயேவரவேண்டும்.

ச-கை.-இதற்குதாரணமுண்டோவென்னில்.

உ-ம்-சர்வானுபவசுத்தசித்தமாயுண்டாயிருப்பதைக்கர்மத்துவாராவெடுத்துச்சொல்லுகிறோம்.

ச-கை-அந்தக்கர்மமாவதேதென்னில்.

உ-ம்-ஸ்நானசந்தியாவந்தனஅனுஷ்டானஜபதபாதி யுபாசனைகளுந்தேவபூசைஅதிதிபூசார்ச்சனைகளும் வைசுவதேவதீர்த்தஸ்நானமுதலானதுகளுங்கர்மமென்றுசொல்லப்படும் இந்தக்கன்மங்களில் இதுவரைக்கும் நாமெம்மாத்திரமானாலுஞ்செய்துக்கொண்டுவந்தோமல்லவா அப்படிசெய்துவந்தகன்மங்களினால் இதுவரையில் நமதுஸ்வரூபந்தெரியாதபடியினால் எவர்களுக்குங்கன்மத்தினாலாத்ம ஞானம்வரமாட்டாதுவிசாரஞானத்தினாலேயேயாத்மஞானம்வரவேண்டியது

ச-கை-அதெப்படியென்னில்.

உ-ம்-ஒருபுருஷனொருவனை இன்றைக்குத்திதிவாரநட்சத்திரயோககரணங்களென்னவென்றுகேட்டால் அவன்விசாரித்திருந்தால்இன்றைக்கின்னவாரம் இன்னதிதிஇன்னநட்சத்திரம் இன்னயோகம் இன்னயோகம் இன்னகரணமென்று சொல்லுவான்விசாரியாதிருந்தால்நான்விசாரிக்கவில்லை ஆதலால் நானறியேனென்று சொல்லுவானேயல்லாமல் நான்ஸ்நானம்பண்ணவில்லை சந்தியாவந்தனம் பண்ணவில்லையாசாரமாயிருக்கவில்லை காஷாயந்தரிக்கவில்லை பூசைபண்ணவில்லையாகையால் நானறியேனென்றுசொல்லமாட்டான்மேலும்கோவிலில் தேவதைகளுக்குப்பூசைநிவேதனமாச்சுதாவென்றுகேட்டால்அவன் விசாரித்திருந்தால் ஆச்சுது ஆகவில்லையென்று சொல்லுவான் இல்லாவிட்டாலெனக்குத்தெரியாதுநான்விசாரிக்கவில்லையென்று சொல்லுவானேயல்லாமல் நான்ஸ்நானசந்தியாவந்தனஅனுஷ்டானஜபதபங்கள் பண்ணாதபடியினாலறியேனென்று சொல்லமாட்டான் இப்படியே உலகத்திலுள்ளசர்வப்பிராணிகளினாலும் எந்தெந்தவஸ்து விசாரிக்கப்படுகின்றதோ அந்தந்தவஸ்துஞானம் வருமன்றிவிசாரியாதவஸ்துஞானம்வரமாட்டாது அதுபோலத் தாஷ்டாந்தத்திலும் ஆத்மஞானமசமஸ்தபிராணிகளுக்கும் அனுபவசொரூபமாகிய ஆசாரியர்முகமாய் விசாரித்தறியாதனால் வரவேண்டுமென்றிக்கர்மவுபாசனைகளினால்வரமாட்டாது.

ச-கை-கன்மத்தினால்ஞானம்வருமென்று சுருதியாதிகள் சொல்லியிருக்க அந்தச்சுருதியாதிகளுக்கு விரோதமாய் கன்மத்தினால் ஞானம்வராதென்றெப்படிசொல்லலாமென்னில்.

உ-ம். ஏகதேசமாகிய நிஷ்காமகர்மமே ஞானத்திற்குப் பரம்பராசாதனமன்றிநானாவிதகன்மமுஞ்சாதனமாகாதாகையினால் அப்படிசொன்னசுருதியாதிகளுக்குமவிரோதமில்லை.

ச-கை- ஆனால்கன்மமெத்தனைவிதமென்னில்

உ-ம்—லௌகிகமென்றும் வைதிகமென்று மிரண்டுவிதம் இவ்விரண்டிலுள் லௌகிககர்மமுஞ்சீவனைத் தாக்கிக்கேதுவாகுமன்றியதனால் ஞானம்பிறவாது ஏனையவைதிககர்மமனேகவிதமாயிருக்கும்.

ச-கை—அதுவெப்படியென்னில்

உ—ம்-நித்தியநைமித்தியகாமியநிஷித்தபிராயச்சித்தமென்னைந்துவிதம் அவற்றுள் காமியகன்மத்தினால் ஞானம்வாராது சொர்க்கமாத்திரம்வரும் நிஷித்தகன்மத்தினால் காலசூத்திராதிநரகங்கள்வரும் பிராயச்சித்தகன்மத்தினால் புருஷனுக்குக்கர்மத்திலதிகாரத்துவமுண்டாக்கிப்பிரத்தியவாயத்தையும்போக்கடிக்கும் ஆதலாலிம்மூன்றுகன்மமும் ஞானசாதகமல்லாமற்போச்சுது.

ச-கை-நித்தியநைமித்தியகன்மங்களோவென்னில்.

உ—ம்—அதுகளும் சாத்துவிகராசததாமதமென மூன்று விதகன்மங்களாயிருக்கும் அவற்றுள் ராசததாமதகர்மங்களிரண்டுஞ் ஜென்மஜென்மங்களையுந் துக்கங்களையுங்கொடுக்கு மன்றியவ்விரண்டினாலும் ஞானம்வாராது சாத்துவிககர்மமாத்திரத்தினால்சித்தசுத்திவரும் அச்சித்தசுத்தியானது ஞானத்திற்குப் பரம்பராசாதனமென்று சொல்லப்படும் இதுவேசுருதியாதிகளின் சம்மதமு மென்றறியவேண்டியது.

ச—கை—அதெப்படியென்னில்

உ—ம்-நித்தியநைமித்தியரூபமாகியசாத்துவிககர்மத்தினால் தன்னைவிசாரிக்கச்சித்தசுத்திவரும் சித்தசுத்தியினாலே நித்தியாநித்தியவஸ்துவிவேகம்வரும் நித்தியாநித்தியவஸ்துவிவேகத்தினாலே இகமுத்திரார்த்தபலபோகவிராகம்வரும் இகமுத்திரார்த்தபலபோகவிராகத்தினாலே சமாதிஷட்கசம்பத்திவரும் சமாதிஷட்கசம்பத்தினாலே முமுக்ஷுத்வம்வரும் முமுக்ஷுத்வத்தினாலே சற்குருலாபமுண்டாம் சற்குருலாபத்தினாலே சிரவணமும் சிரவணத்தினாலே மனனமும் மனனத்தினாலே நிதித்தியாசனமும் நிதித்தியாசனத்தினாலே உள்ளபடியிருக்கிற ஆத்மஞானமும்வரும் இந்தப்படி ஏகதேசமான கன்மம் ஞானத்திற்குப்பரம்பராசாதனமென்றும் விசாரமுண்டாவதுவே சாட்சாத்சாதனமென்றுஞ்சொல்லவேண்டியது.

பேதபதார்த்தங்களுக் கெல்லாமுண்டு, தாஷ்டாந்தமாகிய ஆத்மாவி னிடத்தில் இம்மூன்றுபேதங்களுமில்லை யென்று சுருதியாதிகள் சொல்லுகின்றது.

ச-ங-ஆத்மாவினிடத்தில் சுசாதிகவிசாதிகசுவகதமும் அதின்பேத மும் பிரசித்தியாய்த்தோற்றப்பட்டாலல்லவோ ஆத்மாசுசாதிகவிசா திகசுவகதபேதாகிதமென்று சுருதியாதிகள் சொல்லலாம் அப்படிபி ரசித்தியாய்த்தோற்றுகின்றதாவென்னில்.

உ-ம்-வஸ்துத்வசாமனியத்தினால்பிரசித்தியாய்த்தோற்றுகின்றது.

ச-ங-வஸ்துத்வசாமானியமாவதேதென்னில்

உ-ர்-ஒருவஸ்துஇருக்கிறதென்பதும் ஒருவஸ்துவென்றுதோற்றப் படுமே வஸ்துத்வசாமானியம்.

ச-ங-ஆனால் அனாத்மவஸ்துவினிடத்தில் சுசாதிகவிசாதிகசுவகதமும் அதின்பேதமுங்கண்டோம் அப்படியே ஆத்மாவும் ஒருவஸ்துவானதி னால் அவ்வாத்மாவினிடத்திலும் சுசாதிகவிசாதிகசுவகதமும் அதி ன்பேதமுமுண்டென்று பிரசித்தியாச்சுது ஆகலால்சுசாதிகவிசா திகசுவகதபேதாகிதமென்றுசுருதிகள் சொன்னமாத்திரத்தினலர்த் தப்ரயக்குப்புத்தியிலேறுவதெப்படியென்னில்.

உ-ம்-விசாரித்தாலேயும்.

ச-ங-அதெப்படியென்னில்.

உ-ம்-ஆத்மாசத்ரூபம் அப்படி சத்ரூபமாகிய வாத்மாவுக்குச் சுதந்தர மில்லையல்லவா ஆனதினால்சுசாதிகவிசாதிகசுவகதபேதாகிதமென் றயுக்தியிலேயூகித்தறிந்தாலேயும்.

ச-ங-அதெப்படி [illegible] அவன் இவன் தேவதத்தன் எஜ்ஞதத்தன் ராமன் கிருஷ்ணனென்கிறவிவர்களிருக்கிறார்களென்றும் பிருதிவிசதி அப்புசதிவாயுசதி தேயுசதி ஆகாசசதியென்றும் சத்துக்களே பேதங்காணப்படுகிறபடியினால் ஆத்மாசுசாதிகவிசாதிகசுவகதபே தாகிதமென்றெப்படியறியலாமென்னில்.

உ-ம் எல்லாவற்றிலும்சதிசதியென்றும்சத்துவசரூபமாய்க்காணப்படு கிறபடியினால் ஆத்மாசுசாதிகவிசாதிகசுவகதபேதாகிதமென்றே சொல்லலாம்.

ச-ங-அப்படி சொல்லப்பட்டது பூர்ணசத்துவசரூபமாயிருக்கிறபடி யாலதற்குப்பேதமில்லையேயென்று சொல்லியபடிகடகடவென்கிற துபோலரூபமாயிருக்கிறபடியால் அங்குப்பேதமில்லாமற் போகவே

ச-ங- அதெப்படியென்னில்,

உ-ம் பிருதிவியாதிகளுக்குச்சுவயகாரியமானசதுர்விதபூதக்கிராமத்தில் அநுகூலத்வமிருக்கிறதுபோலஆத்மாவுக்குச்சுவயகாரியமானபிரபஞ்சத்திலனுகூலத்வமிருக்கிறபடியால் வியாபகத்வமும் ஆகாசாதிகளுக்குச்சர்வமூர்த்திரவியசையோகத்வமிருக்கிறதுபோலஆத்மாவுக்குஞ்சர்வமூர்த்திரவியசையோகமிருக்கிறபடியால்விபுத்வமுமிருக்கின்றது,

ச-ங- ஆனால்வியாபகமானவனே யாத்மாவிபுவானவனே யாத்மாவென்றுசொல்லலாமேயென்னில்,

உ-ம்- அப்படிசொல்லுமிடத்து ஆத்மாவுக்குத்துவிதந்தோற்றுகிறபடியாலஸங்கங்கூடாது அபரிச்சின்னத்வமே பரிபூரணத்வம் அநித்யத்வமே யபரிச்சின்னத்வம்மேலும் அநித்யத்வமேயபரிச்சின்னத்வமானபோதிலுமிதுவும் விசாரிக்கவேண்டும்,

ச-ங- அதெப்படியென்னில்,

உ-ம்- திரிவிதபரிச்சேதசூனியத்வமேயபரிச்சின்னத்வம்,

ச-ங- திரிவிதபரிச்சேதமாவதேதென்னில்,

உ-ம்- தேசகாலவஸ்துவேதிரிவிதபரிச்சேதம்,

ச-ங- தேசகாலவஸ்துவினாலாத்மாவுக்குப்பரிச்சேதம் பிரசித்தமாச்சுதேயென்னில்,

உ-ம், அஞ்ஞானியாகியபிராந்தியினாற்பிரசித்தமாச்சுது,

ச-ங, அதெப்படியென்னில்,

உ-ம், நானிந்தத்தேசத்திலிருந்தேன் அந்தத்தேசத்திலில்லையென்றுதேசத்தினாலும் இந்தவருஷத்திற்பிறந்தேனினிமேல்நானில்லாமற்போகப்போகிறேனென்றுகாலத்தினாலும் இந்தவஸ்துநான் அந்தவஸ்துநானல்லவென்றுவஸ்துவினாலும் ஆத்மா பிராந்தியினாற்பரிச்சேதமாகத்தோற்றுகின்றது, அதை விசாரிக்குமிடத்திலில்லை,

ச-ங, அதெப்படியென்னில்,

உ-ம்- ஆத்மாவியாபகனாயிருக்கிறபடியால் தேசத்தினாலும் நித்தியனாயிருக்கிறபடியால் காலத்தினாலும் சர்வாத்மனாயிருக்கிறபடியால் வஸ்துவினாலும்பரிச்சேதமில்லை,

ச-கை- திரிவிதபரிச்சேதசூனியமேயபரிச் சின்னத்வமென்றேன் சொல்லவேண்டும் தேசத்தினாற்பரிச்சேதரகிதமே அபரிச்சின்னத்வமென்று சொல்லலாகாதாவென்னில்,

உ-ம்- தேசபரிச்சேதராகிதம் ஆகாயத்துக்கிருப்பதால் அதற்கும் அபரிச்சின்னத்வம்வரும் அதைநிராகரிக்கிறநிமித்தம் காலத்தினாலும் ஆத்மாபரிச்சேதரகிதனென்றங்கீகரிக்கவேண்டும்,

ச-கை- ஆனாலாகாசத்திற்குக் காலபரிச்சேதமுண்டாவென்னில்,

உ-ம்- சுருதிகளிலாகாசத்திற்கு நாசஞ்சொல்லுகிறபடியினால் காலத்தினாலாகாசத்திற்குப்பரிச்சேதமுண்டு.

ச-கை- ஆனாலாத்மாவுக்குத் தேசத்தினாலுங்காலத்தினாலும் பரிச்சேதராகிதமேயபரிச் சின்னத்வமென்று சொல்லலாமேயெனில்,

உ-ம்- காலத்திற்குத்தேசத்தினாலுந்தன்னாலும் பரிச்சேதராகிதமாயிருக்கிறபடியாலதற்கும் அபரிச்சின்னதவம்வரும் அதைநிராகரிக்கிறநிமித்தம் வஸ்துவினாலும் பரிச்சேதராகித்யமேயபரிச் சின்னத்வமென்றங்கீகரிக்கவேண்டும்,

ச-கை- ஆனால்காலத்திற்குவஸ்துபரிச்சேதமுண்டாவென்னில்,

உ-ம்- காலம் ஆகாசாதிவஸ்துவல்லாதபடியால் காலத்திற்கு வஸ்துவினாற்பரிச்சேதமுண்டு,

ச-கை- அப்படியானால் ஆத்மாவுக்கும்வஸ்துவினாற் பரிச்சேதந்தோற்றுகின்றது எப்படியென்றால் ஆத்மாவுக்கு வியாபகத்வமும் நித்தியத்வமு மிருக்கிறபடியால் தேசத்தினாலுங் காலத்தினாலும் பரிச்சேதராகிதமுண்டானபோதிலும் ஆத்மா ஆகாசாதி வஸ்துவல்லாதபடியினால் பரிச்சேதந்தோற்றுகின்றதேயெனில்,

உ-ம்; அதனாலுமாத்மாவுக்குப்பரிச்சேதமில்லை,

ச-கை- எப்படியில்லையென்னில்,

உ-ம்- ஆகாசகாலமே வாயுகாலமே தேயுகாலமே அப்புகாலமே பிருதிவிகாலமேயென்று விவகாரமின்மையால் காலத்தையுபாசித்துக்கொண்டு ஆகாசாதிகளிருக்கவில்லை மேலும்அவ்வாகாசாதிகளைப்போற்காலமும் அநித்தியாபரிணாமமாகையினாலும் விவகாரத்தில் காலமும் ஆகாசாதிகளும் பின்னசத்தா காரமாகத்தோற்றுகிறபடியினாலும் கடாதிகளினால் கடாதிகளுக்குப்பரிச்சேதம பிரத்தியட்சமாய்த்தோற்றுகிறதுபோல வஸ்துவினாற் காலத்திற்குப்பரிச்சேதம பிரத்தியட்சமாய்த் தோற்றுகின்றது, ஆதலால்வஸ்துவினால் காலத்திற்குப்பரிச்சேதஞ்சொல்வது யுக்தமே ஆத்மாவோவென்றால்

ஆகாசாதிகளல்லாத வஸ்துவைப்போற் றோற்றப்பட்டாலும் எப்போதுஞ் சந்மாத்திரமாயிருக்கின்றபடியாலும் அவ்வாத்மசொரூபமாகியசத்தையுபஜீவித்துக்கொண்டேயாகாசாதிகளிருக்கிறபடியினாலும் பழுதையினிடத்தாரோபிக்கப்பட்டபாம்பு அந்தப்பழுதையையன்றி யெப்படிபரிச்சேதமல்லவோ மிருத்துவினிடத்திற்றோற்றப்பட்டகடாதிகள்மிருத்து வன்றியெப்படிபரிச் சேதமல்லவோ அப்படிபோல ஆத்ம சொரூபமாகிய சத்தினிடத்திற்றோற்றப்பட்ட ஆகாசாதிவஸ்துக்களும் ஆத்மசொரூபமாகிய சத்துக் கன்னியமல்லாதபடியினா லாத்மாவுக்குப்பரிச் சேதமல்ல ஆதலாத்மாவுக்கு வஸ்துவினாலும்பரிச் சேதமில்லை யென்பதுயுக்தமே,

ச-ங்கை- தேசமுங்காலமும் வஸ்துவாயிருக்கிறபடியினால் அந்தவஸ்துவினாற் பரிச்சேதரகிதமேயாத்மாவுக்கு அபரிச்சின்னத்வமென்று சொன்னதுபோதாதோவென்னில்,

உ-ம்- போதும் ஆனாலுந்தேசகாலங்களுக்கு ஆகாசாதிகளைப்போலவஸ்துத்வப் பிரசித்தியின்மையினாலும் ஆத்மாவுக்குச்சுருதிகதமாகிய வியாபகத்வமும் அனுபவமான ஞானத்தினால் வந்ததேகேந்திரியாதியத்தியாசத்தினாற்றோற்றாதபோனபடியினாலும் அந்தப்பிராந்தியைத்தள்ளுகிறதுக்கிதங்களையுஞ் சொல்லவேண்டிற்று, இங்ஙனத்திரிவிதபரிச்சேதசூனியத்வமே, அபரிச்சின்னத்வம் அஃதேதபரிபூரணத்வம் அஃதேயகண்டத்வம் அஃதேயத்துவிதியத்வம் என்றுசுருதியாதிகளிற் சொல்லுகிறபடி சற்குருமுன்னிலையில்விசாரித்தறிந்தவனேமுத்தன்,

ச-ங்கை- ஆனாலாத்மாவுக்கு அசங்கத்வமெப்படியென்னில்,

உ-ம்- சங்கத்வம் பிரசித்தமானாலல்லவோ அசங்கத்வம் விசாரிக்கவேண்டும்,

ச-ங்கை- விசாரத்தினால் தள்ளப்பட்டசங்கத்வம் ஆத்மாவுக்குண்டோவென்னில்,

உ-ம்- உண்டு-

ச-ங்கை- அதெப்படியென்னில்,

உ-ம் பிராந்தியினால் வந்ததேகேந்திரியாதியத்தியாசத்தினால் ஆத்மாவுக்குச் சங்கத்வந்தோற்றப்படுகின்றது இதுவுமன்றி அவர்களுடன் கூடிக்கொண்டிருந்தேன் இவர்களுடன் கூடிக்கொண்டிருந்தேனென்று சங்கத்வந்தோற்றப்படுகின்றது ஆதலால் சுருதி விசாரத்தினு

லாத்மா அத்விதீயனென்றெப்போது நிரூபிக்கிறதோ அப்போதிரண்டாம் வஸ்துவில்லாதபடியினா லாத்மாவுக்குச் சங்கத்வந் தள்ளுபட்டது

ச-கை- ஆனால் பரமாத்மா சீவாத்மா வென்பதின்றி அத்விதீயனால அசங்கனாயிருந்தபோதிலும் விவகாரகாலத்திற்சங்கங்களைப்போற்றோற்றுவதா லாத்மாவுக்கு அசங்கத்வ மெப்படி கூடுமென்னில்

உ-ம்- திருஷ்டாந்தத்தில் பழுதையாதிகளிடத்தி லாரோபிக்கின்ற பாம்பாதிகளுடன் கூட அந்தப்பழுதையாதிகளுக்கெப்படிகாலத்திரயத்திலுஞ்சங்கமில்லையோ அப்படியே யாத்மாவினிடத்திலும் ஆரோபிதமாய்த்தோற்றுகின்ற தேகேந்திரியாதிப் பிரபஞ்சத்துடன் கூடியும் ஆத்மாவுக்குக் காலத்திரயத்திலுஞ்சங்கமேயில்லை இதுவுமன்றி உலகத்தில்சாவயவமாயிருக்கப்பட்ட பதார்த்தங்களுக்கன்றியோன்றி சங்கங்கள் கண்டோம் நிரவயவமாயிருக்கப்பட்ட பதார்த்தங்களுக்குச் சாவயவமாயிருக்கப்பட்ட பதார்த்தங்களுடன் கூடியுங் காலத்திரயத்திலுஞ் சங்கங்காணோம்,

ச-கை- அதெப்படிகாணோமென்னில்-

உ-ம்- பரமார்த்தத்தில் நிரவயவமென்று சம்மதமாயிருக்கப்பட்ட ஆகாசாதிகளுக்குப்பிருதிவியாதிகளுடன் கூடச் சங்கஞ்சொல்லக்காணோம்அப்படிசொன்னால் ஜலாதிசங்கத்தினால் வஸ்திராதிகளுக்கு சாமுதலானதுகள்வருவதுபோல் ஆகாசாதிகளுக்கும்பிருதிவியாதிகளுடன்கூடின சங்கத்தினால் அந்தப்பிருதிவியாதிகளின் விகாரம்வரவேண்டும் அங்ஙனமின்மையால் அவ்வாகாசாதிகள் பிருதிவியாதிகளுடன் கூடிக்கொண்டதுபோலத் தோற்றினாலும் அவ்வாகாசாதிகளுக்குப் பிருதிவியாதிகளுடன்கூடியுமெப்படி சங்கமில்லையோ அப்படிபோல ஆத்மாவும்பிராந்தியினாலேதான் தேகேந்திரியாதிப்பிரபஞ்சத்துடன் கூடிக் கொண்டிருக்கிறவனைப்போலத் தோற்றமாகத்தோற்றினாலும் ஆத்மா அசங்கனே அல்லாமலும் விவகாரகாலத்திற்பரமார்த்தத்தை யநுசரித்து ஆகாசாதிகளுக்கு நிரவயத்வமங்கீகரித்து இப்படிசொன்னோம் பரமார்த்தமாக விசாரிக்குமிடத்தில்ஆகாசாதி சர்வபதார்த்தமும் பிராந்தியினால் ஆத்மாவினிடத்திலாரோபிதமாகத் தோற்றியபடியால அவ்வாரோபிதபதார்த்தங்களும் பழுதையிற் றோற்றப்பட்ட பாம்பாதிகளைப்போலவே அதிஷ்டான ஆத்மசத்தேகஸ்வரூபமாயிருக்கிறபடியினால் காலத்திரயத்திலும் அத்விதீயனாகியவாத்மா வசங்கனென்பதிற் சந்தேகமில்லை,

ச-கை- ஆனாலாத்மாவுக்கு அகர்த்தத்வமெப்படியென்னில்,

உ-ம்- கர்த்ருத்வம்பிரசித்தமானதல்லவோ அகர்த்ருத்வம்விசாரிக்க வேண்டும்,

ச-கை- விசாரத்தினால் தள்ளுபட்டகர்த்ருத்வம் ஆத்மாவுக்குண்டோ வென்னில்,

உ-ம்- உண்டு.

ச-கை- அதெப்படியென்னில்,

உ-ம்- நான்ஸ்நானம்பண்ணினேன் ஸ்நானம் பண்ணப்போகிறேன் ஜெபம்பண்ணினேன் ஜெபம்பண்ணப்போகிறேன் அக்நிஹோத்திரம் பண்ணினேன் அக்நிஹோத்திரம் பண்ணப்போகிறேன் யக்ஞம் பண்ணினேன் யக்ஞம்பண்ணப்போகிறேன் என்கிற கர்த்ருத்வம் அத்தியாசத்தினாலே ஆத்மசுபாவமாகவே தோற்றப்படுகிறபடியால் அதைநிராகரிக்கு நிமித்தம்விசாரிக்கவந்தது,

ச-கை- ஆனாலாத்மாவுக்கு அகர்த்ருத்வமெப்படியென்னில்,

உ-ம்- உலகத்தில்கர்த்ருத்வமென்பது,கிரியைகள் முன்னிலையாய் நானென்றுசிறியதுபரிச் சின்னமாய்சங்கமாய்சாவயவமாய் விகாரமாயக்கலங்களை யாசிரயித்துக்கொண்டிருப்பதாகக் கண்டோம் ஆத்மா அபரிச்சின்னமாய் அசங்கமாய் நிருவிகாரியாய் நிரவயமாயிருக்கிறபடியால் அவ்வாத்மாவுக்குக்கர்த்ருத்வஞ் சொல்வது கூடாது ஆத்மா அகர்த்தா வென்றே சொல்லவேண்டும் ஆத்மாவுக்கு அத்விதியஞானத்தினால் அகர்த்ருத்வஞ்சித்திக்குது அப்படி சித்திக்காதும் நன்றாயறியவேண்டி. விசேஷமாகச்சொல்லுகிறோம் விவகாரத்தில்லாளுதல்கிரியை யாசிரயத்வம் நானென்கிறவிடமான கர்த்தவியம் தேகாதிகளுக்கேகண்டோம் வியாபகத்வமாகியவாகாசாதிகளுக்குக்காணோம் ஆகலால் அபரிச்சின்னமாகியவாத்மாவுக்கு கர்த்ருத்வமில்லையென்பதுசொல்லவேண்டுமோ யுக்தியினால் வந்ததேதேகத்திரியாதி யத்தியாசத்தினால் ஆத்மாகர்த்தாவைப்போற்றோற்றினபோதிலும் விசாரிக்கிறபோதும் அனுபவிக்கிறதும் அபரிச்சின்னமாயிருக்கிறபடியால் அகர்த்தாவென்பதிற் சந்தேகமில்லை,

ச-கை- ஆனாலாத்மாவுக்கு அபோக்த்ருத்வமெப்படியென்னில்,

உ-ம்- போக்த்ருத்வம்பிரசித்தியானதல்லவோ அபோக்த்ருத்வம் விசாரிக்கவேண்டும்.

ச-கை- விசாரத்தினால் தள்ளுபட்டபோக்த்ருத்வம் ஆத்மாவுக்குண்டோவென்னில்,

உ-ம்- உண்டு,

ச-கை- அதெப்படியென்னில்

உ-ம்- நான்போஜனம்பண்ணினேன் அனேகபோகங்களனுபவித்துக் கொண்டிருக்கிறேனென்று பிராந்தியினாலாத்மாவுக்குப் போக்த்ருத்வந்தோற்றப்படுகின்றது விசாரிக்கும்போது சர்வாத்மனாயில்லை,

ச-கை- எப்படியில்லையென்னில்.

உ-ம்- அக்கினியனுவிருக்கிறபடிமால்போக்த்ருத்வஞ்சொல்லக்கூடாது ஆகலாலாத்மா அபோக்தாவென்பதிற் சந்தேகமில்லை மேலும்உலகத்தில் தேவதத்தாதிகள் தங்களுக்குவெகுருத்யமான அன்னாதிகள் புசிக்கிறதாய்க்கண்டோம் அந்தத்தேவதத்தாதிகள் தங்களுக்குத் தாங்களே போக்கியமாயிருப்பது எங்கேயுங்காணோம் போக்கியவஸ்துவில்லாமற் போக்த்ருத்வமென்பதுங்காணோதபடியினாலத்விதியனாகியவாத்மாவுக்கு அபோக்த்ருத்வஞ்சித்திக்கது இந்தப்படியருளைதிருமேனிபாகிய பரமாசாரியர்முன்னிலையில் ஐயந்திரிபின்றி விசாரித்தறிந்து அத்விதியனாய் அபரிச்சின்னனாய் அசங்கனாய் அகர்த்தாவாய் அபோக்தாவாகிய ஆத்மாவேநானென்றறிவனெவனோ அவனே நிஜநிஷ்டையுடையனாகிய சீவன்முக்தனும் பரமுத்தனுமென்று சுருதிஸ்மிருதியிதிகாசபுராணாகமங்களிற் சொல்லப்படுகின்றது இதிற்சந்தேகமில்லைசித்தம்,

ஞானாஞ்ஞானசொரூபநிரூபகம் - முற்றிற்று.

---

பதினொருவது,

# சரீரத்திரய நிரூபகம்.

(*)(*)(*)

ச-கை- பிராணிகளுக்குச்சரீரத்திரயம் விசாரிப்பதிற்பிரசித்தியாவதேது பிரயோசனமாவதேதென்னில்.

உ-ம்- ஸ்தூலசரீரமெல்லாருக்கும் பிரத்தியட்சமாய்த்தோற்றப்படுகின்றது மின்னை இரண்டுந்தோற்றப்படவில்லை இதுவுமல்லாமல்வேதாந்தசாஸ்திரங்களுக் கன்னியமானவர்களெல்லாம் இந்திரியங்கள் தோற்றியபோதிலும் பிரத்தியட்சந்தோற்றானுகிறசரீரமொன்றுமாத்திரமேயன்றி வேறேயொரு சரீரமில்லை யென்றுசொல்லுகிறபடியினால்பிரசித்தியுண்டுமேலும்இந்தவிசாரத்தினாலேயே சூக்ஷ்மகாரணதேகாதிகளும் அந்தந்தேகசுபாவமாகிய விகாரங்களும் காலத்திரயத்

திரயத்திலும் ஆத்மாவைஸ்பரிக்கவில்லையென்று தோற்றப்படுகின்றது இப்படித் தோற்றப்படுகிறதே இந்தவிசாரத்திற்குப்பலமாகிய பிரயோசனம்,

ச-கை, ஆனாலும்விசாரிப்போம்பிராணிகளுக்கெத்தனைசரீரமென்னில்

உ-ம், தூலசூட்சுமகாரணமென்றுமூன்றுசரீரம்,

ச-கை, தூலத்துக்குச் சரீரலட்சணமிருக்கிற படியாலிருக்கலாம் சூட்சுமகாரணசரீரங்களுக்குச் சரீரத்வமெப்படிகூடுமென்னில்,

உ-ம், அதுகளுக்குஞ்சீரணித்துப்போகிற லட்சணமிருக்கிறபடியால் சரீரத்வமுண்டு

ச-கை, அதுகளுக்குச்சீரணத்வமெங்கேகாணப்படுகிறதென்னில்,

உ-ம், சுழுத்தியிலும் மூர்ச்சைகளிடத்திலுங்காணப்படுகின்றது

ச-கை, இந்தச்சூட்சுமகாரண சரீரங்களிரண்டுந்தூலத்தைப்போற் பிரத்தியட்சமாய்க்காணுகிறபடியில்லையென்று சொல்லுவோமேயென்னில்,

உ-ம், அவ்விரண்டுசரீரமுஞ் சாஸ்திரங்களாலுண்டென்று சொல்லுகிறபடியினாலும் பெரியோர்களால் அங்கீகரிக்கப்பட்டபடியினாலுமில்லையென்பதுகூடாது,

ச-கை, ஒருபிராணிக்குத்தூலசரீரமொன்றுதானே சூட்சுமகாரண சரீரமெத்தனையென்னில்,

உ-ம். தூலசரீரமொன்றுன் அனந்தம்சூட்சுமமுங்காரணமுமொவ்வொன்றேயாம்,

ச-கை, இம்மூன்றுக்குஞ் சரீரத்வந்துல்லியமாயிருக்கத் தூலசரீரமனந்தமாகவும் சூட்சுமகாரணசரீர மொவ்வொன்றாகவுமிருக்கிறதென்னவென்னில்,

உ-ம், சூட்சுமகாரணசரீரங்கள் கர்மஜந்நியமல்லாதபடியினாலதுகளொவ்வொன்றாயிற்று,

ச-கை, அதுகளுக்குப்பிரகாராந்தரத்தினாலுங்கர்மஜன்யத்வமங்கீகரிக்கப்படுமேயென்னில்,

உ-ம், அப்படிகூடாது

ச-கை சூட்சுமகாரணசரீரங்களுக்குக் கர்மஜன்யத்வமங்கீகரிக்காதபடியினாற் சரீரத்வமேயில்லாமற்போகின்றது, போனாற்போகட்டுமென்றெண்ணுவோமானாற் பிராணிகளுக்கு மூன்றுசரீரமென்று சொன்னதெடுபட்டுப்போச்சுதேயென்னில்

உ-ம், அப்படியல்ல, சூட்சுமசரீரத்திற்குப்பிரகாராந்தரத்தினாலு

ச-கை- ஆனால் இந்தவிசாரத்தைவிட்டுவிட்டுப் பின்னெதுவாகிலுஞ் சொல்லுவோமேயென்னில்.

உ-ம்- பின்னேயொன்றுஞ் சொல்லுவதற்கிடமில்லை ஆனபடியினால் இப்போது சூட்சுமசரீரங் கர்மஜன்னியமென்று சொன்னதற்கும் ஜீவனுக்கநாதித்வத்திற்கும் சூட்சுமசரீரமொன்றென்றதற்கும் பூர்வம் சூட்சுமசரீரங் கர்மஜன்னியமல்லவென்றதற்கும் விரோதம்வாராமற்பின்னும் சொல்லுகிறோம் இப்போது காரணசரீரத்திற்கு ஜென்னியத்வஞ்சொல்லாமல் சரீரத்வலட்சணத்தைச்சொல்லுகின்றோம்,

ச-கை- அதேதென்னில்,

உ-ம்- சூட்சுமசரீரத்திற்கு ஜன்னியத்வமங்கீகரித்தல்லவா காரணசரீரத்வமங்கீகரிக்கப்படவேண்டும்,

ச-கை- காரணசரீரத்திற்கு ஜன்னியத்வமங்கீகரியாமல் எப்படி சூட்சுமசரீரத்வஞ்சொல்லக்கூடுமென்னில்.

உ-ம்- அதற்குந்தேகமேயென்ற சரீரலட்சணமிருக்கின்றது ஆதலால் சரீரத்வஞ்சொல்லக்கூடும்,

ச-கை- அதெப்படியென்னில்,

உ-ம்- சடாதிப்பிரகாசமாவது அஞ்ஞானமாயிருக்கபோதிலும் அதற்குக்கடாதியுற்பத்தியிலுள்ளதுபோல் மெய்ப்படியோ பிரதிபுருஷசையோகம் அஞ்ஞானமாயிருக்கபோதிலும் தப்பிரதிபுருஷசாதனையினவேகத்தினால் அதற்குசரமெய்ப்படியோ அப்படியேபோலவே அஞ்ஞானமென்றகாரணசரீரத்திற்கு பிரமாத்மவிக்யஞானத்தினால் நாசம்வரலாம் அதற்குந்தரீரத்வமங்கீகரிக்கிறது விருத்தமல்லஇத்தப்படி சூட்சுமசரீரத்துக்குற்பத்தியங்கீகரித்தோமானால் ஒருவிரோதமுமில்லை.

ச-கை- எப்படியில்லையென்னில்.

உ-ம்- சூட்சுமசரீரத்திற்குற்பத்தியங்கீகரித்தால் அதற்குற்பத்திசொல்லுகிறசுருதிகளுக்கும் விரோதமில்லை சூட்சுமசரீரம் ஆத்மகாரியமாயிருப்பதினாலும் காரணமான அஞ்ஞானமென்று வேறிருக்கிறபடியினாலும் ஆத்மாவுக்கு அநாதித்வத்திற்கும் ஆனியில்லை, ஜீவனுக்கு அநாதித்வபங்கமுமில்லை,

ச-கை- அதெப்படியென்னில்-

உ-ம்- பிரளயத்திலுஞ்சூட்சுமசரீரங்காரணத்தமகமா யிருக்கிறபடியினாலும் உபாதிக்கேதுவாகியபசிவாசுர்ஸ்காரமு மிருக்கிறபடியினாலும் சீவனுக்கு அநாதித்வபங்கமில்லை,

ச-கை- இந்தப்படிசூட்சுமசரீரம்பிரளயத்திலிருந்தா லதற்குற்பத்தி சொல்லக்கூடாதேயென்னில்,

உ-ம்- அப்படிசொல்லாதாயுக்தமல்ல,

ச-கை- உலகத்திலிருக்கிறவிடத்தில் இல்லாதகடத்துக்கே யுற்பத்திகண்டோம் இருக்கிறபிருத்வாதிகளுக்குற்பத்திகாணோமே யென்னில்,

உ-ம்- அப்படிசொல்லக்கூடாது,

ச-கை- ஏன்சொல்லக்கூடாதென்னில்,

உ-ம்- இல்லாதவஸ்து அசத்து அவ்வசத்துக்குற்பத்திசொன்னால் சசவிஷாணாதியும்பிறக்கவேண்டும் அங்ஙனமின்மையால் அசத்துக்குற்பத்திசொல்லக்கூடாது.

ச-கை- பின்னையெப்படியென்னில்.

உ-ம்- இருக்கிறவஸ்துவுக்கு அதற்கேயுற்பத்திசொல்லவேண்டுமென்பது உலகத்திற்கண்டோம்.

ச-கை- அதெப்படியென்னில்,

உ-ம்- கடம்பண்ணவேண்டிப் பிரவர்த்திக்கிற புருஷன்மிருத்திகையெடுத்துவருகிறான் தயிர்வெண்ணெய்வேண்டுமென்றவன் பால்சம்பாதிக்கிறான் எண்ணெய்வேண்டினவன் எள்ளுசம்பாதிக்கிறான் இங்கிருந்தாதிகளிடத்திற் கடாதிகளுண்டாகாமற்போனாலவனவன் அதுவதுகளை நியமமாயேன்சம்பாதிக்கிறான் இல்லாமற்சம்பாதியான் சம்பாதிக்கிறபடியினால் இருக்கிறவஸ்துவுக்குற்பத்திசொல்லவேண்டும் இல்லாதவஸ்துவுக்குற்பத்திசொன்னாலிந்தக்காரியத்துக்கிதுவேகாரணமென்கிறநியம மில்லையாகின்றது அப்படியானால் நூலிற்கடமும் மண்ணிற்புடவையும் தண்ணீரிற்றயிரும்வெண்ணெயும் மணலிலெண்ணெயுமுண்டாகவேண்டும் அப்படியுண்டாகாதபடியினால் அதுஅதுகளுக்கு நியமிதமானகாரணத்திலேயேகாரியமுண்டாகிறதுகண்டோம் ஆகையாலிருக்கிறவஸ்துவே பிறக்கிறதென்றுசொல்லவேண்டும் அந்தந்தக்காரியத்துக்குக்காரணமாயிருக்கிற வஸ்துவிருக்கிறபடியினாலது வழிப்படியே பிறக்கிறதென்று சொல்லக்கூடாது.

தேவர்திரியக்காதிகள் பிராமணக்ஷத்திரிய வைசிய சூத்திரர்களென்கிற விவஸ்தைகளில்லாமற் போகவேண்டும் இந்தக்தோஷங்கள்வந்தாலும் வரட்டுமென்கிறதுசிதமல்ல, ஆதலாற்பிரளயத்திலுஞ் சம்ஸ்காராத்மகமாயிருக்கிற சீவர்களதுகர்மத்தினலேயே ஆகாசாதிஜெகத்துபிறந்தா மென்பதிற்சந்தேகமில்லை இப்படியாகாசாதிகள்கர்மத்தினற் பிறந்தபோதிலுமுக்திபரியந்தமுமொன்ருகவேயிருக்கின்றது அன்றியும் பிரளயத்தில்லயித்திருந்து சிருஷ்டியில் ஆகாசமாகாசமாகவும் வாய்வுவாய்வாகவும் தேய்வுதேய்வாகவும் அப்புஅப்புவாகவும் பிருதிவிபிருதிவியாகவும் பிறக்கிறது அதுபோலச்சூட்சமசரீரம்பிரளயத்தில்லயித் திருந்தபோதிலுமந்தந்தச் சீவர்களதுகர்மத்தினற் பூர்வகற்பத்திலிருந்ததுபோற் பிரதிகற்பத்திலும் பிறக்கின்றது இப்படிபிறந்தபோதிலுஞ்சம்சாரவிநாசமாயிருந்தபோதிலும் சூட்சமசரீரம் ஒவ்வொருபிராணிக்கு முத்திபரியந்தமு மொன்றென்பதிற்சந்தேகமில்லை.

ச-கை- இப்படிசொன்ருல் முத்திக்குப்பிறகு சூட்சமசரீரங்களனேகமாயிருக்குமென்றுதோற்றுகின்றதேயென்னில்,

உ-ம்- முத்திக்குப்பிறகு சூட்சமசரீரம் இல்லவேயில்லை ஆதலாலந்தச்சங்கைக்கவகாசமில்லை இந்தப்படிசூட்சமசரீரம் ஆகாசாதிகளைப்போல் சாமானியகர்மஜன்னியத்தினற் பிறந்திருக்கிறபடியினலொவ்வொருபிராணிகளுக் கொவ்வொருசரீரமென்று சொன்னது யுக்தமே,

ச-கை- இப்படிசொல்லுகிறது விரோதமாகத் தோற்றுகின்றதே யென்னில்,

உ-ம், அதில்விரோதமேயில்லை.

ச-கை- ஆகாசாதிகள்சர்வப் பிராணிகளுடையகர்மத்தினற்பிறந்ததாகையால அவ்வாகாசாதிகளுக்குச் சாமானிய கர்மஜன்யத்வமும் பிரளயபரியந்தமொன்ருயிருக்கின்றது பிரதிகற்பத்திலு மப்படியே பிறக்கிறதும்யுக்தமே.அந்தந்தப் பிராணிகளுடைய சூட்சமசரீரம்சமஸ்தபிராணிகளதுகர்மத்தினும் பிறந்ததல்லவே ஆகையால் அதுக்குச்சாமானியகர்மஜன்னியத்வமும் ஒவ்வொருபிராணிகளுக்கொவ்வொன்றென்பது பிரதிகற்பத்திலப்படியப்படி பிறக்குமென்பதுமெப்படிகூடுமென்னில்,

உ-ம்- ஆகாசாதிகளைப்போலந்தப் பிராணிகளுடைய சூட்சமசரீரங்கள் சமஸ்தபிராணிகளுடைய கர்மத்தினற் பிறக்காமறபோனலும்

அந்தந்தப்பிராணிகளுக்குச்சிருஷ்டிமுதற் பிரளயபரியந்தமுந்தூல சரீரத்துவாராசுகதுக்கங்களைக் கொடுக்கிற கன்மங்களினாலேயே அந்தந்தப்பிராணிகளது சூட்சுமசரீரங்களப்படியப்படியே பிறக்கின்றது ஆதலாலந்தச்சூட்சுமசரீரத்திற்குச் சாமானியகர்மஜன்னியத்வமும் ஒவ்வொருபிராணிக்கொவ்வொரு சூட்சுமசரீரமென்பதும் பிரதிகற்பத்தி லப்படியப்ப டியேயிருக்குமென்பதும் முத்திபரியந்தம் நித்தியமென்பதுங்கூடும்,

ச-கை- ஆனால்லீனமானவஸ்துகர்மத்தை யபேட்சித்துப்பிறக்குமென்பதற்கும் சாமானியகர்மத் தாற்பிறந்தவஸ்துவொன்றாயிருக்குமென்பதற்கும் விசேஷகன்மத்தினாற்பிறந்தவஸ்து நானாரூபமாயநேகமாயிருக்குமென்பதற்குந் திருஷ்டாந்தமுண்டோவென்னில்.

உ-ம்- உண்டு, காஷ்டபாஷாணாதிகளிடத்தில் லீனமாயிருக்கிறஅக்கினிக்கு மர்த்தனாதிரூபமான கர்மத்தினாலெப்படியுற்பத்தியோ அப்படியே காரணரூபமானசூட்சுமசரீரத்திற்குக் காரியகாரணமாகத் தோற்றுகிறகர்மத்தினாலேயே யுற்பத்திசொல்லப்பட்டது, இதனாற்காரியம்அசத்தென்பதுகூடாது மேலுங்குலாலனால் நானாவிதபாண்டங்கள் பண்ணவேண்டுமென்று சம்பாதிக்கப்பட்டமண்மொத்தையொன்றேஅதுஅநேககர்மத்தினாற் பண்ணப்பட்டாலும் அக்கருமங்களெல்லாம் அந்தமிருத்துபிண்டத்தினாற் பிறந்த வநேகம்பாண்டங்களுக்கெல்லாஞ் சமானமாயிருக்கிறபடியினால் அம்மண்மொத்தைசாமானியகர்மமானதால அந்தமிருத்துபிண்டமொன்றேயாகும் மேலும்அம்மிருத்து பிண்டத்தினாற்பண்ணப் பட்டபாண்டங்களில் ஒருபாண்டம் பண்ணப்பட்டகர்மத்தினால் மற்றொருபாண்டம் பண்ணப்படவில்லை யாகையால் அந்தப்பாண்டங்களெல்லாம் விசேஷகர்மஜன்னியமே, அந்தப்பாண்டங்கள நானாரூபமாகவும் அநேகமாகவுமிருக்குமென்பதும் சர்வானுபவசித்தமே, இந்தப்படி சூட்சுமசரீரஞ்சாமானிய கர்மஜன்னியமானபடியினா லொவ்வொருபிராணிக்கொவ்வொரு சரீரமென்பதும்தூலசரீரம் விசேஷகர்மஜன்னியமானபடியினாலொவ்வொரு பிராணிக்கனந்தமென்பதுங்கூடும்.

ச-கை- இன்னம் இதற்குவிசேஷமான திருஷ்டாந்தமுண்டோ வென்னில்,

உ-ம்- உண்டு, உலகத்தில் ஒருதேவதத்தனுக்குக்கர்மசாதனநானா விதவிந்திரியங்கள் வருகின்றது அது வொன்றுபோ லொன்றிரு

க்கவில்லை யப்படியேவிசேஷகன்மத்தினுலெப்படி யெப்படி வருகின்றதோ அதுபோலத் தூலசரீரங்களுமொவ்வொரு பிராணிக்குவிசித்திரமாய் அனேகமாகவும் வருகின்றதால் அந்தத் தூலசரீரங்களும் விசேஷகர்மஜன்னியமென் றறியத்தக்கது அந்தத் தேகங்களுக்கு அந்தந்த விசேஷகர்மத்தினுல் ஏற்பட்ட வஸ்திரங்கள் வந்து அவ்வஸ்திரங்களால் வருகிற சுகதுக்கங்களுக்குச் சாதனபூதமாகிய தூலசரீரமுமொன்றாயிருக்கிறபடியால் அவ்வஸ்திரங்களை யபேட்சித்துத் ஸ்தூலசரீரமெப்படி சாமானியகர்மஜன்னியமாச்சுதோ அப்படியே சூட்சுமசரீரமு மொவ்வொரு பிராணிக்குமொவ்வொன்றாயிருக்கிறபடியினுல் அதுவும்சாமானிய கர்மஜன்னியமென்றே யறியவேண்டும்,

ச-சை- இதனுலென்னசித்தித்ததென்னில்,

உ-ம்- சூட்சுமசரீரத்திற்கே தூலசரீரத்தைத்தரிக்கிறதுங் கைவிடுகிறதுமென்றுசித்தித்தது.

ச-சை- அதெப்படியென்னில்,

உ-ம்- திருஷ்டாந்தத்தில் தூலசரீரங்களுக்கே வஸ்திரங்களைத்தரிக்கிறதுங்கைவிடுகிறதும் பிரத்தியட்சமாய்க்கண்டதுபோலச் சூட்சுமசரீரத்திற்கும் தூலசரீரங்களுடையபரிக்கிரகமும் தியாகமுமென்று அறியத்தக்கது, இதனுற்சூட்சுமசரீரத்திற்குத் தூலசரீரத்தைத்தரிக்கிறதே ஜெனனமென்றும் அத்துடன் கூடியிருக்கிறசம்பந்தமின்றி விட்டுவிடுகிறதே மரணமென்றும் பிரசித்தியாச்சுது ஆகலாற் சூட்சுமசரீரத்திற்கேயொழிய சாட்சிக்குச் சனனமரணங்களில்லையென்று தோற்றுகிறபடியால் ஆத்மாவுக்கும் ஜனனமரணாதிகளுக்கும் பிரசக்தியேயில்லை யென்றறியத்தக்கது,

ச-சை- இப்படிசொல்லுமிடத்தில் இந்தச்சூட்சும சரீரத்திற்குத் தூலசரீரமனேகமென்று தோற்றப்படுகின்றது, தோற்றினுற்றோற்றட்டுமென்றுசொல்லுவீரானால் பூர்வம்பிராணிகளுக்குத் தூலசரீரமனேகமென்றுசொல்லி இப்போது சூட்சுமசரீரத்திற்குத் தூலசரீரமனேகமென்றுசொன்னால் முன்சொன்னதற்கு மிப்போதுசொல்வதற்கும் விருத்தமல்லவா ஆகையாலிந்தச்சூட்சுமசரீரமே பிராணிசப்தத்திற்கர்த்தமென்று சொல்லலாமோ வென்னில்.

உ-ம்- அப்படிசொல்லக்கூடாது

ச-சை- ஏன்சொல்லக்கூடாதென்னில்.

உ-ம்- பூர்வம் பிராணிகளுக்குச் சூட்சுமசரீரமொன்றென்று சொல்லி இப்போது சூட்சுமசரீரமேபிராணி சப்தத்திற்கர்த்த மென்றெப்படி சொல்லலாம்,

ச-கை. ஆனால் இவ்விரண்டுவிரோதமுந்தோற்றுகின்றதேயென்னில்,

உ-ம்- விரோதம்வராமற்சொல்லுகிறோம் பிராணிசப்தத்திற்கு ஆத்மாவேயர்த்தம் அவ்வாத்மாவுக்கே, காரணசரீர மென்றுபேருண்டாகிய வஞ்ஞானத்தினால்வந்த சூட்சுமசரீரவத்தியாசத்துவாரா அனந்தமான தூலசரீரங்கள்வருகிறதும் போகின்றது மாகவும் அந்தத்தூல சரீரசுபாவமாகிய ஜனனமரணங்கள்பிரசித்தமானதுபோலவுந்தோற்றப்படுகின்றது,

ச-கை- அதெப்படிதோற்றப்படுகிறதென்னில்,

உ-ம். திருஷ்டாந்தத்தில் தூலசரீரத்தினால் வஸ்திரந்தரிக்கிறதும் விடுகிறதும்பிரத்தியட்சமாய்க் கண்டபோதிலும அந்தத் தூலசரீரவெதிருத்தமாகிய வாத்மா அந்தத் தூலசரீரத்தின்வழியேவஸ்திரக்கிரகணத்தியாகாதிக ளெப்படித்தோற்றுகிறதோ அப்படியே யஞ்ஞானத்தினால் வரப்பட்ட சூட்சுமசரீரத்தின்வழியே ஆத்மாவுக்கு அனந்தமான தூலசரீரங்கள் வருகின்றதுபோலும் போகின்றதுபோலும் மோகத்தினால்தோற்றப்படுகின்றது, விசாரிக்குமிடத்து ஆத்மாவுக்குப் பிரசித்தியில்லாமல் தூலசரீரத்துக்கேபிரத்தியட்சமாய்க் காணப்படுகிறபடியால் சூட்சுமசரீரத்திற்குந் தூலசரீரத்துடனேகூட அத்தியாசம்வினைவாய் ஜெனனமரணங்க ளில்லை, சூட்சுமசரீரத்திற்கே ஜெனனமரணமில்லாமற்போனபடியால் ஆத்மாவுக்கு மோகமாத்திரமில்லாமற் ஜெனனமரணங்க ளில்லையென்பதிற் சந்தேகமில்லை இந்தப்படி பிராணிகளுக்குத்தூலசரீரமனந்தமென்றதும் சூட்சுமசரீரமும் காரணசரீரமும் ஒன்றென்று சொன்னதும்யுக்தமே,

ச-கை, இதுவென்னசித்தித்ததென்னில்,

உ-ம்- சரீரத்திரயமும் பிராணிசப்தத்தினாற்சொல்லப்பட்டவாத்மாவல்லவென்பதுசித்தித்தது,

ச-கை, அதெப்படிசித்தித்ததென்னில்,

உ-ம்- உலகத்திலொருவன் மற்றொருவனைப்பார்த்து உனக்கு, "ருக்திராட்சக்ராம்ட வெத்தனையென்றால் மூன்றென்கிறான் பூணநூலெத்தனையென்றால் மூன்றென்கிறான் தோஷித்தியெத்தனையென்றால் அதுவுமூன்றென்கிறான் இப்படியே பிராணிகளுக்கெத்

யிசா

லே அந்தச்சாருவாக பாமராளுக்கு இந்தத்தூலசரீரமே யாத்மாவென்றுசொல்லுகிறது உசிதமல்ல,

ச-கை- அதுஎப்படியுசிதமல்லவென்னில்,

உ-ம்- சூட்சமசரீரத்தில் அத்தியாசத்தினால் சிதாபாஸனையாத்மா சூட்சுமசரீரத்துவாரா தூலசரீராத்தியாசத்தினால் வந்தபுத்திராதிபேட்சையினால் பிதாதிசப்தத்தால் சொல்லப்படுகிறான் இப்படிபிதாதிசப்தத்தினால் சொல்லப்பட்டவன் போக்தாவாகிறவாத்மா தூலசரீரத்துக்கன்னியனே அந்தப் பிதாதிசப்தத்தினா லிந்தத்தூலசரீரஞ் சொல்லப்பட்டதானால் அந்தப்பிதாதிகள் செத்தபிறகும் அந்தப்பிதாதி சப்தார்த்தமாய்ச்சாருவாகபாமராளுக்குத் தூலசரீரமாத்மாவென் றங்கீகரிக்கப்பட்டால் தூலசரீரமிருக்கவேண்டும் அவர்கள்செத்துப்போனார்களென்று சொல்லாதிருக்கவேண்டும் அங்ஙனமின்மையால் இந்தத்தூலசரீரவெதிரிக்தனேயாத்மாவென்று சாருவாகபாமராளுக்கு மங்கீகரிக்கவேண்டும், இதுவல்லாமற் பின்னும்யுக்தியாந்தரத்தினாலும் தூலசரீரவெதிரிக்தனேயாத்மாவென்று தோற்றப்படுகின்றது,

ச-கை- அதெப்படியென்னில்,

உ-ம்- பிதாதிசப்தங்களுக் கர்த்தம்போல்தோற்றப் பட்டதூலசரீரஞ் செத்துக்கிடக்கும்போது அதைத்தழுவி யோலமிட்டழுகிறபுத்திராதிகள் அப்பாஎங்களை அவாந்தரத்தில் விட்டுவிட்டு கடன்கொடுத்துவிட்டும் வாங்கினவிட்டுஞ் சொல்லாமல் எங்கள்வாயில்மண் போட்டுவிட்டுப்போகலாமா, ஆதெய்வமேயென்று கத்துகிறார்கள் அல்லாமலும் பந்துஜனங்கள் சினேகர்கள் அறிந்தவர்கள்வந்துஐயோ இப்படியே யுன்தாயார்முதலானபேர்களெல்லா மிறந்து போனார்களல்லவா உங்கள்சவரட்சணைக்கு ஒருவருமில்லாமற் போய்விட்டார்களேயென்று துக்கம்விசாரித்தால் அவர்களைக்கண்டு கட்டிக்கொண்டழுது வாயிலடித்துக்கொண்டு இப்படியேயெங்களை யனாதியாகவிட்டுவிட்டு எல்லோரும்போய்விட்டார்களினியெங்களெப்படி யிருக்கப்போகிறோமென்று பூமியில்விழுந்தழுகிறார்கள், பின்னுமொருவன்வந்து அவன்மனைவியை அம்மா உன்புருஷனிறந்துபோய்விட்டாராவென்று துக்கம் விசாரித்தால், ஆ தெய்வமே கெட்டேனென்று தலையில்மோதிக்கொண்டு தரையில்விழுந்தழுகிறார்கள், பின்னும் ஒருவன்வந்து தகப்பனை ஐயா உன்பிள்ளைபோய்விட்டானாவென்று துக்கம் விசாரித்தால் ஐயா என்வாயில்மண்ணைப்போட்டு இறந்துபோய்விட்டான் அடாமகனே என்னையும் உன்கூட அழைத்துக்கொண்டுபோடா நீ பிறந்தநாள்முதற்றுக்கமே யனுபவித்தேன்

உன்னுடன் ஏழுபின்ளைகளைக்கொண்டேன் இன்னமுந்தெய்வமெனக்க ளைபேசாதிருக்கின்றது நான் இந்தத்துக்கத்தைச் சகிக்கமாட்டேன் நானும் என்வீட்டிலுள்ளவர்களுமாய் விசனத்தைத்தின்று எல்லாரு மொருமுகூர்த்தத்திலிறந்துபோகிறோமென்றழுகிறான்,

ஒருவித்துவானை யுன்பெண்சாதியிறந்துபோனாளென்று ஒருவன் துக்கம் விசாரித்தால் அப்போது அவன் தானிருக்கின்ற பலகல்வி சாமர்த்திய யுக்திகளையெல்லாமறந்து துக்காக்கிராந்தனாய் ஐயோ என்பிராணனானவள் என்வாயில் மண்ணைப்போட்டுவிட்டுப் போனாள் அவள் ஸ்ரீ தேவியைப்பழித்த அழகும பூதேவியைப்பழித்த பொறுமையும் அருந்ததியைப் பழித்தகற்புமுடையவள் அவளைப்பிரிந்து நானெப்படி யிருப்பேன் ஆ என்பிராணநாயகியே ஒருவார்த்தை சொல்லடி. எனக்குத்திக்காரடி நானுன்கூடவருகிறேன் என்னையுமழைத்துக்கொண்டுபோடி. எனக்குக்கஞ்சி யன்னம்வார்த்து இனியுன்னைப்போலுபசரிக்கிறவளாரடி. தேவபூசை அப்பியாசனம்பண்ணவும் பந்துக்கள் வந்தால் உபசாரங்கள் பண்ணவும் உரித்தானவர்க ளொருவரில்லையே ஆயிரம்பேர்வந்தாலும் நீ யாவார்களாவென் றிப்படிபலபலவிதமாகப் பிரலாபித்தழுகிறான்.

ச-ஙை. இப்படியழுகிறவித்துவானுலென்ன தோற்றுகிறதென்னில்,

உ-ம். ஊரிலிருந்து வந்தவன் மாமன் முதலானவர்க ளூருக்குப்போய் விட்டார்களாவென்று ஒருவனைக்கேட்டால் அவர்களெல்லாருடன் சொல்லாமற் கட்டியிருந்த தோவித்தி புடவைகளையும் விட்டுவிட்டுச் சென்னையாய்ப் போய்விட்டார்களென்று சொல்வதுபோலிருக்கின்றது இந்தத்திருஷ்டாந்தத்தில் மாமன்முதலியோர்கள் கட்டியிருந்த தோவித்தி புடவைகளுடன் தோற்றப்பட்டாலும் அதுகளை விட்டுப்போனவர்களே மாமன்முதலானவர்கள் சப்தத்திற்கர்த்தமானதுபோல் இந்தத்தூலசரீரத்தை விட்டுவிட்டுக் கர்மானுசாரத்தினால் லோகாந்தரத்திற்குப் போனவர்களே பிதாமாதிசப்தத்திற்கர்த்தமென்றும் தூலசரீரம் பிதாமாதிசப்தத்திற் கர்த்தமல்லவென்றுந்தோற்றப்படுகின்றது ஆகையால் இந்தத் தூலசரீரத்திலிருந்து வெளிப்பட்டுப்போனவர்களேபிதாமாதி சப்தத்துக்கர்த்தமே யன்றி வெளிப்படாமுன்னுமிருந்த சரீரம் பிதாமாதிசப்தத்துக் கர்த்தமென்றுஞ்சொல்லக்கூடாது,

ச-ஙை. அப்படிசொல்லலாமேயென்னில்,

உ-ம். ஆனால்தோவித்திபுடவைகளை விட்டுப்போனமாமன்முதலியோர்கள் அதுகளைவிட்டுப் போகாமுன்னுந்தோவித்திபுடவைகளோமா

மன்முதலியோர்களாகவேண்டும். பின்னும் ஒருவீட்டிலிருந்து வெளிப்புட்டுப்போனபுருஷன் அந்தக்கிரகத்திலிருந்து வெளிப்படாமுன்னும் அந்தக்கிரகமேயாகவேண்டும் அப்படிசொல்லக்கூடாமையினால் தோவித்திபுடவைகளுடன் கூடிக்கொண்டிருந்த மாமன்முதலியோர் கூடியபோதும் விட்டபோதும் அந்தத்தோவித்திபுடவைகளெப்படியவர்களல்லவோ, கிரகத்திலிருந்து வெளிப்பட்டபுருஷன் கிரகத்திலிருந்தபோதும் நீங்கினபோதும் அவன் அந்தக்கிரகசப்த மெப்படியல்லவோ அப்படியே பிதுராதிசப்தங்களுக் கர்த்தமாகிய பிதுராதிகள்தூல சரீரத்திருந்தபோதும் விட்டுப்போனபோதும் அந்தப்பிதுராதி சப்தத்திற்குத் தூலசரீரத்தைவிட்டுப்போனவர்களேயர்த்தமாகுமென்றித் தூலசரீரமர்த்தமல்ல, பின்னும் அந்தப்பிதுராதிகளிடமாகுமென்ன, அதன்மரணத்திற்குமுன் பிதுராதிசப்தத்திற்கர்த்தமென்றெண்ணியிருந்த இந்தச்சரீரத்தைக் குறித்து ஒருவர்உதாசினந்து சொன்னபோதிலும் அந்தச்சரீரத்திற்பிரமாணவதை செய்தபோதிலும் அனேக நரகமுண்டாகுமென்றும் சாஸ்திரங்களிற்சொல்லக்கேட்டும் மரணமானபிறகு சரீரத்தைக்கொளுத்தி விடுகின்றுர்கள்,

அந்தப்பிதுராதிசப்தத்துக்கிந்தத் தூலசரீரமேயர்த்தமானால் இதைக்கொளுத்திய புத்திராதிகளுக்கும் பிதுராதிகளுக்கும் பிதுர்ஹத்தியாதி தோஷம்வரவேண்டும் அங்ஙனம் வந்தால் அப்புத்திராதிகளுக்கனந்தகோடி நரகம்வரவேண்டும் அன்றியும் உலகத்திலவர்களை மாதுர்பிதுர்ஹத்தியுடையவர்களென்று எல்லாருந்தூஷிக்கவேண்டும் அப்படியில்லாமையினாலும் பிதுராதிசரீரங்களைக் கொளுத்தினவர்களுக்கு நரகமென்று சாஸ்திரஞ்சொல்லாமையினாலும் தூலசரீரம் பிதுராதிசப்தங்களுக்கர்த்தமல்ல, மேலும் அந்தச்சரீரத்தைப்பிதுராதிசப்தத்துக் கர்த்தமாகவெண்ணிக் கொண்டு புஷ்பஜலமஸ்காரஉபசாரங்கள் செய்துவந்தார்களோ அந்தச்சம்பந்தமான சரீரத்தைதமறுந்து தித்தெரித்துப்போடாவிட்டால் புத்திராதிகளுக்குப் பிரத்தியவாயதோஷமுண்டென்று சாஸ்திரங்களிற் சொல்லுகின்றது.

புத்திராதிகள் அந்தத்தேகத்திற்குத் தகனாதிக்கிரியைகள் பண்ணினார்களானால் அதிலிருந்து வெளிப்பட்டுலோகாந்தரம்போன பிதுராதிகளுக்குப் பிரேதத்வவிமோசன ரூபமான வதிகசயமும் நற்கதியுமுண்டு அதைநடத்தகளுதி செய்தபுத்திராதிகளுக்கும் பிரத்தியவாயதோஷமில்லையென்று சாஸ்திரங்கள் முறையிடுகின்றது,

சங்கை. அதெப்படியென்னில்,

உ-ம்- பாளயத்திலிருந்த ராஜன்வெளிப்பட்டுப்போனால் அவனுக்குநல்லபாளயம் வரவேண்டுமென்றும மிருந்தசெல்வம் வரவேண்டுமென்றுங்கோருவார்கள் அப்படிக்கோராதவர்களை அவ்வரசனுக்குப்பாளயம் வந்தவுடனெப்படிசிக்ஷை பண்ணுவானோ அப்படியே செத்துக்கிடக்கிறபிதுர்க்கள் சரீரங்களைப் புத்திராதிகள் நமஸ்காரத்தன்செய்தால் அப்பிதுராதிகளுந் திருப்தியும் நற்கதியுமடைந்தி அப்படிசெய்யாவிட்டால் புத்திராதிகளுக்குப் பித்திலாயகோதைமுண்டு இன்னமும உலகத்தில் செத்துக்கிடக்கும் பிதுராதி சரீரங்களைச்சம்ஸ்காரஞ்செய்ததிகள் பண்ணின புத்திராதிகளைப்பார்த்து அப்பா, நீநல்ல கதி யுண்டுபண்ணினாயென்று கொண்டாடுகிறார்கள் அப்படிசெய்யாதவர்களைத் தூஷிக்கிறார்கள் இதனாலும பிதுராதிசப்தத்திற்குத்தூலசரீரத்திலிருந்து வெளிப்பட்டு லோகாந்தரம்போனவர்களையர்த்தமெனத்தோற்றுகிறது,

ச- கை- யுத்தியினுலிந்தப் பிதுராதிசப்தங்களுக்குத் தூலசரீரமர்த்தமல்லாமற்போனாலும் தூலசரீரத்தையே பிதுராதிகளென்றெண்ணி ஏன் பணிவிடைபண்ணுகிறார்களென்னில்,

உ-ம்- இந்தத்தூலசரீரத்திலுள்ளிருக்கிறவர்களுக்குப் பிரிதியாகப்பணிவிடைபண்ணுகிறார்களன்றித் தூலசரீரப்பிரீதி யிமித்தம்பணிவிடைபண்ணவில்லை,

ச-கை- அதெதப்படியென்னில்,

உ-ம் - ஒருபட்டணத்தில் ராஜனிருக்கும்போது அரசனைப்பிரியமிமித்தம் அவ்வரண்மனைமேற்கட்டி முதலியலங்காரங்களெப்படிசெய்கிறார்களோ அவ்வரமனைமுதலானதின் பிரியமிமித்தமெப்படிசெய்யவில்லையோ அப்படியே தூலசரீரத் திருக்கிறவர்கள் பிரியமிமித்தமல்லது தூலசரீரப்பிரியமிமித்தந் தெருமைபண்ணவில்லை, மோகத்தினால் தூலசரீரம் பிதுராதிசப்தத்துக்கர்த்தம் போற்கானப்பட்டாலும் தூலசரீரத்திலிருக்கிறவனே பிதுராதிசப்தத்துக்கர்த்தம,

உலகத்தில் கிராமாந்தரம்போன பிதாமுதலியோர்களின் வஸ்திரத்தைத் திருடன்பறித்துக்கொண்டு போனானென்று கேள்விப்பட்டபுத்திராதிகள் மறுவஸ்திர மனுப்புனதுபோலே இறந்து லோகாந்தரம போன பிதுராதிகள் அம்மனத்துடன் போனார்களென்று சாஸ்திரஞ்சொல்லக்கேட்டு அவர்களைக்குறித்து இவ்விடத்தில் பிராமணர்களுக்கு வஸ்திரங்கொடுத்தால் அவர்களுக்குப் போய்ச்சேருமென்று புத்தி

ராதிகள் இப்போதும் பிராமணர்களுக்குவஸ்திரங் கொடுத்துவருகிறார்கள் இதனாலும் இத்தத்தூலசரீரம் பிதுராதிசப்தத்துக் கர்த்தமல்லவென்றுதோற்றுகின்றது,

மேலும் கழனியில்வேலைசெய்கிறவன் வெய்யிலடி பட்டுத்தாபத்தினால் வாதைப்படுகிறானென்றுகேட்டுக் கிரகத்திலிருக்கின்றவர்களன்னந் தண்ணீரனுப்புவதுபோலச் செத்துலோகாந்தரம்போன பிதுராதிகளுக்குப் பசிதாகநிமித்தம் பிண்டதிலோதகங் கொடுக்கவேண்டுமென்று சாஸ்திரஞ்சொல்லக்கேட்டுப் புத்திராதிகள் அவர்களைக்குறித்துப் பிண்டதிலோதகங் கொடுக்கிறார்கள், பின்னுந் தேசாந்தரம் போகவேண்டுமென்று பரஸ்தானம் பண்ணியிருக்கிறவர்களுக்குக்கட்டுச்சாதங் கொடுத்தனுப்புவதுபோற்செத்துலோகாந்தரம் போன பிதுராதிகளுக்கு இவ்விடத்தில் சொர்க்கபாத்தியங் கொடுத்தாலவர்களுக்குத்திருப்தியாகுமென்று சாஸ்திரங்களிற் சொல்லுகிறபடி சொர்க்கபாத்தியங்கொடுக்கிறார்கள், மேலும் அடுத்தவூருக்குப்போகவேண்டிச் செலவுபெற்றுக்கொண்டு போனவர்கள் ஆறுதாண்டிப்போகவசமின்றி யாற்றங்கரையி லிருப்பதாய்க்கேள்விப்பட்டு வீட்டிலிருக்கிறவர்கள் அட்டமரக்கெப்பல் கட்டிக்கொடுத்து அனுப்புவதுபோலச் செத்துலோகாந்தரம்போன பிதுராதிகளுக்குச் சொர்க்கப்பிராப்தியைக்குறித்து விதாதமான வைதரணிநதியிருக்கிறதென்றுசாஸ்திரஞ் சொல்லக்கேட்டு அதையவர்கள் தாண்டிப்போகிறநிமித்தம் இவ்விடத்தில் புத்திராதிகள் வைதரணிகோதானங் கொடுக்கிறார்கள்.

மேலும் இறந்துபோன பிதுராதிகளைக்குறித்து அவர்களிறந்தநாள்முதல் வருஷாப்திகவரைக்கு மாதமாதம்மாசிகமும் புத்திராளிருக்கிறபரியந்தம் வருஷாந்தர திவசமும்மத்தியமத்தியத்தில் அட்டகாதிசிரார்த்தங்களும் புண்ணியக்ஷேத்திரங்களிற்சிரார்த்தங்களுஞ்செய்கிறார்கள் இப்போதுசொல்லிவந்த தூலசரீரங்கள் பிதுராதிசப்தத்துக்கர்த்தமல்ல இதுகளிலிருந்து வெளிப்பட்டு லோகாந்தரம் போனவர்களே பிதுராதிசப்தத்துக்கர்த்தமென்று சந்தேகமின்றியறியத்தக்கது,

ச-ங- இந்தயுக்திகளினால் தூலசரீரம் பிதுராதிசப்தத்துக் கர்த்தமாகாமற்போனாற் போகட்டும் இதனாற்சூட்சம சரீரசித்தியுண்டாகிறதெப்படியென்னில்,

உ-ம்- தூலசரீரத்தைவிட்டுப்போட்டு லோகாந்தரம்போகிறதோ அதுதான் சூட்சுமசரீரமென்றுமனதிற்கருதத்தக்கது,

கேஷித்திருக்கிறபடியினாலும் நிரைஷ்டிவென்பதே நித்தியனாய் வியாபகனாய் சைதன்னிய சொரூபனாகிய வாத்மாவுக்கு இப்படி சொன்னதர்மங்களொன்றுமில்லையென்று தோற்றுகின்றது இப்படிசொச்சொரூபமாகிய வாத்மாவுக்குமோகத்தினால் வந்தஜீவத்வமும் லோகாந்தரகமனாகமனங்களும் பிராணாதி சப்தவாச்சியத்வமுமெதினிடத்தி லத்தியாசத்துவாராவந்ததோ அதுவேஸ்தூலசரீரவெதிருக்கமான சூட்சுமசரீர மென்றறியப்பட்டது மேலும்யுக்தியினாலும்தூலசரீரத்திற்குச் சூட்சுமசரீரம்அன்னியமென்றேதோற்றுகின்றது.

ச-கை- அந்தயுக்தியாவதேதென்னில்,

உ-ம்- விசித்திராதிகளான காணாதிகவியாபாரங்களெதினாற்செய்யப்படுகின்றதோ அதுவேசூட்சுமசரீர மென்று யூகித்தறியவேண்டியது

ச-கை- இவ்வியாபாரங்கள் தூலசரீரத்தினாற் செய்யப்படுகிறதென்று சொல்லலாமேயென்னில்.

உ-ம்- அப்படியானால்பிரேத சரீரத்தினாலுஞ்செய்யவேண்டும் அங்ஙனமின்மையால தூலத்துக்கன்னியமான சூட்சுமசரீரத்தினாலேயே செய்யப்படுகின்றது,

ச-கை- அப்படியேன்சொல்லவேண்டும் ஆத்மாவே சகலகாரியங்களுஞ்செய்கிறதென்று சொல்லுவோமேயென்னில்

உ-ம்- ஆத்மா வியாபகனாயிருக்கிறபடியால் அதுகூடாது, ஆகாசாதிகளிடத்திலிருக்கப்பட்ட ஆத்மாவுங் கர்மங்கள்செய்ய வேண்டும் அப்படி செய்யாதபடியினால் அங்ஙனஞ்சொல்லப்படாது,

ச-கை- ஆகாசாதிக ளிடத்திலிருக்கிறவாத்மா கர்மங்கள்செய்யாமற் போனாற்போகட்டும் தூலசரீரத்துடன் கூடியிருக்கிறவாத்மா கர்மங்கள் செய்கிறானென்றுசொல்லுவோமேயென்னில்,

உ-ம்- பிரேதசரீரத்துடன் கூடியிருக்கிறவாத்மாவும் கர்மம்பண்ணவேண்டும் அங்ஙனமின்மையால் அப்படிசொல்லக்கூடாது,

ச-கை- ஆத்மாவுடன்கூடியிருக்கிற தூலசரீரங்கர்மம்பண்ணுகிற தென்றுசொல்லுவோமேயென்னில்.

உ-ம்- வியாபகனான வாத்மாவுடன் கூடியிருக்கிறபிரேத சரீரத்தினாலுங்கர்மம் பண்ணவேண்டும் அப்படி இல்லாமையா லதுவுங்கூடாது, இந்தப்பிரகாரத்திற்கேவலந் தூலசரீரமுங்கர்மம்பண்ணுகிறது

என்கண் என்சுரோத்திரம் என்வாக்கு என்பிராணன் என் அந்தக்கரணம் என்புத்தியென்கிறவனுபவத்தினால் தூலசரீரத்துக்கன்னியமா யொருசூட்சுமசரீரமுந் தோற்றப்படுகின்றது இப்படிகாரியமானஸ்தூலசூட்சுமசரீரத்தினால் இவைகளுக்குக்காரணமாய் ஆத்மாவுக்குச்சீவத்துவத்தினாலும் ஈசுவரத்வத்தினாலும் ஜெகத்காரணத்தினாலு முபாதியானவவயவங்களினால அனிர்வசன்னியமென்றும் சுருதியாதிகளினாற் பிரகிருதியென்றும்மாயையென்றும் அவித்தையென்றும் சொல்லப்படுகிறகாரணசரீரமொன்றுண்டென்றுசொல்லப்படுகின்றதாமேனும்,

நான் அஞ்ஞானி நான்சடன் ஒன்றுமறியேனென்கிற வனுபவத்தினாலுங்காரணசரீரமொன்றுண்டென்றுந் தோற்றப்படுகின்றது இந்தப்பிரகாரத்தில் சமஸ்தபிராணிகளுக்கு மூன்றுசரீரமுண்டென்றுநிச்சயிக்கப்படுகின்றது இப்படியேயாத்மாவும் இம்மூன்றுசரீரத்தையுமறிந்தவனாகியும் இம்மூன்றுடன் கூடியிருந்தபோதிலும் ஆகாசத்தைப்போலவொன்றிலுங்கூடாமலும் காலத்திரயத்திலுமிருக்கிறபடியால் சத்ரூபனாகவும் சமஷ்டிவியஷ்டிரூபமாகிய சரீரத்திரய வாத்மவானான பிரபஞ்சஸ்வபாவ பதார்த்தங்களுக்குள் ஒருபதார்த்தத்தினாலும் தன்னையறியப்படாமல் சமஸ்த பதார்த்தங்களையுந் தானேயறியப்படுகிறபடியினால் சித்ரூபனாகவும் பரமப்பிரியம் ஆஸ்பதனானபடியினால் ஆனந்தரூபனாகவுந் தோற்றுகின்றது இப்படிப்பட்ட ஆத்மசொரூபமேநானென்று முமுட்சுக்களாலறியத்தக்கது,

சங்கை- காரியமானசரீரத்திரயமுங் காரணமானபிரகிருதியாதியும் பிரத்தியட்சமாய்த் தோற்றிக்கொண்டிருக்கச் சுருதியாதிகளாற்சொல்லப்பட்ட அத்விதியத்வமும் பரிபூரணத்வமும் ஆத்மாவுக்கெப்படி கூடுமென்னில்,

உ-ம்- சமஷ்டி வியஷ்டி யாத்மகமாகிய சரீரத்திரயமென்கிற பிரபஞ்சம் அவ்வாத்மாவினிடத்தி லாரோபிதமாயிருக்கிறபடியால் ரச்சுவினிடத்திலாரோபிக்கப்பட்ட சர்ப்பாதிகளுக்கு ரச்சுமாத்திரமேயெப்படி சுவரூபமோ அப்படிபோலவே ஆத்மாவினிடத்தி லாரோபிக்கப்பட்ட பிரபஞ்சத்திற்கு வாத்மாவேசொரூபமன்றி வஸ்துவானதின் வேறில்லை ஆதலாலாத்மாவினுடைய சத்தைப்போல வேறிருத்தமான சத்துபதார்த்தமிருந்து பிரதியத்தியமில்லாதபடியினால் ஆத்மா அத்விதியனென்பதில் சந்தேகமில்லை எப்போது ஆத்மாவுக்கு அத்விதியத்வந் தித்தித்ததோ அப்போதே பரிபூரணத்வமுந் தித்திக்கது,



பதினேழாவது,

# தாபத்திரயநிருபகம்.

———(*)(*)(*)———

ச-கை- தாபத்திரயசொரூபத்தை விசாரிக்கவேண்டுமென்று சுருதியாதிகள்சொல்லுகின்றபடியினால் தாபத்திரயமாவதேதென்னில்,

உ-ம்- ஆதியாத்மீகம் ஆதிபௌதீகம் ஆதிதெய்வீகமென மூன்றுவிதம்

ச-கை- ஆதியாத்மீகமாவதேதென்னில்,

உ-ம்- சரீரத்தை யதிஷ்டித்துக்கொண்டுவரப்பட்ட க்ஷயரோகம் சீதகாம் தாபசுரம் குன்மம் தலைநோய் அதிசாரம் வெப்பம் சூலை முதலானவியாதிகளும் மக்கள் மிருகங்கள் பேய்கள் திருடர்கள் இராக்ஷதர்கள் முதலானவர்களாலுண்டாகின்ற துக்கங்களும் ஆதியாத்மீகமென்றுசொல் ப்படும்,

ச-கை- ஆதிபௌதிகமாவதேதென்னில்,

உ-ம்- ஜலம் வெய்யில் மழை காற்று இடி மின்னல் பனி கோவில் கோபுரங்கள் பிரகாரங்கள் மண்டபங்கள் சுவர்கள் இதுமுதலியவை சேதனங்களாலுண்டாகப்பட்ட துக்கங்கள் ஆதிபௌதிகமென்று சொல்லப்படும்;

ச-கை ஆதிதெய்வீகமாவதேதென்னில்,

உ-ம்- கருப்பந்தரித்தல் உண்டாதல் வளர்தல் நரை திரை அஞ்ஞானம் துர்மரணம் நாசம் ஜெனனமுதலிய துக்கங்களே ஆதிதெய்வீகமென்று சொல்லப்படும் இந்தத்தாபத்திரயதுக்கஞ் சரீரத்திரயத்துக்கேயன்றிச்சாட்சியாகிய வாத்மாவுக்கில்லை இந்தப்படி தாபத்திரயங்களுடையசொரூபத்தை அருளேதிருமேனியாகிய ஆசாரியர் முன்னிலையில் விசாரித்தறிந்து இந்தத்தாபத்திரயங்கள் தேகேந்திரியாதிகளுக்கல்லாமல் சாட்சியாகியவெனக்கில்லையென்று சந்தேகவிபரீதமற வெவனறிகிறானோவவனே சீவன்முத்தனென்று சுருதிஸ்மிருதியிதிகாச புராணாகமங்களிற் சொல்லப்படுகின்றது,

ச-கை- ஆனால் சுருதியாதிகளில்தாபத்திரய காரணத்தையும் விசாரித்தறியவேண்டு மென்று சொல்லுகிறபடியால் தாபத்திரய காரணமாவதேதென்னில்.

உ-ம்- ஆனாலதுவும் சொல்லுகிறோம் சரீரத்திரயம் ஆதியாத்மீகம் சத்

தம் ஆதிபூதம் ஆகாசம் ஆதிதெய்வீகம், தொக்கு ஆதியாத்மீகம் பரிசம் ஆதிபூதம் வாயு ஆதிதெய்வீகம், சட்சு ஆதியாத்மீகம் ரூபம் ஆதிபூதம் ஆதித்தன் ஆதிதெய்வீகம் நாக்கு ஆதியாத்மீகம் ரசம் ஆதிபூதம் வருணன் ஆதிதெய்வீகம் ஆக்கிராணம் ஆதியாத்மீகம் கந்தம் ஆதிபூதம் அசுவனி ஆதிதெய்வீகம் வாக்கு ஆதியாத்மீகம் வசனம் ஆதிபூதம் அக்கினி ஆதிதெய்வீகம் பாணி ஆதியாத்மீகம் தானம் ஆதிபூதம் இந்திரன் ஆதிதெய்வீகம், பாதம் ஆதியாத்மீகம் கமனம் ஆதிபூதம் உபேந்திரன் ஆதிதெய்வீகம்; பாயுரு ஆதியாத்மீகம் விசர்க்கம் ஆதிபூதம் பிரசாபதி ஆதிதெய்வீகம், மனம் ஆதியாத்மீகம் சங்கற்பம் ஆதிபூதம் சந்திரன் ஆதிதெய்வீகம், புத்தி ஆதியாத்மீகம் நிச்சயம் ஆதிபூதம் சதுர்முகன் ஆதிதெய்வீகம் அகங்காரம் ஆதியாத்மீகம் அபிமானம் ஆதிபூதம் உருத்திரன் ஆதிதெய்வீகம் சித்தம் ஆதியாத்மீகம் தாரணை ஆதிபூதம் க்ஷேத்திரக்ஞன் ஆதிதெய்வீகம், தமசு ஆதியாத்மீகம் விகாரம் ஆதிபூதம் ஈஸ்வரன் ஆதிதெய்வீகம் இதுகளெல்லாங்கூடிச்சாக்கிரசொப்பனசுழுத்தியாகிய அவஸ்தாத்திரயங்களாயிற்று, இந்த அவஸ்தாத்திரயங்களுக்குச் சாட்சியாய் நித்தியனாய் நிர்விகாரனாய் ஆனந்தசுவரூபனாகிய வாத்மாவேதானென்று ஸ்ரீசற்குருமுன்னிலையில் விசாரித்து எவனறிகிறானோ அவனேகிருதார்த்தனென்று சுருதிஸ்மிருதியிதிகாசபுராணங்களிற் சொல்லப்படுகின்றது இதிற்சம்சயமில்லைசித்தம்.

தாபத்திரயநிரூபகம் - முற்றிற்று,

பதினெட்டாவது

# பிரதிபந்தத்திரயநிரூபகம்.

ச-ஙை சுருதியாதிகளிற் பிரதிபந்தத்திரயமும் அதனிவர்த்தியும் விசாரித்தறியவேண்டுமென்று சொல்லுகிறபடியினால் பிரதிபந்தத்திரயமாவதேதென்னில்,

உ-ட- பூதப்பிரதிபந்தம் வர்த்தமானப்பிரதிபந்தம் ஆகாமியப்பிரதிபந்தமெனமூன்றுவிதமாயிருக்கும்.

ச-ஙை- ஆனால் பூதப்பிரதிபந்தமாவதேதென்னில்,

உ-ம- பெரியகுடும்பியாகிய வொருபிராமணன் சீவனார்த்தமாய் ஒருஎருமையைச் சம்பாதித்து அவ்வெருமையினுடையபால் தயிர் நெய் முதலானதுகளை விற்பனைசெய்து அதனால் அவன்புத்திரபாரியாதி

களையிரட்சித்துக்கொண்டு அவ்வெருமைக்கும் வைக்கோல் கழி
முதலானதுகளைக்கொடுத்து வருகிறவுபசாரங்களிற் குறைவில்லா
மல் நடத்திக்கொண்டு வெகுநாள் தேகநிஷ்டனாய் சேவைபண்ணி
க்கொண்டிருந்தான் இப்படியிருக்குங்காலத்தில் கர்மவசத்தினால்
அவன் புத்திரபாரியாதிகளும் எருமையும் இறந்துபோய் அந்தப்பிரா
மணனொருவனுமே மிஞ்சாமல் தனித்திருந்து துக்காக்கிராந்தனாய்
விசனப்பட்டுநாளே இந்தக் குடும்பசத்தியமென்றிருந்தோமே
சொப்பனம்போல் அசத்தியமாய்விட்டதேயென்று பச்சாத்தாப
மடைந்து நாம் இனிமேல் சம்சாரத்திலிருக்கப்போகாதென்கிற விரக்
தியுடன் சந்நியாசியாய் ஓர் ஆசிரியரிடத்திற்போய்ச்சேர்ந்து வேதாந்
தசாஸ்திரசிரவணாதிகளைச் செய்தான்.

அவ்வாசிரியரும் இவனுக்குச்சொல்லவேண்டிய சாஸ்திரார்த்தங்க
ளையெல்லாமுபதேசித்து அந்தச்சீடனை மாறாமல் ஒருலட்சியத்தைத்தி
யித்திருக்கும்படி வைத்திருந்தார் அவனும் அந்தலட்சியத்தையிடை
விடாமலனுஷ்டித்துக்கொண்டேயிருந்தான்,

அங்ஙனமிருக்கையிலொருநாள் அவ்வாசிரியர் அந்தச்சீடனையழைத்து அ
ப்பாநீ இத்தனைகாலமாயிந்தவிதப்பழகிவருகிறாயே உன்னுடையசித்
தம், நிர்மலமாகக்கொண்டு திருத்தியாயிருக்கின்றதா சுவானுப
வத்தில் இன்னமசங்கதிய முண்டாயிருப்பதாய்த் தோற்றப்படுகிற
தாவென்று வினவ அந்தச்சீடன் அவ்வாசிரியருக்குநமஸ்காராதிகள்செ
ய்து சுவாமி எனக்கொன்றுந் தோற்றப்படவில்லை பூர்வாசிரமத்
தி லெனக்கொரு எருமையுண்டு அவ்வெருமை அப்போதே யிறந்துவி
ட்டது அவ்வெருமைமாத்திரந்தான் சர்வதா முன்னிட்டுக்காட்சாத்
காரமாய் நிற்கின்றதேயன்றி வேறொன்றுங் காணோமென்று தன்னு
டைய விசனத்தைமறைக்காமல் யதார்த்தமாகச்சொன்னான் அ
துகேட்டவாசிரியர் இது பிரத்தியக்ஷமென்று மவுனமாயிருந்தார்,
ச-கை- அநேகப்பிரதியக்ஷத்திற்கு நிவிர்த்தியெப்படியெனில்

உ-ரம்- பிற்பாடு அவ்வாசிரியர் அந்தப்பிரதிபந்த நிவிர்த்தியாகும்பொ
ருட்டு அவ்வெருமையினிடத்திருக்கப்பட்ட பிரியவாஞ்சையைய
னுசரித்து அந்தச்சீடனுக்குத் தத்துவ வுபதேசஞ்செய்து அம்மோ
கத்தைத்தொலைத்து கிருதகிருத்தியனாகச் செய்தருளினார்;

ச-கை- அதெப்படியென்னில்,

உ-ரம்- அந்தக்காட்சாத்காரமான வெருமையே அஸ்திபாதிப்பிரிய நாம
ரூபமிய வைந்தவயவங்களுடன் கூடியிருக்கிறதென்றும் அவற்றுள்

நாமரூபமிரண்டையுந்தள்ளி அஸ்திபாதிப் பிரியமாத்திரமே உனது சொரூபமென்று சிந்தித்திருவென்றும் கிருபையினாலே அனுக்கிரகஞ் செய்தருளினார் அதுமுதல் அவனுமப்படியே யிடைவிடாமற்சிந்தித்துச்சிலநாளில் நாமரூபமாகிய அந்தப்பூதப்பிரதிபந்தநீங்கிச் சச்சிதானந்த ஸ்வரூபமாகிய ஆத்மாவே நானென்று சாட்சாத்கார அனுபவம்பெற்றுக்கிருதார்த்தனாகினானென்றுஇந்தக்கதையுலகத்தில் வழங்கிவருகின்றது அல்லாமலும் வித்தியாரண்யசுவாமிகளும் பஞ்சதசப்பிரகரணத்தில் நிரூபித்திருக்கின்றபடியினாலும் இதுவேபூதப்பிரதிபந்த விவகாரமும் அதனிவிர்த்தியுமென்றறியத்தக்கது,

ச-கை- ஆனால்வர்த்தமானப்பிரதிபந்தமாவதேதென்னில்.

உ-ம்- விஷயாசத்திபிரக்ஞாமாந்தம் குதர்க்கம்விபரீததுராக்கிரகமென்று நான்குவிதமாயிருக்கும்.

ச-கை- விஷயாசத்தி லட்சணமேதென்னில்,

உ-ம்- சமஸ்தவிஷயங்களிலும் ரூடமான ஆசத்தியுண்டாயிருக்கிறது,

ச-கை- பிரக்ஞாமாந்தமாவதென்னில்,

உ-ம்- ஒருவர்சொன்ன அர்த்தப்புத்தியிற் பதியாமலிருக்கிறது,

ச-கை- குதர்க்கமாவதேதென்னில்,

உ-ம்- ஆசிரியர்சொன்ன அர்த்தத்திற்கு விபரீதஅர்த்தஞ்சொல்வது

ச-கை- விபரீததுராக்கிரகமாவதேதென்னில்,

உ-ம்- நான்பண்டிதன் நான்வித்வான் நான்விரத்தன் நான்சந்நியாசி நான்சடையுடையவன் நான்காஷாயந்தரித்தவன் நான்தபசியென்று தேகேந்திரியாதிகளிடத்தில் ஆத்மபுத்தி பண்ணுகிறது இதுவேவர்த்தமானப்பிரதிபந்தமென்று சொல்லப்படும்.

ச-கை- இதுகளுக்கு நிவிர்த்தியெப்படியென்னில்,

உ-ம்- சமதமாதியுபரதிதிதிட்சைகளினால் விஷயாசத்தியும் சிரவணத்தினாலே பிரக்ஞாமாந்தமும் மனனத்தினால் குதர்க்கமும் நிதித்தியாசனத்தினால் துராக்கிரக விபரீதமும் நீங்கிவிடும் இந்தப்படிபிரதிபந்தம் நாசப்பட்டால் முமுட்சுக்களுக்குத் தானேயாத்மசொரூபமென்கிற திடபுத்தி வெளிதல்வரும்,

ச-கை- ஆகாமியப்பிரதிபந்தமாவதேதென்னில்,

உ-ம்- எந்தவேளையிலெந்தக்கன்மம் வருமோவென்பது தெரியாது அது புண்ணியபாவமிசிர கன்மத்தினாலேயே வருகின்றது அ

க்ஷயமிருக்க இந்த வேளையிலிதுவரவேண்டுமென்றும் இதுவருமல்லவாவென்றும் இதுவராதாவென்றும் ஒருமனதாய்ச்சிந்தித்துக் கொண்டிருப்பதே யாகாமியப்பிரதிபந்தமென்றறியத்தக்கது.

ச-ங்கை. இதற்கு நிவிர்த்தியெப்படியென்னில்.

உ-ம்- உபஸ்திதமான பர்வகர்மமும் முமூட்சுக்களுக்குவிதைபத்தினிட்டத்தில் ஒருடமாய் தயாரூபமாகிய ஆசத்திபிறாபிக்குமென்றும் தேகத்திற்கு நடக்கவேண்டிய பொசிப்பு எற்றக்குறைச்சலில்லாமற் சுதசித்தமாய் நடக்குமென்றும் குருவாக்கியத்தினுற் றெளிந்திருக்கிறபடி மேல்வருங்காரியத்தைக் காட்டவேண்டியதேயில்லை, ஒருடமானமனதாய் காட்டம்வைத்தா லதுவேயாகாமியப் பிரதிபந்தமென்று சொல்லப்படும், முமூட்சுவானவர்கள் அந்த ஆசத்தியை யாகாமியப்பிரதிபந்தமென்றறியாமல் அகர்த்தாவாய் அசங்கனுகியவென்னை இந்தகாசத்தி யென்னசெய்யப்போகிறதென்று சட்டைபண்ணுமலிருக்கார்களேயாகில் அது அவர்களுக்குச்சிறிது ஜென்மங்களைக்கொடாமற்போகாது,

ச-ங்கை, ஆகாமியப்பிரதிபந்தஞ் செனனங்கொடுக்குமென்றெங்கே சொல்லப்படுகிறதென்னில்.

உ-ம். சுருதிஸ்மிருதி யிதிகாசபுராணங்களிற் சொல்லப்படுகின்றது.

ச-ங்கை. அதெப்படியென்னில்.

உ-ம்- வாமதேவருக்கொரு ஜெனமங்கொடுத்ததென்றும் ஜடபாதருக்கு மூன்றுஜெனமங்கொடுத்ததென்றும் இன்னுஞ்சிறிதுபேர்களுக் கனேகஞ்ஜென்மங்களைக் கொடுத்ததென்றுஞ் சொல்லப்படுகின்றது, ஆதலால் ஸ்ரீ சற்குருவானவர்கள் சிஷனுக்குப் பாகியத்திலும் அந்தக்கரணத்திலுமிருக்கிற பூர்வபழக்கமாகிய அஞ்ஞானங்களை நன்றாய் விசாரிசையாய் நினைவிலிருக்கவொட்டாமல் அதின்மகிமைகளையும் சொரூபத்தையும் பலதிருஷ்டாந்த தாஷ்டாந்தங்களினுல் போதமாகும்படியெடுத்துவிளித்து அவனைப் பிரதிபந்தத்தி லொட்டாமற்பண்ணுவார்கள் ஆதலாலிப்படி முமூட்சுக்களானவர்கள் ஸ்ரீசற்குருமுகமாய்ப்பிரதிபந்தங்களை நன்றாயவிசாரித்து அதுகள்தங்களையணுகவொட்டாமற்றள்ளவேண்டும் அப்படி தள்ளாவிட்டால் அவர்களுக்குச்சிறிது ஜென்மங்கள்வருமென்பதிற்சந்தேகமில்லை இந்தப் பிரதிபந்தத்திரயம் இந்தச்ஜென்மத்தி லவனுக்கு கழித்துப்போகின்றதோ அவனுக்கே அந்தஜென்மத்தில் முத்தி இந்தப்பிரதிபந்தங்களி லொன்றாகிலுமிருந்தா லந்தஜென்மத்தில் முத்தியில்லையென்று சுருதிஸ்மிருதி யிதிகாசபுராணுகமங்களிற் சொல்லப்படுகின்றது இதிற்சம்சயமில்லை சித்தம்.

பிரதிபந்தத்திரயநிருபகம்-முற்றிற்று.



## பத்தொன்பதாவது.

## நவவிதசமுசார நிரூபணம்.

ச-ங்கை-சுருதியாதிகளில் நவவிதசமுசாரங்களை விசாரித்தறியவேண்டுமென்று சொல்லுகிறபடியால் நவவிதசமுசாரமாவதேதென்னில்.

உ-ம் - ஞாதுருஞானஞேயம், போக்கியபோகம், கர்த்தாகர்மக்கிரியையென்றொருபட்சஞ்சொல்லுவார்கள்,

ச-ங்கை-ஆனால்பட்சாந்தரமாவதேதென்னில்,

உ-ம். பஞ்சமகாபூதங்கள் ஞானேந்திரியங்கள் கன்மேந்திரியங்கள் பிராணாதிபஞ்சகம் அந்தக்கரணசதுஷ்டயம் தூலசரீரம் அவஸ்தாத்திரயம் இத்தனைக்குங் காரணமாகிய அஞ்ஞானம் இவைகளையே நவவிதசமுசாரமென்றும் நவவிதப்பிரபஞ்சமென்றுஞ் சொல்லுவார்கள் இந்நவவிதசமுசாரமும் பிராந்தியினால் வந்தது இவை அகங்காரத்திற்கேயன்றிச் சாட்சியாகிய வெனக்கில்லையென்றும் ஞானேந்திரியங்கன்மேந்திரியம் மனாதிசதுஷ்டயம் பிராணாதிபஞ்சகம் விஷயாதிபஞ்சகம் காமம் கர்மம், அஞ்ஞானம் இவைகளே புரியட்டக சரீரமென்றும் ஸ்ரீசற்குருமுன்னிலையி லெவன் சம்சயவிபரீதமில்லாமல் விசாரித்தறிகிறானோ அவனே சீவன்முத்தனென்று சுருதிஸ்மிருதி இதிகாசபுராணாகமங்களிற் சொல்லப்படுகின்றது இதிற்சம்சயமில்லை சித்தம்.

நவவிதசமுசாரநிரூபணம்-முற்றிற்று.

## இருபதாவது

## வைராக்கியாதி நிரூபணம்.

ச-ங்கை. சுருதியாதிகளில் வைராக்கியபோதோபரதிகளையும் அவற்றின் தன்மைகளையும் விசாரித்தறியவேண்டுமென்று சொல்லுகிறபடியினால் அந்தவைராக்கியாதிகள் எவர்களிடத்தி லிருக்குமென்னில்.

உ-ம். இம்மூன்றும் விவேகிகளிடத்திற் கூடியிருக்கும் கன்மவசத்தினாலில்லாதிருந்தாலுமிருக்கும்.

ச-ங்கை. அவற்றின் தன்மைகளாவதேதென்னில்.

உ-ம். ஏதுசொரூபம் காரியம் அவதி பலம் இவ்வைந்தும் அவற்றின் தன்மைகளென்று சொல்லப்படும்.

ச-கை. ஆனால் வயிராக்கியத்திற்கு ஏதுவாவதேதென்னில்,

உ-ம். சமஸ்தவிஷயத்திலுந் தோஷதிருஷ்டியுண்டாகின்றது.

ச-கை. சொரூபமாவதேதென்னில்,

உ-ம். தேககாமுணவெதிருத்தமான விஷயங்கள்வந்தாலும் அந்த விஷயத்திற் தோஷம்பிறந்து கக்கினசாதத்தைப்போற்காண்பது.

ச-கை. காரியமாவதேதென்னில்,

உ-ம். அந்தவிஷயங்களைப் புசிக்காமலேதள்ளிவிட்டோமென்று திரும்பவும் நினையாதிருக்கிறது.

ச-கை. அவதியாவதேதென்னில்,

உ-ம். பிரமலோகாதிபரியந்தந் திரணீகரிக்கப்படுவது.

ச-கை. பலமாவதேதென்னில்,

உ-ம். பிரமலோகம்.

ச-கை. உபரதிக்கேதுவாவதேதென்னில்,

உ-ம். இயமநியமாதி அஷ்டாங்கயோகங்கள்.

ச-கை. சொரூபமாவதேதென்னில்,

உ-ம். சித்தநிரோதமுண்டாவது.

ச-கை. காரியமாவதேதென்னில்;

உ-ம். சர்வவிகாரங்களுமற்றிருப்பது.

ச-கை. அவதியாவதேதென்னில்,

உ-ம். சுழுத்தியைப்போற்சாக்கிரத்திலுஞ் சமஸ்தவிஷயங்களையுமறந்திருப்பது.

ச-கை. பலமாவதேதென்னில்,

உ-ம். பிரமலோகம்.

ச-கை. ஞானத்திற்கு ஏதுவாவதேதென்னில்,

உ-ம். சிரவணமனனநிதித்தியாசனம்.

ச-கை. சொரூபமாவதேதென்னில்,

உ-ம். அந்தச்சிரவணாதிகளினால் தேகேந்திரியாதிப்பிரபஞ்சத்தினின்றும் ஆத்மசொரூபத்தைப்பிரித்து அந்தஅத்விதியவாத்மசொரூபமே தானென்றும் இந்தத்தேகாதிப்பிரபஞ்சம் தானல்லவென்றும் இந்தப்பிரபஞ்சங்கள் தோற்றினபோதிலும் காலத்திரயத்திலுமில்லை

யென்றும் புத்தியிற்றிடநிச்சயம்வருவதற்குச் சற்குருமுகமாய் அறுதியிற்பிராகிருதிவிவேகத்தினிடமாய்த் தோற்றினவிதமும் எப்போதும் பிரபஞ்சமில்லாதவிதத்துக்குப் பிராந்திநிவிர்த்தியுமறிந்ததே சொரூபமென்று சொல்லப்படும்.

ச-கை. காரியமாவதேதென்னில்,

உ-ம். இவ்வாத்மசொரூபமான வைங்காரக்கிராந்தி முதல் காரிய தேகேந்திரியாதிகளும் மறுபடியும் நினைவில்லாதிருப்பது.

ச-கை. அவதியாவதேதென்னில்,

உ-ம். அஞ்ஞானகாலத்தில்தேககாவென்றுஉறைப்புவந்ததுபோல் பிரமசொரூபமேநானென்று திடநிச்சயம் வருகிறது.

உ-ம். உபரதிதமானமோட்சமேபலம் இதப்படி. ஒவ்வொன்றுக்குத்தன்மைகளும் அன்னியோன்னியமாகக் காரியமில்லாதபிரகாரஞ் சொல்லப்படும்.

ச-கை. இந்தவைராக்கியாதிகள்மூன்றும்மோட்சத்திற்கேதுவோ அல்லது இரண்டொன்றோ அல்லது ஒன்றேதுவோவென்னில்.

உ-ம். சாதனுக்காத்தை யபேட்சியாமல் பிரத்தியட்சமோட்சம் வருகிறபடியால் ஞானமொன்றுமேபிரதானம், வயிராக்கியவுபரதியிரண்டும் ஞானத்திற்குச்சாதனம். இதமூன்றுமொருபுருடனிடத்திலிருந்தால் மகாதபோபலமாகும் அல்லது ஒருவனிடத்தில் ஞானமுக்கிடாவொன்றிருந்தாலுமிருக்கும் இரண்டிருந்தாலுமிருக்குஞ்சதமாயிரண்டுமில்லாமற்போனாலும்போம் ஒருவனுக்கு வயிராக்கியவுபரதியிரண்டும் பூரணமாயிருந்தும்ஞானமொன்றில்லாமற்போனவனுக்கு மோட்சமில்லை.

ச-கை. ஆனால்வயிராக்கியவுபரதிவியர்த்தமாய்ப்போமோவெனில்

உ-ம். போகாது.

ச-கை. பின்னையெப்படியென்னில்,

உ-ம். வயிராக்கியவுபரதிகள் தபசாலெப்படியினால அதனாற்புண்ணியலோகங்கள்கிடைக்கும் ஒருவனுக்குஞானம்பூரணமாயிருந்துவயிராக்கியவுபரதிகளில்லாமற்போனாலும் அவனுக்குமோட்சம்வருமென்பதிற் சந்தேகமில்லை.

ச-கை. இவ்வயிராக்கியவுபரதிகளாற்பிரயோசனமென்னவெனில்,

உ-ம். அதுகளில்லாவிட்டாற் பிரத்தியட்சதுக்கம்போகாது இதுவே ஞானவயிராக்கியவுபரதிகளின் தாரதம்மியமென் றறியத்தக்கது

பிராரத்தநானாவிதமானபடியினால் ஞானிகளுடையவிவகாரமுநானா விதமாயிருக்கும் விவேகிகள் ஞானிகளுடையவிவகாரத்தைப்பார்த்துச்சாஸ்திரமொருவிதமாய்ச்சொல்லியிருக்க இவர்கள் நடைவேறுபட்டவராமென்று பிரமிக்கவேண்டியதில்லை, அவரவர்கள்கன்மத்தினா லவர்கள் நானாவிதவியாபாரத்துடன் கூடியிருந்தபோதிலும் ஞானமும் ஞானபலமானமோட்சமும் பேதமேயில்லையென்று ஸ்ரீசற்குருவினா ற்றெளிந்து நானே ஸ்வயம்பிரகாசப்பிரமசொரூபமென் றறிவையடைந்தோனே அவனே ஜீவன்முத்தனும் அதிவர்ணாச்சிரமியுமென்று சுருதிஸ்மிருதியிதிகாசபுராணாகமங்களிற் சொல்லப்படுகின்றது இதிற்சம்சயமில்லை சித்தம்.

வைராக்கியநிரூபகம் முற்றிற்று.

---

## இருபத்தோராவது

## வாசனாத்திரயநிரூபம்.

---

சி-ஷ. சுருதியாதிகளில் ஞானத்திற்குப்பிரதிபந்தமானவாசனாத்திரயங்களை விசாரித்தறியவேண்டுமென்று சொல்லுகிறபடியினால் வாசனாத்திரயமாவதேதென்னில்.

கு-ரு. லோகவாசனை தேகவாசனை சாஸ்திரவாசனை எனமூன்றுவிதம்.

கு-ரு. உலகத்தில் சமஸ்தமானபேர்களுந் தன்னைநிந்திக்காமலிருக்கவேண்டும் சர்வதா தன்னையேஸ்தோத்திரம்பண்ணவேண்டும் என்று அபிமானபூர்வகமாய்த் தோற்றுகிறதே லோகவாசனையென்றுசொல்லப்படும்.

சி-ஷ. அதுலோகப்பிரதிபந்தத்திற்கு நிவிர்த்தியெப்படியென்னில்,

கு-ரு. தன்னையொருவராவது நிந்திக்கப்படாமலிருக்கவேண்டும் தன்னையெல்லாரும்புகழவேண்டும் என்கிறது ஈஸ்வராதிகளுக்கும் அசாத்தியமானபிரயத்தினமாயிருக்கிறபடியினால் அஞ்ஞானிகளானவர்கள் ஒருபோதுநிந்திப்பார்கள் ஒருபோது ஸ்தோத்திரம்பண்ணுவார்கள் ஆதலால்நமக்கு ஹானியேது லாபமேது என்றுவிசாரித்தறிவதே அந்தப்பிரதிபந்தத்துக்கு நிவிர்த்தியாகும்.



## இருபத்திரண்டாவது

## ஆசுரவாசனைப்பிரதிபந்தநிருபகம்.

ச-கை. சுருதியாதிகளில் ஆசுரவாசனைப்பிரதிபந்தம் விசாரித்தறியவேண்டுமென்று சொல்லுகிறபடியினால் அஃதேதென்னில்,

உ-ம். அது தன்னிடத்தில் இல்லாததாய்த் தோற்றினபோதிலும் ஒவ்வொருசமயத்திற்பிறருடைய ஆசாரத்தைப்பார்த்தபிறகு ஆட்சேபாதிகளாலுண்டாகும் அதுவே யாசுரவாசனைப்பிரதிபந்தமென்று சொல்லப்படும்.

ச-கை. அதெப்படியென்னில்,

உ-ம். அடாபிரஷ்டா ஆசாரமிப்படியாபண்ணுகிறது நீ பிரஷ்டனாய்ப்போனாய் சந்தேகமில்லை, அடா வுனக்குபதேசம்பண்ணி யாசாரஞ்சொன்னகுருவாரோ அவனும்பிரஷ்டனென்பதிற் சந்தேகமில்லை அடா நாளைமுதல் நம்மிடத்துக்குவரவேண்டாம் நீ எழுந்துபோடா இல்லாவிட்டால் நமதுபாததீர்த்தம்வாங்கிக்கொண்டுபிழைத்துப்போடாவென்றுசொல்லிப் பின்னையுந்தன்னின்பத்தைக்குறித்து அடா நீ நமக்குச் சிசுருட்சைசெய்வதைப்பார்க்கிலும் வேதாந்தவிசாரத்திலென்னபலனிருக்கின்றது நம்மையுபாசனைபண்ணுனுனக்குத்தர்மார்த்தகாரியமோட்சமும்சகலஐசுவரியாபீஷ்டமுஞ்சித்திக்கும் ஆதலால் நீ இதுமுதனம்மையன்றி யாருக்குஞ் சிசுருஷைபண்ணவேண்டாம் ஒருவரிடத்திலும்போகவேண்டாம் போனாலவர்களைநமஸ்கரிக்கவேண்டாம் அவர்களே உன்னைமுன்பாகநமஸ்கரித்தால் பிறகுநமஸ்காரஞ்செய்யென்று பலவாகச்சொல்லிப் பின்னும் ஒருவரிடத்திற்போனால் தனதுமர்மம்வெளியாய்விடுமென்றுநினைத்து அப்பாநீமற்றொருபெரியவாளிடத்திற் போய்பேசினாலும் அவர்களைவணங்கினாலும்பிறகு நீநம்முடைய சந்நிதானத்தில் வரக்கூடாது இப்படியே ஒருவன் வெகுநாளாய் நம்மையடுத்தவனாயிருந்து பின்பு சட்டைபண்ணாமல் நம்மைக்கண்டெழுந்திராதிருந்தான் நாமதுகண்டு உனக்காயசு இந்தமட்டுந்தானென்றுசபித்தோம் அவனப்படியேயிறந்துபோனான்.

பின்னும் நம்மையறிந்த ஒருவன் ஐசுவரியகர்வத்தினால் நம்மைப்பராமரிக்காமற்போனான் அவனுக்கும் ஐசுவரியமிந்தமட்டுந்தானென்றுசபித்தோம் அவனுந்தரித்திரனாகியிருக்கிறான் ஒருவனை நீ நம்மிடத்தில் உபதேசம்பெற்றுக்கொண்டுமே நம்மைமதியாமலிருக்கிறபடி

புச்சாடனம்பண்ணினால் அவனுடனே மரணமடைவான் நாமொருசிஷ னுக்கு உபதேசஞ்செய்திருந்தோமே அவன் அதுமுதல் மகாபாக்கியவந்த னாயிருக்கிறான் மற்றொருவன் சாகவேண்டுமென்று ஒருமந்திரத்தை உப தேசித்தோமே அவன் அதைச்செபித்தமுன்னாக ஒழிந்துபோய்விட் டான் முன்பு நம்மையடுத்திருந்த ஒருசிஷன் திரும்பிவேறொருவனிட த்திற்போய்ச்சேர்ந்து உபதேசம்பெற்றுக்கொண்டான் அதுநமக்குத் தெரிந்து அவனுக்கு நாவெழுமாற்செய்துவிட்டோம் பூர்வம் அநேகம் பெரியவாளிருந்தார்கள் அவர்களிலொருவரும் நம்மைப்போற் பிரதி ஷ்டையானவர்களில்லை,

ஆதலால் மனவஞ்சகமற நமக்குப்பணிவிடைசெய்கிறவனே கிரு தார்த்தன் கொடுக்கப்பட்ட தானங்களெல்லாம் நமக்கே கொடுக்கவே ண்டும் நம்மையேபூசிக்கவேண்டும் நம்மையே சேவிக்கவேண்டும் நம் முடையபாதநாள்விழுந்தவிசகமே மோட்சவீடாகும் நமது பாதோ தகத்தைச் சிரசில்புரோட்சித்துக்கொள்ளுகின்றவர்களே கிருதகிருத் தியர்கள் நமக்கிவ்வளவுமகிமையில்லாவிட்டால் ஒருவரும் நம்மையு பாசிக்கமாட்டார்கள் நாமஇன்னமும் வெகுசிஷவர்க்கங்களைச் சம்பா திக்கவேண்டுமென்றிப்படி பிரதாபமாகச்சொல்லி யனர்த்தரூபமாகவ ரப்பட்டசித்தவிருத்திக்கு ஆசாரவாசனுப்பிரதிபக்ஷமென்று சொல்ல ப்படும் இதுமகா அனர்த்தகரிக்கேபதமானபடியினாலும் அநாத்ம விஷயமானபடியினாலும் ஆத்மரூபானவிரோதமானபடியினாலும் விவே கிகளிதைவிசாரித்து விட்டுவிடத்தக்கது இக்கப்பிரதிபக்ஷத்துடன் சிர வணம்பண்ணினவர்களுக்கு அந்தஜென்மத்தினால் ஞானம்வராது.

ச-கை. ஆனால் சிரவணம் வீணாய்ப்போகுமாவென்னில்.

உ-ம். போகாது அசுவமேதயாகம்பண்ணினவர்கள் போய்ச்சேருகி றலோகத்திற்போயடைந்து அங்குள்ளபோகங்களையனுபவித்துப்பிற கு பிரமநிஷ்டாகுலத்திற்பிறந்து சம்சாரவாசனையிருந்து பூர்வஜன் மவாசனுவாசத்தினால் சிரவணத்திலவகாசிப்பான் அப்படியின்றியின் தனக்குப் பிரதிபந்தமுண்டென்று தெரிந்து ஸ்ரீ சற்குருமுன்னிலையி ற்போக்கடித்து அந்தச்சற்குருகடாட்சவிசேஷப்பிரபாவத்தினால் பரூரணம்பெற்று முத்தனாவான் இந்தப்பிரகாரத்தில் பிரதிபக்ஷத் தைப்போக்கடித்துச் சிரவணாதிகள்செய்து ஞானம்பெற்றவனே ஜீவ ன்முத்தனென்று சுருதிஸ்மிருதி இதிகாசபுராணாகமங்களிற் சொல்ல ப்படுகின்றது இதிற்சந்தேகமில்லை சித்தம்.

ஆசாரவாசனுப்பிரதிபக்ஷநிரூபகம்-முற்றிற்று.

ளத்தச்சித்தப்பிரமத்தை யெப்படிப்பிரதிபாதிக்கும் அப்படிப் பிரதிபாதிக்கமாட்டாது என்றுவருகிறசித்தவிருத்திக்குப் பிரமாணகத அசம்பாவனையென்றுபெயர்.

ச-கை. பிரமாணகதவிபரீதமாவதேதென்னில்,

உ-ம். பிரமம் சித்தவஸ்துவானபடியினால் சுருதிகளுக்குச்சித்தப்பிரமத்தைப் பிரதிபாதிக்குமிடத்தில் தாற்பரியமில்லை மேலும் சுருதிகள்சித்தப்பிரமத்தைப்பிரதிபாதிக்குமேயானால் புருஷனுக்கு நிவிர்த்திபோக்குவரவுகாணாமலிருக்கவேண்டும் ஆதலால் பிரயோசனமில்லாமற்போகும் உலகத்தில் பிரவிர்த்திபூர்வகமாய்ப் புருஷார்த்தங்கண்டோம் ஆகையினால்சமஸ்தவேதார்த்தங்களுங் கர்மம் பிரமமேயென்றுவருகிற சித்தவிருத்திக்குப் பிரமாணகதவிபரீதமென்றுபெயர்.

ச-கை. பிரமேயகதசம்சயமாவதேதென்னில்.

உ-ம். பிரமமேஜெகத்காரணமோவல்லது பிரதானாதிகள் ஜெகத்காரணமோவென்று வருகிறசித்தவிருத்திக்குப்பிரமேயகதசம்சயமென்றுபெயர்.

ச-கை. பிரமேயகத அசம்பாவனையாவதேதென்னில்,

உ-ம். ஜெகத்துக்குப்பிரமம் அன்னியமாய் விலட்சணமாயிருக்கிறபடியினால் ஜெகத்திற்குப்பிரமம் காரணமாகமாட்டாது ஆதலால் பிரதானாதிகளே ஜெகத்காரணமென்றுவருகிறசித்தவிருத்திக்குப்பிரமேயகத அசம்பாவனையென்றுபெயர்.

ச-கை. பிரமேயகதவிபரீதமாவதேதென்னில்,

உ-ம். உலகத்திற்குடவை நூலினிடத்தில்காரியகாரணங்களுக்கு ஏகரூபங்கண்டோம் அதுபோல அசுத்தியாதி விகாரங்களுடன் கூடியிருக்கப்பட்ட ஜகத்திற்குக்காரணமான பிரமமுமசுத்தியாதிகளுடன் கூடிக்கொண்டிருக்கவேண்டும் அங்ஙனமின்மையால்பிரதானாதிகளே ஜெகத்காரணமென்று திடமாய்வருகிறசித்தவிருத்திக்குப் பிரமேயகதவிபரீதமென்றுபெயர் இப்படியே பிரத்தியேகாத்மவிஷயசம்சயம் பிரத்தியேகாத்மவிஷயஅசம்பாவனை பிரத்தியேகாத்ம விஷயவிபரீதமெனமூன்றுண்டு.

ச-கை. அதிற்பிரத்தியேகாத்மவிஷயசம்சயமாவதேதென்னில்,

உ-ம். யந்திரத்திற்சிவனாகவும் ஜெகத்திலொருவனாகவும் தோற்றிக்கொண்டிருக்கப்பட்ட தான் ஜெகத்விலட்சணமான பிரமமே

ரூபம், கிரியம், சவிகாரம், நானாரூபம், சாபேட்சை, அப்பிரகாசம், பரிச்சின்னம், சகம்பம், ஆதேயம், சாவயவம், ஆதியந்த சகிதம், சுசாதி விசாதி சுகதபேதசகிதம், காரியம், குணம் என்றுசொல்லப்படும்.

ஆத்மாவோவென்றால், நித்தியம், சுத்தம், சித்ரூபம், சுகரூபம், திருக்கு, நிர்விகாரம், ஏகரூபம், நிராபேட்சை, பிரகாசம், அபரிச்சின்னம், நிஷ்கம்பம், ஆதாரம், நிரவயவம், ஆதியந்தரகிதம், சுசாதி விசாதி சுகதபேதரகிதம், காரணம், நிர்க்குணம் என்றுசொல்லப்படும்.

இந்தப்பிரகாரத்தில் தேகேந்திரியாதிகளுக்கு மாத்மாவுக்கு முள்ள வைலக்ஷணியங்களை ஸ்ரீ சற்குரு முன்னிலையில் நிரைநிரையாய் யூகபுத்தியினால் நன்றாய் விசாரித்தறிந்தவனெவனோ அவனே சீவன்முத்தனென்றும், திடப்பிரக்ஞனென்றும், சுருதிஸ்மிருதி யிதிகாச புராணாகமாதிகளிற் சொல்லப்படுகின்றது. இதிற் சம்சய மில்லை சித்தம்.

தேகாத்மவைலக்ஷணநிருபகம்—முற்றிற்று.

---

நாற்பதாவது.

# ஆத்மானாத்மநிருபகம்.

———o(*)o———

ச-கை; சுருதியாதிகளில் ஆத்மானாத்மவிவேகம் பண்ணவேண்டுமென்கிறபடி ஆத்மாவாவதேதென்னில்,

உ-ம். ஸ்தூல சூக்ஷும காரண சரீரமான பஞ்ச கோசங்களுக்கும் வெதிருத்தனாய், அவஸ்தாத்திரய சாக்ஷியாய், நித்தியனாய், நிருவிகாரியாய், நிஷ்கிரியனாய், நிருபாதிகனாய், நிர்லேபனாய், நிச்சம்பந்தனாய், நிரந்தரியனாய், நிருமலனாய், அசங்கனாய், அனந்தனாய், அகர்த்தாவாய், அபோக்தாவாய், அசரீரியாய், அப்பிராணனாய், அமனசனாய், அசலனாய், அபோத சுவரூபனாய், சுவயம்பிரகாசனாய், சொப்பிரகாசனாய், சுத்தனாய், சர்வக்ஞனாய், அசித்தனாய், புண்ணியபாவத்தினாற் பரிசிக்கப்படாதவனாய், சர்வசம்பந்தனாய், சத்தியனாய், காலத்திரயத்திலும் பாத்தியனாய், பரமானந்தசொரூபனாய் விளங்கப்பட்டவனே யாத்மாவென்று சொல்லப்படும்.

ச-கை; அனாத்மாவாவதேதென்னில்,

உ-ம். வியஷ்டி சமஷ்டி சொரூபமான தூலசூக்ஷும காரண சரீராதிப் பிரபஞ்சங்களே யனாத்மாவென்று சொல்லப்படும்.

ச-கை, தூலசரீரமாவதேதென்னில

உ-ம்? பஞ்சீகிருதபூதகாரியமாய் பிராரத்தத்தினுற் சம்பாதிக்கப்பட்ட தாப்பிரவகர்மங்களுக்குப்பலரூபமான சுகதுக்க போகங்களுக்காசிரயஸ்தானமாயிருக்கப்பட்டதேதூலசரீரம்இதையே அன்னமயகோசமென்றுஞ்சொல்லப்படும்

ச-கை, அன்னமயகோசமாவதேதென்னில்,

உ-ம், தாய்தகப்பன் புசிக்கப்பட்ட அன்னத்தினுற் பிறக்கப்பட்டதாயும் தாய்தகப்பன சுரோணிதசுக்கிலத்தினுற்பிறக்கப்பட்டதாயும் பாலன்னத்தினுல் விர்த்திபொருந்தினதாயும் இருக்கின்றதேகமே யன்னமயகோசமாகும் இந்தத்தூலமானதுபிறப்பதற்குமுன்னும் மாணுக்கத்திலுமில்லாதபடியினுலும் பஞ்சமகா பூதகாரியமாகையினுலும் திரிசியமாகையினுலும் சடமாகையினுலும் பரிச்சின்னமாகையினுலும்சுவர்கள்போலிருக்கிறபடியினுலும் இதுஆத்மாவாகமாட்டாது,

அந்தச்சுவரைப்பார்க்கமாட்டாதவன் அந்தச்சுவருக்கெப்படியன்னியனே அப்படியே தாஷ்டாந்தத்திலுந் தூலதேகதிருஷ்டாவானவன் தூலதேகத்துக்கன்னியனென்றேவிசாரித்து மூமுட்சுவானவர்கள் தூலதேகசாட்சியும் சேதனனுமாகிய வாத்மாவே நானென்றறியவேண்டும்,

ச-கை, இனிசூட்சுமசரீரமாவதேதென்னில்,

உ-ம். அபஞ்சீகிருதபூதகாரியமான பதினேழவயவத்துடன்கூடியிருக்கப்பட்டதேசூட்சுமசரீரமென்றுசொல்லப்படும்,

ச-கை, பதினேழவயவமாவதேதென்னில்

உ-ம், ஞானேந்திரியபஞ்சகம் கர்மேந்திரியபஞ்சகம் பிராணுதி பஞ்சகம்மனம் புத்தி இதுகளேபதினேழவயவ மென்றுசொல்லப்படும் இதுகோசத்திரயாத்மகமாயிருக்கும்

ச-கை, கோசத்திரயமாவதேதென்னில்,

உ-ம், பிராணமயம்மனேமயம்விஞ்ஞானமயமென்று சொல்லுவார்கள் இதிற்பிராணமயகோசமாத்திரம்பத்தவயவத்துடனிருக்கும்,

ச-கை, அஃதெப்படியென்னில

உ-ம, அபஞ்சீகிருதபூதகாரியபஞ்சமகா பூதங்களின ஆதியாகியரஜோபாகத்திலிருந்து பிரத்தியேகமேபிரத்தியேகமாய்கிரமமாயப்பிறக்கப்பட்டவாக்காதியான கர்மேந்திரியமைந்தும்ரஜோகுணசமஷ்டியினுற்

பிறக்கப்பட்ட பிராணாதிவாயுக்களோடுங்கூடினது பிராணமயகோசமென்றுசொல்லப்படும்,

சங்கை, மனோமயகோசமாவதேதென்னில்

உ-ம், ஆறவயவத்துடன்கூடியிருக்கும்,

சங்கை, அதெப்படியென்னில்

உ-ம், முற்சொல்லிய அபஞ்சீகிருதபஞ்சமகாபூதங்களினுடைய சத்துவகுணபாகங்களினாற் பிரத்தியேகம் பிரத்தியேகமாய் கிரமத்துடன்பிறக்கப்பட்டசுரோத்திராதியான ஞானேந்திரியங்களைந்தும் சத்துவகுணசமஷ்டியினாற்பிறக்கப்பட்டதாய்சம்சயாத்மகமாய் அந்தக்கரணவிர்த்திரூபமாயிருக்கிறமனமொன்றும் கூடிமனோமயகோசமென்றுசொல்லப்படும்,

சங்கை, விஞ்ஞானமயகோசமாவதேதென்னில்

உ-ம், அதுவுமாறவயவத்துடனிருக்கும்,

சங்கை, அதெப்படியென்னில்

உ-ம், முற்சொல்லிய சுரோத்திராதிகளைந்தும் சத்துவகுணசமஷ்டியினாற்பிறந்துநிச்சயாத்மகமாய் அந்தக்கரணவிர்த்திரூபமான புத்தியொன்றுங்கூடி விஞ்ஞானமயகோசமென்றுசொல்லப்படும்இந்தக்கோசத்திரயமும் லிங்கசரீரத்திலந்தர்ப்பூதம் இந்த லிங்கசரீரமுந்திரிசியமாய்சடமாயிருக்கிறபடியினால் தூலசரீரத்தைப்போலவேயாத்மாவாகமாட்டாது,

சங்கை, ஆனாலிந்தலிங்கசரீரத்திற்குப்பூதகாரியமெப்படியெனில்

உ-ம், இதற்கர்த்தஞ்சுருதியினாலேயே பூதகாரியநிச்சயிக்கிறபடியினால் தூலசரீரத்தைப்போலிதற்கும் திரிசியத்துவமுஞ் சடத்துவமும் பரிச்சின்னத்துவமும் விகாரங்களும் நிச்சயிக்கப்படுகின்றது அந்தத்தூலதேகவதிஷ்டாவானவன் தூலதேகத்திற்கெப்படியன்னியனோ அப்படியே இந்தலிங்கதேக வதிஷ்டாவாகியநான் இந்தலிங்கதேகத்திற்கன்னியனென்றும் இதற்குச்சாட்சியாகியவாத்மாவேநானென்றும் முமுட்சுக்களறியத்தக்கது,

சங்கை, காரணசரீரமாவதேதெனனில்

உ-ம், தூலசூட்சுமசரீரத்துவயத்திற்கேதுவாய் ஆதியாய் அநிர்வசனியமாய்சடமாய்மோகாத்மகமாய்ஆத்மாவேயாசிரயமானதாயிருக்கிற பிரமவாவாரகமானவஞ்ஞானமே காரணசரீரமென்றுசொல்லப்படும்இதற்கேயானந்தமயகோசமென்றுபெயர்;

னாற் கற்பிக்கப்பட்டுச் சொப்பனத்தையபிமானித்தபடியினாற் சொப்பன கற்பிதனென்றும் பெயர்வந்தது இந்தச் சூக்ஷுமசரீரமும் சமஷ்டிவியஷ்டிபேதத்தினாலிரண்டுவிதம்,

ச-கை. அதெப்படியென்னில்,

உ-ம். சொப்பனாவஸ்தையில் சமஷ்டி சூட்சுமசரீரத்திலபிமானிக்கப்பட்டவாத்மாவை இரணியகர்ப்பன் சூத்திராத்மா பிராணன் என்று சொல்லப்படும்.

ச-கை, இம்மூன்றுபெயரேன்வந்ததென்னில்

உ-ம், ஞானசத்தியுண்டாயிருப்பதால் இரணிய கர்ப்பனென்றும் நானாவிதமணியினிடத்தில் சூத்திரங்கோர்த்ததுபோல நானாவித பிரபஞ்சங்களிலுமனுசூதனாயிருப்பதால் சூத்திராத்மாவென்றும் கிரியாசக்தியுடன் கூடியிருப்பதினால் பிராணனென்றும் பெயர்வந்தது.

ச-கை, இனிசுழுத்தியாவதேதெனில்,

உ-ம், சமஸ்தவிஷயஞானங்களு மில்லாதிருக்கின்றதெதுவோ அதுவே சுழுத்தியவஸ்தை இவ்வவஸ்தையில் காரணசரீரத்திலபிமானிக்கப்பட்டவாத்மாவைப் பிராஞ்ஞன்பாரமார்த்திகன் அவிச்சின்னனென்றுசொல்லப்படும்,

ச-கை, இம்மூன்றுபெயரேன்வந்ததென்னில,

உ-ம், சொப்பிரகாசசொரூபனானபடியால் பிராஞ்ஞனென்றும் அவஸ்தாத்திரயத்திலனுசூதனாயிருக்கிறபடியால் பாரமார்த்திகனென்றும் தேகேந்திரியாதியுபாதியினாற் பரிச்சின்னனாகியபடியால் அவிச்சின்னனென்றும்பேர்வந்தது இந்தக்காரணசரீரமுஞ் சமஷ்டிவியஷ்டிபேதத்தினாலிரண்டுவிதம்,

ச-கை, அதெப்படியென்னில்,

உ-ம். சுழுத்தியவஸ்தையில் சமஷ்டி காரணசரீரத்திலபிமானிக்கப்பட்டவாத்மாவை ஈஸ்வரன் அந்தரியாமி அவ்வியாகிருதன் என்றுசொல்லப்படும்,

ச-கை- இம்மூன்றுபெயரேன்வந்ததென்னில்

உ-ம், சமஸ்தபிராணிகளையுஞ்சிருஷ்டிக்கிறபடியினாலீஸ்வரனென்றும் சமஸ்த பிராணிகளிருதயத்திலுமிருந்துபிரேரிப் பிக்கிறபடியினால் அந்தரியாமியென்றும் நாமரூபரகிதமாயிருக்கிறபடியால் அவ்வியாகிருதனென்றும் பேர்வந்தது இதுவே வியட்டிசமட்டி சாக்கிர சொப்பன சுழுத்திய வஸ்தாத்திரயங்களும் அபிமானிகளுமாகும்.

ச-ஙை. இத்தச்சரீரத்திரயங்களுக்கன்னியமாய் முப்பத்தாறுதத்துவங்களிருக்க அதுகளைச்சொல்லாமற் சரீரத்திரயங்களை மாத்திரஞ் சொன்னதேதென்னில்,

உ-ம். அந்தமுப்பத்தாறுதத்துவங்களுமிந்தச் சரீரத்திரயத்திலந்தர்ப்பூதமாயிருக்கிறபடியினால் இதுகளைச்சொன்னபோதே அந்தத்தத்துவங்களையுஞ்சொன்னதாயிற்று,

ச-ஙை, ஆயினும்முப்பத்தாறுதத்துவங்களாவதேதென்னில்

உ-ம்; ஆகாசாதிபூதமைந்தும் சத்தாதிவிஷயமைந்தும் சுரோத்திராதிஞானேந்திரியமைந்தும் வாக்காதிகன்மேந்திரியமைந்தும் பிராணாதிவாயுக்கள்பத்தும் மனாதிநான்கும். அஞ்ஞானமொன்றும் பசுவாகியசீவனொன்றும் கூடின முப்பத்தாறுதத்துவங்களென்று சொல்லுவார்கள் இந்தத்தத்துவங்களுக்கெல்லாமன்னியமாய் விளங்குவது ஜெகத்காரணபூதமாகியபரமாத்மாவான பரப்பிரமமென்றுசொல்லப்படும்.

இந்தமுப்பத்தாறுதத்துவமுமிருபத்துநான்கு தத்துவத்திலந்தர்ப்பூதமென்று நிச்சயித்துஇருபத்துநான்கு தத்துவமென்றுஞ்சொல்லப்பட்டிருக்கின்றது இப்படிசொல்லப்பட்ட அவஸ்தாத்திரயங்களையுஞ் சரீரத்திரயங்களையும் ஸ்ரீ சற்குருமுன்னிலையிலவிசாரித்து அகண்டசச்சிதானந்த சொரூபமாகியபிரத்தியகாத்மாவே நானென்றறிகிறவனெவனோ அவனே பிரமவித்தென்று சுருதிஸ்மிருதிஇதிகாசபுராணாதிகளிற சொல்லப்படுகின்றது இதிற்சம்சயமில்லை சித்தம்,

அவஸ்தாத்திரயநிருபகம்-முற்றிற்று

---

நாற்பத்திரண்டாவது.

## பிரளயசொரூபநிருபகம்.

ச-ஙை. பிரளயசொரூபமாவதேதென்னில்

உ-ம், நித்தியப்பிரளயம் அவாந்தரப்பிரளயம் தினப்பிரளயம் பிரமப்பிரளயம் ஆத்தியந்தப்பிரளயமென்றைந்துவிதமாயிருக்கும்,

ச-கை, நித்தியப்பிரளயமாவதேதென்னில்

உ-ம். சமஸ்தப்பிராணிகளுடையசுழுத்தியே நித்தியப்பிரளயம்.

ச-கை, அவாந்தரப்பிரளயமாவதேதென்னில

உ-ம். கிருதயுகம் திரேதாயுகம் துவாபரயுகம் கலியுகம் ஆகிய அவ்வவ்வாதிபத்தியமா வருகிறபடியும் அவாந்திரப்பிரளய மென்றுசொல்லப்படும் பிரமதேவருடைய மத்தியானத்தில் பதினான்கு அவாந்தரப்பிரளயம் வரும அதுகளுக்கு நைமித்தியப்பிரளயமென்றும் மனுவந்தரப்பிரளய மென்றுஞ் சொல்லப்படும் அதற்குள்யுகப்பிரளயம் அந்தர்ப்பூதமாயிருக்கும்

ச-கை, தினப்பிரளயமாவதேதென்னில்

உ-ம், பிரமதேவருடைய சுழுத்தியே தினப்பிரளயம்,

ச-கை, பிரமப்பிரளயமாவதேதென்னில்,

உ-ம், பிரமதேவருடையநாசவவஸ்தை அவ்வவஸ்தையில் ஆகாசாதிப் பிரபஞ்சங்கள் சர்வாத்மனுவில்லை அஞ்ஞானமாத்திரமிஞ்சியிருக்கும் அதற்கு மகாப்பிரளயமென்றும் பிராகிருதப்பிரளயமென்றும் மகா சுழுத்தியென்றும் மூன்றுபெயர்

ச-கை, அத்தியந்தப்பிரளயமாவதேதென்னில்

உ-ம், முத்தி, அவ்வவஸ்தையில் அஞ்ஞானஞ்சர்வாத்மனுவில்லை இப்படிப்பஞ்சப்பிரளயங்களையும் ஸ்ரீ சற்குருநாதன் னிலையில் விசாரித்து இதுகளுக் கெல்லாமாதாரமாய் ஏனுருதனுய அசங்கனுயிராநின்றவாத்மாமேநானென்று எவனறிகிறானே அவனேமுத்தனென்று சுருதிஸ்மிருதிஇதிகாசபுராணுகமாதிகளிற் சொல்லப்படுகின்றது இதிற்சம்சயமில்லை சித்தம்.

பிரளயசொரூபநிரூபகம்-முற்றிற்று.

---

நாற்பத்துமூன்றாவது,

## வேதாந்தவெதிருத்தமன்ன நிருபகம்.

---

ச-கை, உலகத்தில் வேதாந்தசாஸ்திரவெதிருத்தர்களாகிய சிலவித்துவான்களும் வெளிகர்களும் சிலபாமரர்களும் ஆகியஇவர்கள் ஆகமசாஸ்திர புராணுகமாதிகளைக்கேட்டு அவைகளின் அபிப்பிராயந்தெரியாமல் அதுகளையேசத்திய மென்றெண்ணிப்புத்திரனுண்டானவா

களுக்கே இகபரசவுக்கியமுண்டென்றும் புத்திரரில்லாதவர்களுக்கு இகலோகபரலோக துக்கமுண்டென்றுஞ் சொல்லியிருக்கிறார்கள் அதைக்கேட்டயதார்த்தமென்றெண்ணிப் பிரமைகொண்டவர்களுடையபிராந்திநீங்கும்படி புத்திரருண்டானவர்களுக்கேயதிகதுக்கமென்றுசொன்ன பிரபலசுருதிவாக்கியங்களை விசாரித்து முமூட்சுவானவர்கள் அந்தப்புத்திராதிகளிடத்திற் பிரியங்களைவிட்டுவிட்டு ஆத்மசொரூபமாகியதன்னிடத்திலேயேபரமப்பிரீதியாய் சதாநிஷ்டனாயிருக்கவேண்டுமென்று பெரியோர்சொல்லுகிறபடியினாலே புத்திரருண்டானவர்களுக்கதிகதுக்கமென்பதெப்படியென்னில்,

உ-ம், புத்திரனில்லாத தாய்தந்தைகள் புத்திரசோகங்கொண்டு சாஸ்திரிகளையழைத்து சுவாமீ எங்களுக்குப் புத்திரனில்லாமையாற்கெதியில்லையென்றுபுராணாதிகளிற்சொல்லுகின்றதே அந்தத்தோஷம் நீங்கப்புத்திரனுண்டாகும் வகைசொல்லவேண்டுமென்று கேட்க,

அவர்களும் சந்தோஷகரமாய் நீங்கள்புண்ணியதீர்த்த யாத்திராதிவிரதாதிகளையனுஷ்டித்தீர்களானால் உங்களுடைய பாவநீங்கிப்புத்திரோற்சவமுண்டாகுமென்றுசொல்ல அந்தப்படியே தீர்த்தயாத்திரைமுதலியவிரதாதிகளைப்பிரயாசைவகித்துவெகுநாளனுஷ்டித்தும்புத்திரனுண்டாகையினாலுந்துக்கம் அப்படியிருக்கத் தெய்வகதியாய் ஒருகாலத்திற்கர்ப்பமுண்டாகி அஃதுங்கர்மசம்பந்தத்தினாற் சேதப்படஅதனாலுந்துக்கமே, திரும்பவுந்தெய்வகதியாய்க் கர்ப்பந்தரித்துப் பத்துமாதஞ்சென்றபிறகு பிரசவகாலத்திலுந்துக்கம், பிரசவித்தபிறகு மந்திரௌஷதாதிதேவதாதிபிரார்த்தனைகளினாலுந் துக்கப்பட்டவர்களாய் புத்திராபேட்சையினாற் பிராணஹானியெங்கே நேரிடுகிறதோவென்றுதாபப்படுவதினாலுந்துக்கம், மாந்தம் சுரம் பட்சிதோஷமுண்டாதலினாலும்சதாதுக்கம்,இதுகளுக் கெல்லாந்தப்பிப்பிழைத்தால் வித்தையாப்பியாசாதிகளினால்துக்கம், அப்படிவித்தைவந்தபின்னும் விஷயவிச்சைசம்பந்தாதிதுர்நடத்தைகளினாலதிகதுக்கம்,

பின்னும் விவாககாரியாதிசெலவுகளினாலும் அப்படிவிவாகமாகிக் குழந்தைகளதிகரித்து தரித்திரப்படுவதினாலுந் துக்கம் ஒருவேளை தரித்திரநீங்கியயிசுவரியம் வந்தகாலத்திலும் இந்தப்புத்திரனுடையஐசுவரியவாரோக்கிய சம்பத்தைக் கூடவிருந்தனுபவியாமலதாய்தந்தைகளாகிய நாம் செத்துப் போகிறோமே யென்பதில் அதிகதுக்கம் இந்தப் பிரகாரம் புத்திரருண்டானவர்களுக்குச் சர்வ

தர்துக்கமேயன்றி அந்தப்புத்திரர்களாலிகலோகபரலோக சவுக்கியம் எள்ளளவுமில்லை.

இதனிஞ்ஞனபிராந்தியென்றுதன்றாய் விசாரித்துமுமுட்சுவானவர்கள்புத்திரகளத்திராதிகளிடத்திலிருக்கும்பிரியமோகப்பிரியத்தைச் சர்வாத்மனாய் விட்டுவிட்டு அருளே திருமேனியாகிய ஆசிரியர் முன்னிலையில்விவேகித்து சர்வசா ஆத்ம சொரூபமாகிய தன்னிடத்திற் பரமப் பிரீதியைத்தாச் சதா நிஷ்டனாயிருக்கவேண்டுமென்கிற வேதாந்தசித்தாந்தத்தைத் தெளிக்கவேவல்லனே அவனே மெஞ்ஞானியென்று சுருதிஸ்மிருதிஇதிகாச புராணங்களாதிகளிற்சொலலப்படுகின்றதுஇதிற் சம்சயமில்லை சித்தம்.

வேதாந்தவெதிருத்தமன்னனிருபகம்-முற்றிற்று.

---

நாற்பத்துநான்காவது.

## பிரியத்துவநிருபகம்

---

ச-ஙை. உலகத்திற்பிரியத்துவமானவேதென்னில்.

உ-ம். திரவியம் அந்தத்திரவியத்திலும் புத்திரனே பிரியம்.

ச-ஙை. அதெப்படியென்னில்.

உ-ம் புத்திரன் ஓர்அக்கிரமத்தைச்செய்ய அவனை ராஜன் தண்டனை பண்ணத்துடங்கினால் அதற்கு எவ்வளவு திரவியஞ்செலவானபோதிலுமுன் பின்பாராமற் செலவழித்து புத்திரனை விடுவிக்கிறபடியினால் திரவியத்திலும் புத்திரனே பிரியவஸ்துவாகும் இந்தப் புத்திரனிலுந் தனது சரீரமேபிரியம்.

ச-ஙை. அதெப்படியென்னில்.

உ-ம், புத்திரன்செய்தகுற்றங்கண்டு ராஜன் தகப்பனைப்பிடித்துத்தண்டிக்கத்துடங்கினால் புத்திரனைக்காட்டிக்கொடுத்து எனக்குமவனுக்குஞ் சம்பந்தமில்லையென்று தகப்பன் தப்பித்துக்கொள்ளுகிறபடியினால் புத்திரனிலுந்தன் சரீரமேபிரியமாகும் இந்தச்சரீரத்திலுமிந்திரியமேபிரியம்.

சங்கை, அதெப்படியென்னில்.

உ-ம், ஒருபுருஷன் ஒரு தகாத காரியஞ்செய்ய அதற்கு ராஜன் கண்களையும் மூக்குகளையும் அறுக்கத்தொடங்கினால் அப்போது தன அங்கத்திலே தாவது அறுக்கக்கொடுத்து இந்திரியங்களைத் தப்பித்துக்கொள்ளுகிறபடியினால் சரீரத்திலும் இந்திரியமே பிரியமாகும் இவ்விந்திரியத்திலும் பிராணனே பிரியம்,

சங்கை, அதெப்படியென்னில்

உ-ம், ஒருபுருஷன் குற்றஞ்செய்து அவனையரசன் பிராணசேதம் பண்ணத்தொடங்கினால் இந்திரியங்களையாவது கொடுத்துப்பிராணனைத் தப்பித்துக்கொள்ளுகிறபடியால் இந்திரியத்திலும்பிராணனே பிரியமாகும் இந்தப்பிராணனிலும் ஆத்மாவே பிரியம்

சங்கை, அதெப்படியென்னில்.

உ-ம் ஒருபுருடன் தான் தேவனாகவேண்டுமென்று பரலோகத்தையிச்சித்துக்கொண்டு அக்கினிப்பிரவேசம் பண்ணிப்பிராணனை விடுகிறபடியினால் பிராணனிலும் ஆத்மாவே பிரியமாகும்,

இந்தப்படி ஸ்ரீ சற்குருநமஸ்கிரானத்தில் நன்றாய் விசாரித்துப் புத்திரமித்திரகளத்திராதிதேகேந்திரிய பிராணாதிகளுந் துக்கசொரூபமென்றறிந்து அதுகளிடத்திலிருக்கிற பிரியாபிமானங்களை விட்டுவிட்டு நீங்காப்பிரியதத்துவமாகிய பரத்மாவே தானென்று அவ்வாத்மாவினிடத்திலெப்போதும பிரியம்வைத்திருக்கிறவனெவனோ அவனே சீவன்முத்தனென்று சுருதிஸ்மிருதி இதிகாசபுராணங்களாதிகளிற்சொல்லப்படுகின்றது இதிற்சம்சயமில்லை சித்தர்,

பிரியத்துவநிருபகம்-முற்றிற்று.

---

நாற்பத்தைந்தாவது.

## மகாவாக்கிய நிருபகம்.



சங்கை, சுருதியாதிகளில் மகாவாக்கியஜென்னியஞானமே ஞானமென்றும் மற்றஞானமெல்லாம் அஞ்ஞானமென்றுஞ் சொல்லுகிறபடியினால் மகாவாக்கியமாவதேதெனனில்,

உ-ம், கூர்மையான புத்திசாதகமிருந்தால் மோட்சலட்சுமியைவெளியிற்கூட்டலாம் உலகத்தில் யாருக்காகிலும் பிரயாசையில்லாமல் புழுதியிலமிழ்ந்துகிடக்கிறமாணிக்கமகப்பட்டால் அதைப்பதனம் பண்

சொல்லுகின்றவுபதேசக்கிரமவிதிப்படி தம்மை வந்தடுத்த சீடனது பக்குவத்தைத்தினைதினைபரிக்ஷித்து அதிதீவிரபக்குவனென்றறிந்து உத்தேசம் இலக்கணம் சோதனையோடுங் கூடியமகாவாக்கியத்தையனுக்கிரகஞ்செய்யும்படி திருவுளங்கொண்டு அவனதுசஞ்சிதகன்மமெல்லாம் அடியோடெரியும்படி ஆமைபோற்றிருவுள்ளத்திற்சிந்தித்து ஆகாமியகன்மமெல்லாநீங்கும்படி மீனைப்போற்கிருபாதிருஷ்டிவைத்து பிராரத்தகன்மமும்பிரமானந்தரசமாய் ரமிக்கும்படி பறவைபோல் அஸ்தமஸ்தகசையோகஞ்செய்து பஸ்மகவசமிட்டு விதிவிஷேதாதிதமாகியசாமவேத மகாவாக்கியார்த்தத்தையுபதேசஞ் செய்தருளினர்.

ச-கை, ஆனால் அத்தியாரோபமாவதேதென்னில்,

உ-ம், ரச்சுசுத்திகை ஸ்தாணுவாதியில்கிரமத்தி வில்லாத சர்ப்பரஜிதசோராதிகற்பிதம்போற் சத்ரூபப்பிரமத்திலில்லாத மாயாப்பிரபஞ்சகற்பிதமேஅத்தியாரோபம்.

ச-கை. அபவாதமாவதேதென்னில்.

உ-ம். இதுசர்ப்பமல்ல ரச்சுவே இதுரசிதமல்லசிளிஞ்சலே இதுசோரனலலஸ்தாணுவே யென்றறிவிப்பதுபோலு ஒருவிருட்சத்தில் இலை பூ பிஞ்சு காய்பழமபட்டை வேர் வேறிவோ கெம்புருசிகளாகிய இதுகள் வேறானாலும் காரணமாகியவித்து ஒன்றே யென்றறிவிப்பதுபோலும் இதுபிரபஞ்சமலல பிரமமேயென்றறிவிப்பது அபவாதமாகும்,

ச-கை. ஆனால் அதத்வாவிருத்திலட்சணையாவதேதென்னில்,

உ-ம்; தேகாதியனாத்மவர்க்கங்களையுத்தியினல்நேதிபண்ணிநின்ற ஆத்மனையறிவிப்பதே அத்துவாவிருத்திலட்சணை,

ச-கை. தடஸ்தலட்சணையாவதேதென்னில்,

உ-ம், விருட்சத்தின்மேல் சந்திரனிருப்பா னென்பதுபோலப்பூதாதிஜெகத்காரணங்கொண்டு ஆத்மனையறிவிப்பதே தடஸ்தலட்சணை,

ச-கை, சொரூபலட்சணை யாவதேதென்னில்

உ-ம், பிரகாசசொரூபனே சூரியனென்பதுபோல ஆத்மாவினிஜ சொரூபமறிவிப்பதே சொரூபலட்சணை யென்று சொல்லப்படும் இதவு

உ-ம், வேதபுருஷனுடைய நாபிக்குமேல்கழுத்துக்குக்கீழ்ப்பிரமலோகபரியந்தம் உபாசனகாண்டம்.

ச-கை, ஞானகாண்டமாவதேதென்னில்,

உ-ம். வேதபுருஷனுடைய கழுத்துக்குமேல் சிரசுபரியந்தம் ஞானகாண்டம் அந்தஞானகாண்டத்தில் இந்தத்தத்துவமசியென்னு மகாவாக்கியமானது நாலுவர்ணமும் மூன்றுபதமும்மூன்றுபதார்த்தமும் மூன்றுலட்சணையுமாகவிளங்கும்,

ச-கை, நாலுவர்ணமாவதேதென்னில்,

உ-ம், சத்தியம் ஞானம் அனந்தம்ஆனந்தம்என்பதேநாலுவர்ணம்,

ச-கை, மூன்றுபதமாவதேதென்னில்,

உ-ம், தத்பதம் துவம்பதம் அசிபதம்என்பதே மூன்றுபதம்

ச-கை, மூன்றுபதார்த்தமாவதேதென்னில்

உ-ம், அது நீ ஆனாய் என்பதே மூன்றுபதார்த்தம் இவற்றுள் அதுவென்பது பரம் நீயென்பது சீவன் ஆனாயென்பது சிவம்.

ச-கை, மூன்றுலட்சணையாவதேதென்னில்,

உ-ம், விட்டலட்சணை விடாதலட்சணை விட்டுவிடாதலட்சணை என்பதே மூன்றுலட்சணை இதற்குச்சங்கர்க்கவாக்கியம் விசிட்டவாக்கியம் அகண்டவாக்கியமென்று சொல்லப்படும் இப்படிசொல்லப்பட்டவேதாந்த சித்தாந்தத்திற்குத் தத்துவம் இருபத்தெட்டென்றுசொல்லுவார்கள் அசித்துருவமாகிய தத்துவம் இருபத்துநாலும் ஜெகமாகவும் சித்துருவமாகிய தத்துவம் நாலில்புருடன்காலபரம்வியோமம் ஆகியமூன்றும் சீவனாகவும்பரம் ஒன்றும் பரமாகவும் விளங்கும் இதுவுமல்லாமல் மேற்சொல்லிய சத்தியம்பரமாகவும் ஞானம் சீவனாகவும் அனந்தம் சராசரமாகவும் ஆனந்தம் சகலபுவனமாகவும்விளங்கும்,

நீயெனனும்பதத்திற்கு அபரோட்சமாகிய காரியவுபாதி(எ)அதுவென்னும் பதத்திற்குப்பரோட்சமாகிய காரணவுபாதி (எ)அவத்தை (௬) அபிமானி (௯) முக்கியவிலக்கியம் (உ) அசுத்த சுத்தம்(உ) இதுகளையறியுமிடத்துச் சிரவணமனனநிதித்தியாசனமாகிய மூவகையினுல்விளங்கப்படும்,

ச-கை. அதெப்படியென்னில்,

உ-ம், சற்குருசந்நிதானத்தில் வேதாந்தசாஸ்திரார்த்தங்களையையந்திரிபறக்கேட்டறிவது சிரவணமென்றும் அங்ஙனங்கேட்ட சிரவணத்தினுல உபாதியையன்னியப்படுத்தி அவத்தைபேதபதியாக்

திச்சொரூபநிச்சயஞ்செய்து, அதைமனத்திற்சிந்தித்துத் தரிபடுத்த மனனமெனவும் அங்ஙனமனனஞ்செய்தபொருளைச் சுவானுபூதியிற்காட்டப்படுவதே நிதித்தியாசனமெனவும் சொல்லப்படும் இந்தச்சிரவணாதிகளினால் தான் அந்தப்பொருள் விளங்கப்படும்,

சங்கை, அதெப்படியென்னில்,

உ-ம், சிரவணமானது காரியகாரணவுபாதிகளைநீக்கிச் சீவனிருபாதி தமென்னக்கேள்வியினாற்றெரிசிக்கப்படுவதும்

சங்கை, அஃதெவ்வாறென்னில்,

உ-ம், காரியவுபாதியென்பது சீவவுபாதி அதற்குவாக்கியம் சம்சர்க்க வாக்கியமெனறுசொல்லப்படும்,

சங்கை, அதெப்படியென்னில்,

உ-ம், மஞ்சாக்குரோசந்திகங்காயாம்கோஷப்பிரதிவசதி என்பது,

சங்கை, அதற்கர்த்தமேதென்னில்,

உ-ம், மஞ்சங்கூப்பிடுகிறதென்றும் கங்கைசத்திக்கிறதென்றுஞ் சொல்வது அப்படி சொல்லுமிடத்துமஞ்சம் சடம் அதுகூப்பிடுமாகூப்பிடவறியாது மஞ்சத்திலுளொருபுருஷனிருந்து கூப்பிட்டானென்றறியவேண்டியது, கங்கையானது ஜடம் அது சடமாதலால் கோஷிக்கவறியாது அதன்கரையிலிடைச்சேரியிருக்கிறதென்றுகொள்ளவேண்டியது, இதுபோலவுபாதிக்குஞ்சீவனேசாட்சியாயினின்று சேட்டிப்பிக்கிறானென்றறிய வேண்டியது இதுவிட்டலக்கணை,

சங்கை, காரணவுபாதியேதென்னில்,

உ-ம், காரணவுபாதியென்பது பரவுபாதி அதற்கு வாக்கியம்விசிட்டவாக்கியமென்றுசொல்லப்படும்,

சங்கை, அதெப்படியென்னில்,

உ-ம், சுரோணத்திஷ்டதிசுவேதோதாவதி என்பது,

சங்கை, அதற்கர்த்தமேதென்னில்,

உ-ம், ஒருசிவப்புக்குதிரையும் வெள்ளைப்பசுவுங் கண்டாயோவென்பது, அப்படிசொல்லுமிடத்து சிவப்புநிற்கிறது வெள்ளை போகிறதென்றால் சிவப்புநிறம்வேறுபட்டுக் குதிரையன்றித் தனியேயில்லாது வெள்ளைநிறம் வேறுபட்டுப்பசுவையன்றித்தனியேபோகாது ஆதலால் சிவப்புநிறமுள்ளகுதிரை நிற்கிறதென்றும் வெள்ளைநிறமுள்ளபசு போகிறதென்றும் கொள்ளவேண்டியது இது

சு-கை, இதுகளுக்கர்த்தமெப்படியென்னில்,

உ-ம், வாக்கியங்களுக்குக்காரணம்பதமும் பதார்த்தமுமாதலால்ப
சாமானியமாய் விசாரித்திருந்தபோதிலும் இன்னும் விசேஷமா
விசாரித்தறியவேண்டும்,

சு-கை, ஆனால் பதமும்பதார்த்தமுமாவதேதென்னில்

உ-ம், தொம்பதம் தத்பதம்அசிபதம் எனமூன்றுபதம், தொம்ப
தம் சீவன் தத்பதார்த்தம்ஈஸ்வரன் அசிபதார்த்தம் அயிக்கம்
வேபதார்த்தமென்றுசொல்லப்படும்

சு-கை, தொம்பதார்த்த பூதனானசீவசொரூபமேதென்னில,

உ-ம், அவித்தையும் அதிஷ்டானசைதன்னியமும் சைதன்யகற்
னஅபஞ்சீகிருதபூத காரியலிங்க சரீரமும் அதிற்பிரதிபிம்பித
பாசனும் சிதாபாச தர்மமான கிஞ்சிக்ஞத்வ கர்த்ருத்வ போ
வாதிகளுங்கூடிச்சீவசொரூபமென்று சொல்லப்படும்.

சு-கை, தத்பதார்த்தபூதனானபரசொரூபமேதென்னில்

உ-ம், மாயையும் அதிஷ்டானசைதன்யமும் அதிற்பிரதிபிம்பித்
ரனும் ஈஸ்வரதர்மமான சர்வஞ்ஞத்வாதிகுணங்களுங்கூடி
சொரூபமென்றுசொல்லப்படும்

சு-கை, அசிபதசொரூபமேதென்னில்,

உ-ம், கூடஸ்தனேபிரமம் பிரமமே கூடஸ்தனென்னும் அயிக்
தமாயறிவதே அசிபதசொரூபமென்றுசொல்லப்படும்.

சு-கை, ஆனால்கிஞ்சிக்ஞத்வாதி குணங்களுடன் கூடியிருக்கிற
னும்சர்வக்ஞத்வாதி குணங்களுடன்கூடியிருக்கிற ஈஸ்வ
அயிக்கமெப்படிகூடும் இப்படிவிரோதமான அர்த்தத்தைச்
னிலஎப்படி சொல்லுகின்றது இதுகளைச்சந்தேகவிபரீதமற
னுக்குப்போதித்தருளவேண்டுமென்னில்,

உ-ம், முன்சொல்லிய லட்சணாத்திரயங்களில விட்டலட்சணை
கர்லட்சணையிற் சொல்லுகிறோம் நீ சாவதானமாய்க்கேள்

சு-கை, அதெப்படியென்னில்

உ-ம், கெங்காதீரத்திலிருந்தொரு பிராமணன்வர அவனைக்
ஒருபிராமணன் சுவாமீ கெங்காதீரத்தில்விசேஷமென்ன
கேட்கஅந்தப் பிராமணன் கெங்காயாம் கோஷஇதியென்

சு-கை, அதற்குத்தாற்பரியமேதென்னில்,

உ-ம், கங்கையென்கிற பதத்திற்குப்பிரவாகம் அர்த்தமாகையினால் பிரவாகத்தி லிடைச்சேரியிருக்குமென்று கொள்ளப்படாது அப்படி கொள்ளுமிடத்துப்பிரத்தியட்ச விரோதமாயிருக்கும் ஆகலால் கெங்கைக்கர்த்தமான பிரவாகத்தைச் சர்வாத்மனாய்விட்டுவிட்டுஅப்பிரவாகத்தோடெங்கூடியிருந்த கரையினிடத்திலிடைச்சேரி யிருக்கிறதென்று கொள்ளுவதே தாற்பரியமாயிற்று

ச-கை, ஆனாலிக்கப்படியேமகாவாக்கியத்திலுஞ்சகர்லட்சணைசொல்லலாமாவெனனில்,

உ-ம், சொல்லப்படாது

ச-கை, அதேதெனனில்,

உ-ம், தொம்பதார்த்த பூதனான கூடஸ்தசைதன்னிய பரியந்தமும் விட்டுவிட்டால முமுட்சுக்கள் சொரூபமேயில்லாமற் போகின்றதுஅதனால்பிரத்தியட்ச விரோதம்வரும் ஆதலால்இந்த ஜகர்லட்சணங்கூடாது

ச-கை, ஆனாலந்த லட்சணைத்தினாலெந்தவாக்கியம பிரமத்தைப்போதிக்கின்றதெனனில்,

உ-ம், அன்னமயகோசமுதல் விஞ்ஞானமயகோச மட்டும் இந்தநாலு கோசமும் பரப்பிரமமென்கிற வாக்கியத்திற்குச் சடமானகோசங்கள் அதுகள்பிரமமல்லாதபடியினாலதுகளைவிட்டுவிட்டு அதுகளுக்கதிஷ்டானபூதமான சைதன்னியத்தினிடத்திலேயே தாற்பரியம்

ச-கை, ஆனால் அஜகர்லட்சணையாவதேதெனனில்

உ-ம், மஞ்சாக்குரோசந்தி யென்கிறவாக்கியத்தில் மஞ்சங்கூப்பிடுகிறதென்று அர்த்தமாகின்றது அந்தஅர்த்தத்தை யங்கீகரித்தால்பிரத்தியட்ச விரோதம்வரும் ஆதலால் மஞ்சத்தைவிடாமல் அதிலிருக்கும்புருஷன் கூப்பிடுகிறானென்று கொள்ளுகிறதேதாற்பரியம் இப்படிபோலவேதத்தில் சத்தியஞானமனந்தமென்னும் வாக்கியத்தில் ஆனந்தமயத்துடன் கூடியிருக்கிறஆத்மாவுக்குச் சச்சிதானந்தலட்சணத்தைவிடாமல் ஆனந்த மயகோசத்தைச் சொல்லுகின்றது.

ச-கை, ஆனாலிந்த அர்த்தத்தை மகாவாக்கியத்திலங்கீகரிக்கலாமேயெனனில்

உ-ம், அப்படியங்கீகரிக்கப்படாது

ச-கை, அதேதப்படியெனனில்

உ-ர்; கிஞ்சிஞ்ஞத்வாதிகுணங்களுடன் கூடியிருக்கிறதை தன்னிடமே சிலனை ஆகையினால்குண விசிஷ்டனான அவனுக்கு ஐக்கியஞ்சொல்லக் கூடாது ஆதலாலிந்த அஜகர்லட்சணையுங்கூடாது

சூ-கை, ஜகதஜகர்லட்சணையாவதேதென்னில்

உ-ம், சோயந்தேவதத்தகா என்கிறவாக்கியத்தில் கங்காதீரத்தில்அஞ்சாம்வருஷம தேவதத்தனைப் பார்த்தோம் அவனேயே இந்தக்காவேரிதீரத்தில் ஐம்பதாம் வருஷங்கண்டோமென்கிற விவகாரத்தில்அந்தத்தேசமும அந்தக்காலமும இந்தத்தேசமும்இந்தக்காலமும் ஆகியபுருஷனைவாச்சியார்த்தமென்றங்கீகரித்தோமானாலவெகுவிரோதமுண்டாகும்படியென்றால கங்கா தீரங்காவேரிதீரமாகாது காவேரிதீரங் கங்காதீரமாகாது அந்தக்காலமிந்தக்காலமாகாது இந்தக்கால மந்தக்காலமாகாது அதனாலபிரமாணாந்தரமான பிரத்தியட்சனுக்கு விரோதமாயிருக்கின்றது ஆதலால் அந்தத்தேசம்அந்தக்காலம்இந்தத்தேசம் இந்தக்காலமாகிய வாச்சியார்த்தத்தைவிட்டுவிட்டு லட்சியார்த்தபூதமானதேவதத்தனையறிந்துகொள்வதே தாற்பரியம்.

அதுபோலமகாவாக்கியத்தில்தற்பதவாச்சியார்த்தமான மாயைக்கும்மாயாப் பிரதிவிம்பனானஈஸ்வரனது சர்வக்ஞத்வாதி குணங்களுக்கும் தொம்பத வாச்சியார்த்தமான அவித்தைக்கும் அவித்தையாப்பிரதிவிம்பனான சிதாபாசனது கிஞ்சிக்ஞத்வாதி குணங்களுக்கும் அன்னியோன்னிய ஐக்கியம் அங்கீகரித்தால் பிரத்தியட்சவிரோதம்வரும்

ஆதலால விரோதமானமாயா சர்வக்ஞத்வாதி குணங்களும் அவித்தையாகிஞ் கிஞ்சிக்ஞத்வாதி குணங்களுமாகிய இருவகையுந்தள்ளிவிட்டு விம்பத்தோற்றவொடுக்கமும் விம்பப்பிரதி விம்பதோற்றவொடுக்கமும்அஞ்ஞானமும் அஞ்ஞானகாரியத் தோற்றவொடுக்கமுமறிவித்துலட்சியபூதமானசைதன்னிய மாத்திரத்தைப்பற்றிச் சச்சிதானந்தபிரமமேநீ-நீயேஅந்தச் சச்சிதானந்த பிரமமென்று மகாவாக்கியத்தில ஜகதஜகர்லட்சணையினால போதிக்கப்படுகின்றது.

ஆகையாலநீயேபிரமம் உன்னுடைய சித்தவிருத்தியில்நீயேயவதானித்துப்பார்க்கவேண்டும் இதிற்சம்சயமில்லை இவற்றுள்வாச்சியார்த்தம் இலட்சியார்த்தமென்னுமிருவகையில வாச்சியார்த்தமங்கீகரித்தாலங்கேயிரத்தியட்ச விரோதமாய்த் தோற்றுகின்றதே அங்கேலட்சியார்த்த மங்கீகரிக்கவேண்டும் ஆனபடியினால் மகாவாக்கியலட்சணைத்தினாலைக்கியம் போதிக்கப்படுகிறதென்று லட்சணையையங்கீகரிக்கத்தக்கது ஆயினுமிந்த மகாவாக்கியத்தைக்கிரமப்படி இன்னமொருபிரகாரமாய உனக்குப்புத்தியிலமையும்படி போதிக்கின்றோம்,

மனுஷசரீரத்தில் புத்திக்குச் சாட்சியாயிருதயகமலத்தில் அகமகமெ
ன்றுஸ்பூரித்துக்கொண்டிருக்கும்,

ச-ங்கை, ஆனால் பரிபூரணமாயிருக்கிற ஆத்மாவுக்குத் தேகசம்பந்தஞ்
சொல்லுகையினால் பரிச்சின்னத்துவம்வாராதோவென்னில்

உ-ம், சூட்சுமசரீரவிலட்சணமாயிருக்கிற படியினாலபரிச்சின்னத்வமா
கியபரிபூரணமென்பதிற்சம்சயமில்லை

ச-ங்கை, சூனியபூரணத்தைப்போலேயோவென்னில்,

உ-ம், சூனியபூரணம்போலன்று சுதாபூரணமே

ச-ங்கை, அதெப்படியென்னில்,

உ-ம், அகமென்னும்போது சைதன்னியம் அநுவிர்த்தசாமானைகயினாலக
மென்றுவிகாரஞ் சொல்லக்கூடாது அகங்காரஞ்சடமாகையாலிதுவு
ம் அகமென்று தோற்றமாட்டாது பதமோவென்றால்பாமாத்மபூகமா
னசைதன்னியமே அகங்காரத்துடன் கூடிக்கொண்டகமென்றுவிளங்
குகின்றது ஆனபடியினால்சடமான வ...சியத்தைத்தள்ளிச்சைதன்
யமாத்திரமே அகமென்கிறசப்ததிற்கிலட்சியார்த்தமென்று சொல்
லப்படும்,

ச-ங்கை, பிரமபதத்துக்கர்த்தமேதென்னில

உ-ம், சுதாவப்போதும்பூரணமாய் தனக்குமுந்தியொருவஸ்துவுங் காரண
மாயில்லாமல் தனக்குப்பிந்தியொருவஸ்துவுங்காரியமாயில்லாமல் த
னனிடத்திலொருவஸ்துவுமில்லாமல் தனக்கன்னியமாய் ஒருவஸ்து
வுமில்லாமல்யாதொரு சைதன்னியம்ஏகமாயிருக்கின்றதோ அதுதா
ன்பிரமபதத்துக்கு லட்சியார்த்தம்

ச-ங்கை, அஸ்மியென்கிறபதத்திற்கர்த்தமேதென்னில்,

உ-ம், அவ்விருபதத்தின் லட்சியார்த்தவைக்கியமே அஸ்மியென்னும்
பதார்த்தமென்றுசுருதியிற்சொல்லப்படுகின்றது,

ச-ங்கை, சாமவேதத்தில் தத்துவமசி வாக்கியத்தில் தத்பதத்திற்கர்த்த
மேதென்னில்,

உ-ம், ஏகமேவாத்வைதம்பிரமமென்று சொல்லப்படும்,

ச-ங்கை, ஏகமென்றால் போதாதோ ஏகமேவாத்வைதம் பிரமமென்று
சொல்லுவானேனென்னில்

உ-ம், ஏகமென்பதிற் சுசாதி சூனியமும்ஏவவென்பதில்விசாதி சூனி
யமும் அத்வைதமென்பதில் சுவகத பேதசூனியமும் விளங்குகி
ன்றது அதனால் அப்படி சொல்லவேண்டிற்று,

ச-ங்கை, உலகபதார்த்தங்களிற் சுசாதிகவிசாதிகசுவகதபேதங்கள் பிரத்
யக்ஷமாக விளங்கப்படுகின்றது எப்படியென்றால் விருட்சங்களெ
ல்லா மேகமாயிருந்தாலும் ஆலமரம்அரசமரம் எனகிறபேத மிருக்கி
றபடியால் சுசாதிபேதமும்-பாஷாணாதிகள் விருட்சங்க...

னியமாயிருக்கிறபடியால் விசாதிபேதமும்-பத்திரபுஷ்ப பலாதிகள் விருட்சத்திற்குப பேதமாய்த்தோற்றுகிறபடியால் சுவகதபேதமுங் கலவேடாம-அதுபோல ஆத்மாவிலும் அந்தப்பேதங்கள் கண்டோம, எப்படியென்றால் ஒருவஸ்துவில் சீவனென்றும் ஈஸ்வரனென்றும் பேதமிருக்கிறபடியால் சுசாதிபேதமும் சீவேஸ்வரரைப் பார்க்கிலும் சடப்பிரபஞ்சம் அன்னியமாயிருக்கிறபடியினால் விசாதிபேதமும் சச்சிதானந்த குணங்களிருக்கிறபடியால் சுவகதபேதமுங் கண்டோமேயென்னில

உ-ம், ஒருவன்றுதானேயபின்னமாய் நிமித்தவுபாதானகாரணமாயிருந்துகொண்டு தான்தானே சிருஷ்டித்துத்தான்தானே பிரவேசித்ததென்று சுருதிசொல்லுகிற படியினால் சீவேஸ்வரபேதமாகிய சுசாதிபேதமில்லை-சீவேஸ்வரரைப் பார்க்கிலுஞ் சடப்பிரபஞ்சத்திற்குச் சுதாசத்தையில்லாதபடியினால் சுத்திகாரசிதம் சொப்பனப் பிரபஞ்சம் ரச்சுசர்ப்ப முதலானதுகளைப்போல மித்தையாபூதமாய் வாதிக்கப்படுகின்றது ஆகலால் விசாதிபேதமில்லை ஆத்மாவுக்குச் சச்சிதானந்தமென்னுஞ் சொரூபமாயிருக்கிறபடியினால் சுவகதபேதமில்லை ஆனபடியினாலாத்மா சுசாதிசுவகதவிசாதிபேதரகிதசொரூபமென்று தத்பதத்துக்கர்த்தமாயிற்று,

ச-கை, இனி-தொம்பதத்திற்கர்த்தமேதென்னில்

உ-ம், தேகேந்திரியாதிகளுக்கெல்லா மதீதமாய் சிரவணமனனநிதித்தியாசனத்துடன் கூடியிருக்கிற பிரத்தியேகாதய சைதன்னியமே தொம்பதத்திற்கர்த்தமென்றுசொல்லப்படும்,

ச-கை, அசிபதத்திற்கர்த்தமேதென்னில்

உ-ம், அவ்விருபதத்தின் லட்சியார்த்த வயிக்கியமே அசியென்னும்பதத்திற் கர்த்தமென்றுசொல்லப்படும

ச-கை, அதர்வணவேதத்தில் அயமாத்மாப்பிரமமென்னும் வாக்கியத்தில் அயமென்னும்பதத்திற்கர்த்தமேதென்னில்,

உ-ம், ஆத்மா அபரோட்சசொரூபமென்றுசொல்லப்படுவது,

ச-கை-ஆத்மா அபரோட்சசொரூபமானால் கடாதிகளைப்போல் திரிசியமாய்க் காணப்பட்டுச் சடமாயிற்றேயென்னில்,

உ-ம், திரிசயமாய்க்காணப்பட்டுச் சடமாயிருக்கிறதுமல்ல,

ச-கை, சொர்க்காதிகளைப்போற் பரோட்சமாய்க் காணப்படாததோவென்னில்

உ-ம், சொர்க்காதிகளைப்போற் பரோட்சமாய்க் காணப்படாததுமல்ல ஆகலால் அந்தநித்தியா பரோட்சசொப்பிரகாச சொரூபத்

தைதமறிவாகவேயறியவேண்டும்.

ச-ஙை-ஆத்மாவென்னும்பதத்திற்கர்த்தமேதென்னில்.

உ-ம், அகங்காரமுதல் ஸ்தூலதேகபரியந்தமான காரியகாரண சங்காதத்துக்கெல்லாமதிஷ்டானமாய் இருதயகமலத்தில அகமகமென்று ஸ்புரித்துக்கொண்டிருக்கிற பிரத்தியகாத்மசைதன்னியமேயாத்மாவென்னும்பதத்திற்கர்த்தம்

ச-ஙை-ஆனால் பிரமபதத்திற்கர்த்தமேதென்னில்,

உ-ம்- இரிசியமாய்க்காணப்படுகிற ஜெகத்துக்கதிஷ்டானமாயிருக்கிறபடியினால் சத்துவமாயிருக்கிற பரமாத்மசைதன்னியமேபிரமமென்னும் பதத்திற்கர்த்தமான லட்சியார்த்தம் அங்ஙனமான வஸ்துவெதுவோ அதுவேசித்தியாபரோட்சமெனப்பிரகாசமாயிருக்கிறபிரத்தியகாத்மசைதன்னிய மென்றுசுருதியிற் சொல்லப்படுகின்றது மேலும் முதல் வாக்கியமுபதேசஞானமெனவுமிரண்டாம் வாக்கியஞ்சாட்சிஞானமென்றும் மூன்றும்வாக்கியஞ்சிவஞானமென்றும்நான்காம் வாக்கியம்பிரமஞானமென்றுஞ்சொல்லப்படும்.

ச-ஙை- இப்படிவாக்கியங்களொன்றுக்கொன்று பேதம்வருவானேனென்னில்,

உ-ம், பேதமல்ல ஆசிரியர்சீடனுக்குப்பிரஞ்ஞானம் பிரமமென்றுபதேசிக்கச் சீடனும்பிரஞ்ஞானமாகிய நானென்றுவினவ அகமென்றிருக்கிறதேயதுவென்றுஇரண்டாம் வாக்கியத்தையுபதேசிக்க, சீடனும அஹங்காரமானஅகத்திலெத்தனையென்றுவினவ; ஜீவேஸ்வரர்களுக்குப் பாற்பட்டபிரமமென்றுமூன்றாம் வாக்கியத்தையுபதேசிக்க, சீடனும் சுவாமி ஜீவேஸ்வரர்களும் உபாதியுள்ளதுபட்டபோதே அவைதமாக்குதேயென்றுவினவ அன்னியமானதுவைதமாகியபிரமத்தைத்தவிரவில்லையென்று நான்காம் வாக்கியத்தையுபதேசித்தருளினார். ஆதலால்சச்சிதானந்த அத்வைதசொருபமே நீ நீயல்லவென்று காண்குவாய்முந்நான்குஆசிரமமும் சட்பாவனையும் சட்கோசமும் சட்கோடியும் சட்ரமியும் சுகதுக்கங்கர்த்திவ்வியமும் ஆகாமியசஞ்சிதப்பிராரத்தங்களுமுனக்குக்காலத்திரயத்திலுமில்லையென்றறிக.

ச-ஙை, ஆனால் முன்போலவேநாமரூபபதார்த்தங்கள்தோற்றப்படுகின்றதேயென்னில்,

உ-ம், அப்படிதோற்றுதலைக்கொருபாயஞ் சொல்லுகிறேன் அஃதென்னவென்றுகேட்பாயாகில் எதினால் பதார்த்த ரூபங்கள்தோற்றப்படுகின்றதோ அதைப்பரிட்சித்தால் ஒருபதார்த்தமுமில்லாமற்போம்ஆதலால் எக்காலமும் நீ நிராலம்ப சொருபத்தில் நிருவிகல்பமாயிருப்பாயாகில் அகண்டசமரசசுகசொருபமான ஆத்மாவாவாயென்றுசொன்னது சிரசில் தமது திவ்வியாஸ்தத்தை வைத்துப் பூரணானுக்கிரகஞ் செய்தருளினார்.

அப்படி தரிசனபரிசனங்களினால் ஸ்ரீசற்குருவானவர் சம்சயமறவனுக்கிரகம்பண்ணினிர்மலப்பாட்டையைக்காட்டிவிட்டபடியினாலே அந்தச்சீடனாகிய திருஷ்டியைமறந்து அந்தர்முகப்பட்டுஸ்தூலசூட்சுமகாரண சரீரவுபாதிகளையெல்லாம்விட்டுச் சொரூபாகாரப் பட்டமாத்திரத்திலே ஞான சத்திபிரவேசமானான் அதனாலே அஞ்ஞான சத்திநாசமானான் அதனால் சாத்திகபாவம்பிறந்தது அதனாலே பதார்த்தவெதிருத்தமில்லாமற்போச்சுது அதனாலேஞானசாம்பிராஜ்யபட்டம்வந்தது அதனாலானந்த தீர்த்தமெழுந்து சீடனுடையமனமுழுகிக்கொண்டேபோம்போது விவேகமென்கிற தீச்சுக்காரன் முழுகிப்போனான் ஆங்காரமாகியகர்த்தத்வவிருட்சம் வேரோடேபேர்ந்துபோச்சுது ஆசையென்கிறபட்சிக்கூடு கலைந்தது அப்போது சுவானுபூதியாகியவாமனையில் முத்திகாந்தையை யாலிங்கனம் பண்ணிக்கொண்டு தன்னையிழந்து விட்டான் இந்திரியங்களெல்லாந் தன்னுடையஆகாரத்திற்பிரவர்த்திக்குங்கொண்டிருந்தது.

அப்பால் இத்தன்மையவான சுவானுபவம்பெற்ற சீடன் ஸ்ரீ சற்குருநாதனுடையபாதத்தில் விழுந்து நமஸ்கரித்தெழுந்து நின்று ஓய் அஞ்ஞானக்கருணாசமுத்திரமானகுருசுவாமீ அநாதிகாலமே என்சொரூபத்தையிழந்து என்னையொன்றிருக்கொண்டு மூடனாயிருந்தேன் அப்படியிருக்க என்னையெடுத்துப்பிடித்து என்சொரூபத்தையுள்ளபடிகரதலாமலகம்போல் சம்சயமறக்காட்டிக்கொடுத்த தேவரீருடைய பெருதவிக்கு அடியேன்செய்யுங்கைம்மாறு ஒன்றுமில்லையென் றுமது திருபாததரிசனமாத்திரத்தினால் அகங்காரமோகநீங்கித் கிருதகிருத்தியனானேனென்று பலவாறாகத்துதித்து எப்போதும் பேர்சமரசானந்த சுவானுபூதிநிலையில் ரமித்திருந்தான்.

ஆதலால் இந்தமகாவாக்கியத்தினர்த்தத்தை ஸ்ரீ சற்குருசந்நிதானத்தில் சந்தேகவிபரீதமற விசாரித்தறிந்தவனே சீவன்முத்தன் அவனே பரமுத்தன் அவனேபிரமசொரூபம் என்று சொல்லப்படும் மேலும் வேதத்தையும் பிராமணர்களையும் பிரமதேவனையும் பிரம்மமென்றுசொல்லக்கூடாது ஏனென்றால் காணப்பட்டதெல்லாம் அழிந்துபோகிறபடியினால் சர்வகாரணமான நிர்க்குணப்பிரம வஸ்துவைமாத்திரம் பிரமமென்றுசொல்லவேண்டியதென்று சகல சுருதிஸ்மிருதி யிதிகாசபுராணங்களிற் சொல்லப்படுகின்றது இதிற்சம்சயமில்லை சித்தம்.

மகாவாக்கியநிரூபகம்-முற்றிற்று-ஆறு பிரகரணங்கள் (சுகு)

வாசகதேவமணம்-முற்றுப்பெற்றது.





சிவமயம்

# பிரகரண அட்டவணை


| | பிரகரண அட்டவணை | பக்கம் |
|---|---|---|
| 1 | அத்தியாரோபநிருபகம் | 1 |
| 2 | அபவாதநிருபகம் | 6 |
| 3 | சாதனசதுஷ்டயநிருபகம் | 7 |
| 4 | உபயபதார்த்தநிருபகம் | 11 |
| 5 | துக்காரோபநிருபகம் | 15 |
| 6 | கர்மத்திரயநிருபகம் | 23 |
| 7 | ராகத்துவேஷநிருபகம் | 32 |
| 8 | ஆத்மானாத்மவிசாரநிருபகம் | 40 |
| 9 | சரீரத்திரயவிலட்சணநிருபகம் | 46 |
| 10 | அவஸ்தாத்திரயசாட்சித்வநிருபகம் | 63 |
| 11 | பஞ்சகோசவிலட்சணநிருபகம் | 71 |
| 12 | சச்சிதானந்தலட்சணநிருபகம் | 79 |
| 13 | அகண்டத்வநிருபகம் | 87 |
| 14 | அஞ்ஞானசொருபநிருபகம் | 94 |
| 15 | ஞானாஞ்ஞானசொருபநிருபகம் | 104 |
| 16 | சரீரத்திரயநிருபகம் | 118 |
| 17 | தாபத்திரயநிருபகம் | 141 |
| 18 | பிரதிபந்தத்திரயநிருபகம் | 142 |
| 19 | நவவிதசமாதிநிருபகம் | 146 |
| 20 | வைராக்கியாதிநிருபகம் | 146 |
| 21 | வாசனாத்திரயநிருபகம் | 1[illegible]9 |
| 22 | அகாரவாசனாப்பிரதிபந்தநிருபகம் | 153 |
| 23 | சிரவணாதித்திரயநிருபகம் | 156 |
| 24 | பாவனாத்திரயநிருபகம் | 157 |
| 25 | ஷட்விதலிங்கதாற்பரியநிருபகம் | 162 |
| 26 | நாதானுவநிருபகம் | 164 |
| 27 | பிரமசரியநிருபகம் | 164 |
| 28 | சத்தவிதசைதன்யநிருபகம் | 166 |
| 29 | பஞ்சப்பிரளயநிருபகம் | 167 |
| 30 | பிராரத்தத்திரயநிருபகம் | 168 |
| 31 | சஞ்சிதாதிகன்மத்திரயநிருபகம் | 170 |
| 32 | தார்க்கிகாதிபேதநிருபகம் | 173 |
| 33 | பஞ்சவிதமுத்திநிருபகம் | 175 |

| | | |
|---|---|---|
| 34 | பிரமவித்காதிசதுஷ்டயநிரூபகம் | 176 |
| 35 | சத்தாவஸ்தைநிரூபகம் | 178 |
| 36 | தாதாத்மியத்திரயநிரூபகம் | 181 |
| 37 | ஜீவேஸ்வரஸ்வரூபநிரூபகம் | 185 |
| 38 | சித்தநிரோதநிரூபகம் | 189 |
| 39 | தேகாத்மலக்ஷணநிரூபகம் | 191 |
| 40 | ஆத்மானாத்மநிரூபகம் | 192 |
| 41 | அவஸ்தாதிரயநிரூபகம் | 196 |
| 42 | பிரளயசொரூபநிரூபகம் | 198 |
| 43 | வேதாந்தவெதிருத்தமணணநிரூபகம் | 199 |
| 44 | பிரியத்வநிரூபகம் | 201 |
| 45 | மகாவாக்கியநிரூபகம் | 202 |

ஆக பிரகரணங்கள் (45)


